உ

குருபாதம்

# சிவஞான சித்தியார்

## சுபக்கம்

## (உரைநடையுடன்)


ஸ்ரீ அருணந்திதேவ நாயனார்

தருமையாதீனம்

2015

வெளியீடு எண் : 534

உ

குருபாதம்

# சிவஞான சித்தியார்

**சுபக்கம்**

(உரைநடையுடன்)

இந்நூல்
திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்
26 ஆவது குருமகாசந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**
திருவுளப்பாங்கின்வண்ணம்

25.08.2015 செவ்வாய்க்கிழமையன்று
ஆவணிமூல விழா மலராக

"ஞானசம்பந்தம் பதிப்பகத்தில்"
வெளியிடப்பெற்றது.



தருமையாதீனம்
25-8-2015

முதற்பதிப்பு : 1962
இரண்டாம் பதிப்பு : 1981
மூன்றாம் பதிப்பு : 2015

அடக்க விலை : 45.00

## மெய்கண்ட நூல்கள்

உந்தி களிறோ டுயர்போதம் சித்தியார்
பிந்திருபா உண்மை பிரகாசம் - வந்தவருள்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்பம் உற்று.

புத்தகம் வேண்டுவோர் [illegible]
தொண்டை மண்டல [illegible] திருக்கூட்டம்
சென்னை
செல்: 9840819439

---

பாரதி டிஜிட்டல் பிரிண்டர்ஸ்
மயிலாடுதுறை போன்: 220640

தருமை ஆதீன ஸ்தாபகராம் முதற்குரவர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

சிவமயம்

# முன்னுரை

மனிதன் தன் அறிவிற்கும் உணர்விற்கும் எட்டாத பல அனுபவ நிகழ்வுகளைக் கண்டு, அவற்றிற்குரிய காரணங்களையும் விளைவுகளையும் ஆராய்ந்து அவற்றின் பயணகத் தம்மைத் தாம் உருவாக்கிக் கொண்டு உயர் நிலை அடையும் முயற்சியே மெய்ஞ்ஞான வளர்ச்சி யாகும். மெய் - உண்மை, ஞானம் - அறிவு. அதாவது உண்மை ஞானம் என்று கூறுவர்.

இம்மெஞ்ஞானம் பற்றி பல சமயங்களும் பல கருத்தைக் கூறி வந்த போது அக்கருத்துக்களை தர்க்க முறையில் ஆராய்ந்து அறிவிற்கும் நடைமுறைக்கும் பொருந்த ஒரு முடிந்தமுடிபான கொள்கையைக் கொண்டதாக அமைந்ததே சைவ சித்தாந்தம்.

சைவ சித்தாந்த கொள்கைகளை வரையறுத்து விளக்க எழுந்தனவே சித்தாந்த சாத்திரங்கள்.

இவற்றுள் மெய்கண்டார் அருளிய சிவஞான போதமே சாத்திர முதல் நூல் எனப் போற்றப்படுகிறது. சிவஞான போதத்தின் பொருளை விரித்து கூறும் வழிநூலே சிவஞான சித்தியார். சித்தியார் சிவஞான போதத்திற்குச் செய்யுளால் அமைந்த பாடியம் எனலாம்.

இச்சிவஞான சித்தியார் சாத்திர கருத்துக்களை அனைவரும் உணருமாறு எளிமையாகவும் விரிவாகவும் சைவாகமப் பொருள்கள் பலவற்றையும் தந்துரைத்து அவற்றிற்கு விளக்கமாகவும் அமைந்துள்ளது. இது பற்றியே சிவத்திற்குமேல் தெய்வம் இல்லை; சித்திக்கு மேல் நூல் இல்லை என்ற ஒரு பழமொழி வழங்கி வருகிறது. ஆகவே சித்தாந்தத்தை உணர்வோர்

சிவஞான சித்தியாரைத் தவறாது ஓதியுணர்தல் வேண்டும்.

இது பரபக்கம், சுபக்கம் என்னும் இருபெரும் பிரிவாய் அமைந்துள்ளது. இரண்டையும் இருவேறு நூல்கள் என்று சொல்லலாம். இதன் பரபக்கம் பிற சமயங்களின் பொருளை அவை கூறுமாறே கூறி அவற்றை அவ்விடத்தே சித்தாந்தக் கருத்துகலால் மறுக்கின்றது. அதனால் பரபக்கம் முழுதும் மதமும் மறுதலையுமாய் அமைந்துள்ளது. சுபக்கம் சிவஞான போதத்தின் ஒவ்வொரு சூத்திரப் பொருளையும் ஒவ்வொரு அத்தியாயமாக வைத்து அதன் போக்கிலேயே சித்தாந்தத்தை தடை விடைகளால் விளக்குகின்றது.

இச்சிவஞான சித்தியே தருமை ஆதீனத்தின் வெளியீடாக அமைந்துள்ளது. இந்நூற் பொருளைத் தருமை ஆதீனம் உலகிற்குப் பல்லாற்றானும் உணர்த்தி வருகின்றது.

சிவஞானசித்தியார் சுபக்கம் உரையுடன் கூடிய இந்நூல் தருமையாதீனம் 26ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் அருள்ஆணையின்படி மூன்றாம் பதிப்பாக ஆவணி மூல விழாவில் (25.08.2015 செவ்வாய்க்கிழமை) ஞானசம்பந்த பதிப்பக வெளி யீடாக வெளிவருகிறது. அன்பர்கள் இந்நூலை பெற்று சமய உண்மைகளைக் கற்றுணர்ந்து உய்தி பெறுவார் களாக.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்
அருளாணைப்படி,
**ஸ்ரீமத் திருஞானசம்பந்தத் தம்பிரான்**
கட்டளை விசாரனை,
ஸ்ரீ தியாகராஜ சுவாமி தேவஸ்தானம், திருக்குவளை

தருமையாதீனம்
22-8-2015

உ

சிவமயம்

# இரண்டாம் பதிப்பின் முன்னுரை

மெய்கண்டார் அருளிய சிவஞானபோதத்தின் வழி நூலாய் விளங்குவது சிவஞான சித்தியார். சிவஞான போதம் என்பதற்குச் சிவஞானத்தைப் போதிப்பது என்றும், சிவஞானசித்தி என்பதற்கு அச் சிவஞானத்தைச் சிந்திக்கச்செய்வது என்றும் பொருளாகும். சைவ சித்தாந்த நூல்களில் தலைமணி நூலாக விளங்கும் சிவஞானபோதப் பொருளை யாவரும் அறிந்து பயனுறுமாறு இனிது விளக்குதலின் சிவஞான போதத்தைத் தொகைநூல் என்றும் இந்நூலை விரிநூல் என்றும் கூறுவர். ஏனைய சாத்திரங்கள் வகை நூல்களாக விளங்குவனவாம். சிவத்துக்கு மேல் தெய்வம் இல்லை; சித்திக்கு மேல் நூல் இல்லை என்ற பழமொழி இந்நூலின் பெருமையை உணர்த்தும். ஆதி குருமூர்த்தி களாகிய ஸ்ரீ குருஞானசம்பந்தர்,

**"ஆறாறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும்**
**நீறாக முத்திநிலை நிற்போர்க்குப் - பேறாகும்**
***பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியிற் சித்தியிலே**
**ஓர்விருத்தப் பாதிபோ தும்"**

---

*சிவஞானசித்தியார் எட்டாம் சூத்திரத்திலுள்ள அறியாமை அறிவகற்றி என்னும் பாடலை இத்தொடர் குறிப்பிடுகிறது என்பது மரபு.

என்று அருளிச்செய்கிறார். பாதிவிருத்தத்தால் இப்பார் விருத்தமாக உண்மை, சாதித்தார் பொன்னடியைச் சாரும் நாள் எந்நாளோ என உரைப்பார் தாயுமானவர். தமிழ் மொழியில் மேலான நூல்களை எடுத்துத் தொகுத்துக் கூறும் வெண்பா ஒன்றுண்டு.

**"வள்ளுவர்நூல் அன்பர்மொழி வாசகம்தொல் காப்பியமே**
**தெள்ளுபரி மேலழகன் செய்தஉரை - ஒள்ளிய சீர்த்**
**தொண்டர் புராணம் தொகுசித்தி ஓராறும்**
**தண்டமிழின் மேலாம் தரம்"**

என்பதுதான் அப்பாடல். இவற்றால் தமிழ் மக்களின் தலையாய சமய தத்துவங்களை விளக்கும் இந்நூல் அறிவுடைப் பெருமக்களால் சிறந்தநூலாகப் போற்றப்பெற்று வருவதை உணரலாம்.

சிவஞானசித்தியார் பரபக்கம், சுபக்கம் என இரு பிரிவுகளை உடையது. பரபக்கம் - உலகாயதம் முதலிய பிறசமயக் கொள்கைகளை எடுத்துக்கூறி மறுப்பது. சுபக்கம் - நமது சமயக் கொள்கைகளை நிலைநாட்டிக் கூறுவது. பரபக்கம் 301 பாடல்களையும், சுபக்கம் 328 பாடல்களையும் கொண்டுள்ளது.

சிவஞானபோத அமைப்புப்போல இந்நூலாகிய சுபக்கம் பிரமாண இயல், இலக்கண இயல், சாதன இயல், பயனியல் என்ற நான்கு பகுப்புக்களோடு அமைந்து உள்ளது. ஒவ்வொரு சூத்திரமும் எடுத்துக்கொண்ட பொருள்வகைகட்கு ஏற்ப அதிகரணங்களாக வகுத்து உரைக்கப் பெற்றுள்ளது.

திருக்கோவையார், திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார் போல இந்நூலும் சிவஞான சித்தியார் என வழங்குகிறது.

சித்தாந்தசாத்திரங்கள் பதினான்கையும் சுருக்கமாக உரைநடையில் கற்றுணர, திரு.கா. சுப்பிரமணியப் பிள்ளை எம்.ஏ., எம்.எல்., அவர்கள் மெய்கண்ட நூல்கள் உரை நடை என்ற பெயரில் எழுதி வெளியிட்டு அதனை நமது ஆதீனத்திற்கு உரிமையாக்கியுள்ளார். அந்நூல்கள் தனித் தனியே ஆதீன வெளியீடுகளாக அவ்வப்போது வெளியிடப் பட்டுள்ளன. சிவஞானசித்தியார் சுபக்கம் உரை நடை ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமணி அவர்களின் அருளாட்சிக் காலத்தில் நிகழ்ந்த 1962 ஆவணிமூல விழா நாளன்று மூல பாடத்துடன் முதற் பதிப்பாக வெளியிடப்பட்டது.

இதுபோது இந்நூல் தருமையாதீனம் 26வது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் அருளாணைப்படி இரண்டாம் பதிப்பாக ஆவணிமூல விழாவன்று (8-9-81) ஞானசம்பந்தம் பதிப்பக வெளியீடாக வெளிவந்தது.

அன்பர்கள் இந்நூலைப் பெற்றுக் கற்றுச் சமய உண்மைகளை உணர்ந்து உய்தி பெறுவார்களாக.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்
அருளாணைப்படி,
வித்துவான்.இராமலிங்கத் தம்பிரான்.

தருமையாதீனம்
6-9-1981

--------

# முதற்பதிப்பின் முன்னுரை

தண்டமிழ் மொழியில் உள்ள பல துறை நூல்களில் ஒவ்வொரு துறையிலும் தலைசிறந்த நூல் ஒன்றனை எடுத்துத் தொகுத்து மொழியும் பழைய வெண்பா ஒன்று, தத்துவத் துறையிற் சிறந்த நூலாகச் சிவஞான சித்தி யாரைக் கூறுகின்றது. 'சிவத்திற்குமேல் தெய்வம் இல்லை ; சித்திக்குமேல் நூல் இல்லை' என்பது பழமொழி. இவற்றா லெல்லாம் சிவஞான சித்தி நூலின் தனிப்பெருமை இனிது விளங்கும்.

இச் சிவஞான சித்தியே, தருமை ஆதீனத்தின் தனி முதற் சிறப்பு நூல். இதனை, "பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியிற் சித்தியிலே - ஓர் விருத்தப் பாதிபோ தும்" என்னும், இவ்வாதீன முதலாசிரியர் திருமொழியால் நன்குணரலாம். இந்நூற் பொருளைத் தருமை ஆதீனம் உலகிற்குப் பல்லாற்றானும் உணர்த்திவருகின்றது.

இதுபோழ்து இதன் சுபக்கம், 25 ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் அருளாணைப் படி, திரு.கா.சுப்பிரமணிய பிள்ளை M.A., M.L., அவர்களது உரைநடையை மூலபாடங்களுடன் சேர்த்து அழகிய முறையில் அச்சிட்டு, இவ்வாதீன வெளியீடாக, ஆவணி மூலத் திருநாளன்று வெளியிடப்பெறுகின்றது.

இதனைத் தக்க முறையில் பதிப்பிக்கும் பேற்றினை அடியேனுக்கு வழங்கியருளிய ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி யவர்களது திருவடி மலர்கட்கு, அடியேனது மனமொழி மெய்களாலாகிய வணக்கங்கள் உரிய வாகின்றன. இப் பதிப்பினைத் தமிழுலகமும் சைவ உலகமும் பெற்றுப் பயனடைவனவாக.

இங்ஙனம்,
ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமகாசந்நிதானமவர்கள்
அருளாணைப்படி,

தருமையாதீனம்,
8-9-1962.

அடியேன் சி.அருணைவடிவேலு முதலியார்,
பேராசிரியர், பல்கலைக் கல்லூரி.



தருமை ஆதீனம் 26ஆவது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

உ

குருபாதம்

தருமையாதீனத்தை நிறுவியருளிய

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வரலாறு

---------

**சீரணியும் நுதலின்விழி மழுமான் நாகம்**
**திருந்தும்எரி பொருந்துவிடம் தெரிந்திடாமல்**
**தாரணி அன்பரைஆள அவர்போல் வந்த**
**சைவசிகாமணி எவர்க்கும் தலைவன் எங்கோன்**
**காரணியும் நெடியபொழிற் கமலை வேந்தன்**
**கருணைமழை பொழியும்இரு கடைக்க ணாளன்**
**பாரணியும் ஞானசம் பந்தன் எந்தை**
**பரமன்இரு சரணமலர் பரவி வாழ்வாம்.**

**- ஸ்ரீ சம்பந்தசரணாலயர்.**

ஸ்ரீ வில்லிபுத்தூரில் கார்காத்த வேளாளர் குலத்தில் சுப்பிரமணியப்பிள்ளைக்கும் மீனாட்சியம்மைக்கும் அருந்தவ மகனாக அவதரித்தார் ஸ்ரீ குருஞானசம்பந்தர். மதுரையம்பதிக்குத் தம் பெற்றோருடன் சென்று குலதெய்வமாகிய ஸ்ரீ சொக்கநாதரை வழிபட்டார். திருவருளால் பொற்றாமரைக் குளத்தின் ஈசான மூலையில் பெட்டகக்கோயிலுடன் ஸ்ரீ சொக்கநாதர் கண்ணுக்கினிய பொருளாகக் கைவரப் பெற்றார். சொக்கேசன் அருளால் திருவாரூர் சென்று ஸ்ரீஞானப் பிரகாசதேசிகரை வணங்கிச் சிவஞானோபதேசம் பெற்றார். சொக்கநாதர் பூஜையும் எழுந்தருளச்செய்து

கொடுக்கப் பெற்றார். குருவாணையின்படியே தருமபுரத்தில் அமர்ந்து பக்குவான்மாக்களுக்கு ஞானோபதேசம் செய்து சைவ சித்தாந்தத்தை எங்கும் பரவச்செய்தார். தமது ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீ சொக்கநாதப் பெருமான் மீது சொக்கநாத வெண்பா பாடித்துதித்தார். சிவபோகசாரம், முத்தி நிச்சயம், சொக்கநாதக் கலித்துறை, ஞானப்பிரகாச மாலை, சோடசகலாப் பிராசாதசட்கம், திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல், நவரத்தினமாலை ஆகிய நூல்களையும் அருளிச்செய்தார்.

இவ்வாறு பல்லாண்டுக்காலம் ஞான அரசாட்சி புரிந்து சிவலிங்கத்திருவுருவின்கீழ் ஜீவசமாதி கூடினார் ஸ்ரீகுருஞான சம்பந்தர். அவர் ஜீவசமாதி கூடிய குருமூர்த்தமே தற்பொழுது ஸ்ரீ ஞானாம்பிகை உடனாகிய ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயிலாக விளங்கி வருகிறது. கி.பி.16 ஆம் நூற்றாண்டில் ஸ்ரீ குருஞான சம்பந்தரால் தோற்றுவிக்கப்பெற்ற இத்தருமையாதீனம் மொழித்தொண்டும் சமயத்தொண்டும் சமூகத் தொண்டும் ஒல்லும் வகையெல்லாம் ஆற்றிவருகிறது. ஸ்ரீ குருஞானசம்பந்தரது பரம்பரையில் தற்பொழுது இருபத்தாறாவது குருமகாசந்நிதானமாக எழுந்தருளி யிருப்பவர்கள் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் ஆவார்கள். அவர்களால் தமது ஆதிபரமாசாரிய சுவாமிகளாகிய ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருப்பெயரில் நிறுவப்பெற்ற "ஞானசம்பந்தம் பதிப்பகம்" அறக்கட்டளைவெளியீடாக இந்நூல் வெளியிடப்பெற்றது.

உ

சிவமயம்

# ஸ்ரீ அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் வரலாறு

**திருவவதாரம் :**

ஸ்ரீ மெய்கண்டதேவர் அவதரித்த நடுநாட்டிலே சுந்தரர் தவநெறி வேண்டிப் பெற்ற தலமாகிய திருத்துறையூரிலே ஆதி சைவ மரபிலே அருணந்தி சிவனார் அவதாரம் செய்து சந்தான பரம்பரை முதற்குரவரான மெய்கண்ட தேவ நாயனாரின் சீடரானார். அவ்வாறு ஆவதற்குமுன் இவர் சகல ஆகமங்களிலும் வல்லவராய் இருந்தமையால், "சகலாகம பண்டிதர்" என்னும் சிறப்புப்பெயர் பெற்று விளங்கித் தமது குருவழி முறைப்படி, வேளாளர் மரபினர்க்குக் குலகுருவாய் விளங்கியிருந்தார். மெய்கண்டதேவர் அவதாரத்திற்கே காரணமாய் அவர்தம் தந்தையார் திருப் பெண்ணாகடம் அச்சுதகளப்பாளர் என்பவருக்கு தேவாரத் திருமறையில் கயிறுசார்த்திப்பார்த்துப் "பேயடையாபிரி வெய்தும்" என்னும் திருப்பாடல் உதயமாகக் கண்டு திருவெண்காட்டிறைவரை வழிபடும்படிக் கட்டளையிட்டவர் இவரே. இவர்சொற்படி ஒழுகிய அச்சுதகளப்பாளருக்கு மெய்கண்டார் மகவாக அவதரித்து ஆசாரியத்தன்மை பெற்று விளங்கினார்.

மெய்கண்டார் ஆசாரியத்தன்மை பெற்று விளங்கியிருந்த நிலையில் அவர் தம்மை வந்து

காணவில்லையே என்ற எண்ணத்துடனும், இரண்டு வயது நிரம்பிய குழந்தை சைவ சித்தாந்த பாடம் எப்படிச் சொல்கிறது என்பதைக் காண வேண்டுமென்னும் நோக்கத்துடனும் சகலாகம பண்டிதர் திருவெண்ணெய்நல்லூருக்குத் தமது விருதுகளுடன் எழுந்தருளினார். அவ்வூர்மக்கள் அனைவரும் வீடுகள்தோறும் பூரண கும்பமெடுத்து மங்கலவாத்தியங்களோடு தங்கள் குருவாகிய சிவாசாரியரை எதிர்கொண்டு வரவேற்றனர். மெய்கண்டார் மாத்திரம் தமது இருக்கையிலேயே வீற்றிருந்து சித்தாந்த ஞானத்தை உபதேசித்துக் கொண்டிருந்தார். அதுகண்ட அருணந்தி சிவனார் தாம் ஓரிடத்தில் தங்கி இருந்து கொண்டு மெய்கண்டாரைப் பற்றி வினவினார்; அவரை அழைத்து வருமாறு தமது சீடர்களை அனுப்ப, அவர்கள் சென்று மெய்கண்டாரது சாத்திர உபதேசத்தில் ஈடுபட்டு, அவரடிக்கு ஆளாகிவிட்டனர். இதை அறிந்த சகலாகம பண்டிதர் தாமே மெய்கண்டார், சாத்திர உபதேசம் செய்யும் திருமாளிகைக்கு எழுந்தருளினார். அப்பொழுதும் உபதேசத்தில் ஈடுபட்டிருந்த மெய்கண்டார் இவரை வரவேற்கவில்லை. அவ்வமயம் மெய்கண்டார் ஆணவ மலத்தின் தன்மையைப் பற்றி விளக்கம் தந்து கொண்டிருந்தார்.

உடனே தம்மைப் பொருட்படுத்தவில்லையே என்று எண்ணிய சகலாகம பண்டிதர், தன் முனைப்போடு "ஆணவத்தின் சொரூபம் யாது ?" என்று மெய்கண்ட தேவரைக் கேட்டார். சிவஞானமே உருவாய்த் திகழ்ந்த

மெய்கண்டார் இன்முகத்தோடு அவரைத் திருவருள் நோக்கம் செய்து தமது திருவிரலால் அவரையே சுட்டிக்காட்டி, ஆணவ சொரூபத்தை உணரச்செய்தார். அக்கணமே, அச்சிவஞானக் கதிரவனது அருளொளி நோக்கால் மலவிருள் அகலப்பெற்ற சகலாகம பண்டிதர் உண்மை உணர்ந்து, மெய்கண்ட தேவரது திருவடியில் வீழ்ந்திறைஞ்சித் தமக்குச் சிவஞானத்தைத் தந்தருள வேண்டுமென்று குறையிரந்தார். அவருக்கு உடனே திருவடி தீட்சை செய்து மெய்யுணர்வு அருளி அருணந்தி எனத் தீட்சா நாமம் செய்து, சிவஞானபோதச் செம்பொருள் தெரித்துத் தமது நாற்பத்தொன்பது மாணவர்களுள் முதன் மாணவராகும் பேற்றை நல்கினார். தமக்குச் செய்த இப்பெரு நன்மையை அருணந்தி சிவம், தாம் இயற்றிய சிவஞான சித்தியார் பாயிரத்துள்ளும் இருபா இருபஃது என்ற சித்தாந்த நூலினுள்ளும் அழகுபெற வியந்து துதித்துள்ளார்.

இவர் இயற்றிய நூல்கள் இரண்டு. ஒன்று சிவஞான சித்தியார்; இந்நூல் மெய்கண்ட சாத்திரம் பதினான்கனுள்ளும் விரிந்த நூலாய், புறச் சமயம் மறுக்கும் பரபக்கமும், அகச்சமயம் விளக்கும் சுபக்கமு முடையதாகத் தாயுமானார் முதலியோரால் பெரிதும் போற்றப்பெற்றதாய், சிவஞானபோதத்திற்குச் செய்யுள் வடிவில் அமைந்த பாஷ்யமாய் உள்ள சிவஞானக் களஞ்சியமாகும். மற்றொன்று இருபா இருபஃது என்பதாகும். இதுவும் அப்பதினான்கனுள் ஒன்று. இதில் இவர் தமது குருநாதரை வினவுமுகத்தால் சித்தாந்த உண்மையைத் தெளிவுற விளக்கியுள்ளார். இவரது

சிவஞானசித்தி நெறியினை வழிவழியாகப் போற்றி வளர்த்து வருகிறது நமது தருமபுர ஆதீனம்.

சில காலங் கழித்து அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் தமது மாணவர்வர்களுள் சிறந்தவரான மறைஞான சம்பந்தருக்கு ஞானோபதேசம் செய்தருளி, ஓர் புரட்டாசிப் பூர நாளில் அகண்டபரிபூரண சச்சிதாநந்த நிலையை எய்தினார். இவரது சமாதித் திருக்கோயில் திருத்துறையூரில் அமைந்துள்ளது. இவர் கி.பி. பதின்மூன்றாம் நூற்றூண்டில் வாழ்ந்தவர்.

--------

உ
குருபாதம்

# சிவஞான சித்தியார்

## சுபக்கம்

## பாயிரம்

### காப்பு

**ஒருகோட்டனி யையருசெவியன் மும்மதத்த**
**னால்வாயைங் கரத்தன் னாறு**
**தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையான்**
**தருமொருவா ரணத்தின் தாள்கள்**
**உருகோட்டன் பொடும்வணங்கி யோவாதே**
**இரவுபகல் உணர்வோர் சிந்தைத்**
**திருகோட்டும் அயன் திருமால் செல்வ முமொன்**
**றோவென்னச் செய்யும் தேவே.**

ஒரு கொம்பையும், இரண்டு செவிகளையும், மும்மதங்களையும், நாலுகின்ற (தொங்குகின்ற) வாயையும், ஐந்து கரங்களையும் உடையவரும் கங்கையும் வளைந்த அழகிய பிறையும் அணிந்த தாழ்ந்த சடையையுடைய சிவபிரான் புதல்வரும் ஆகிய ஆனைமுகக்கடவுளது திருவடிகளை உருக்க மிக்க அன்போடு இடையறாது வழிபட்டு இரவும் பகலும் தியானிப்போருடைய அறிவின் கண்ணதாகிய மும்மலக் குற்றத்தை அவை நீக்கும்; அதுவன்றியும் அவை அயன் அரி முதலியோர் வாழ்வும் ஒரு பொருள் அன்றெனவெறுப்பச் சிவமாந்தன்மைப் பெருவாழ்வையும் தரும்.

## மங்கல வாழ்த்து

### சிவபெருமான்

**அறுவகைச் சமயத் தோர்க்கும் அவ்வவர் பொருளாய் வேறாங்**
**குறியது உடைத்தாய் வேதா கமங்களின் குறியிறந்தங்**
**கறிவினில் அருளால் மன்னி அம்மையோ டப்பனாகிச்**
**செறிவொழி யாதுநின்ற சிவனடி சென்னி வைப்பாம். 1**

*அறுவகைப்பட்ட புறச்சமயத்தார் ஆராய்ச்சி செய்து முடிவாகக்கொண்ட வெவ்வேறு பொருள் களாகியும், அகச் சமயத்தார்க்குப் புறச்சமயத்தார் கொள்கைக்கு வேறாகிய நிலையுடைய ஐந்தொழில் செய்யும் பதியாகியும், சித்தாந்த சைவர்க்கு வேதாகமக் கருத்திற்கு அப்பாற்பட்டதாயும் நின்று, உயிர்களின் அறிவின்கண்ணே திருவருளாலே கலந்து அறிவைப் பிறப்பிக்கும் அம்மையப்பனாய், எங்கும் நிறைந்து எக்காலத்தும் வியாபகனாய் விளங்குஞ் சிவபிரானது திருவடிகளைத் தலைமேற் கொள்ளுவாம்.*

### முன்னூல்

**என்னையிப் பவத்திற் சேரா வகையெடுத்தென் சித்தத்தே**
**தன்னைவைத் தருளினாலே தாளிணை தலைமேற் சூட்டும்**
**மின்னமர் பொழில்சூழ் வெண்ணெய் மேவிவாழ்**
**மெய்கண்டான் நூல்**
**சென்னியிற் கொண்டு சைவத் திறத்தினைத் தெரிக்கலுற்றாம்.**
**2**

*பிறவிக்கடலிலழுந்துகின்ற என்னை, அதன்கண் அழுந்தாவண்ணம் கருணைக்கையாலெடுத்துஎன் அறிவின் கண்ணே சிவசொரூபத்தை விளக்குதற்கு*

எழுந்தருளி வந்து, திருவடிகளை எனது சிரமேற் சூட்டிருளிய திருவெண்ணெய் நல்லூரில் வீற்றிருக்கும் மெய்கண்ட தேவநாயனார் அருளிச் செய்த சிவஞானபோத நூலை எமது தலை மேற்கொண்டு சைவசித்தாந்த உண்மைகளை விளக்குவாம்.

## நுதலியபொருள்

**பண்டைநற் றவத்தால் தோன்றிப் பரமனைப் பத்தி பண்ணுந்**
**தொண்டரைத் தானே தூய கதியினில் தொகுப்பன் மார்க்கர்**
**கண்டநூ லோதி வீடு காதலிப் பவர்கட் கீசன்**
**புண்டரி கத்தாள் சேரும் பரிசினைப் புகல லுற்றாம். 3**

முற்பிறவிகளிலே சிவபெருமானைக் குறித்துப் பயன் கருதாது செய்த தவத்தோடு பிறந்து அப்பெருமான்பால் அன்புசெய்கின்ற அடியவர்களுக்கு நூல் வேண்டியதில்லை. அவர்களுக்கு உரிய ஞானத்தை இறைவனே கொடுத்துச் சிவகதியினிற் சேர்த்தருள்வன். நூலினால் உண்மையறிந்து வீடுபெற விரும்புவார்க்கு இறைவன் திருவடித் தாமரை களைச் சேரும் வகையினை இந்நூலுள் கூறுகின்றாம்.

## அவையடக்கம்

**மறையினால் அயனால் மாலால் மனத்தினால் வாக்கால் மற்றுங்**
**குறைவிலா வளவி னாலுங் கூறொணா தாகி நின்ற**
**இறைவனார் கமலபாதம் இன்றுயான் இயம்பும் ஆசை**
**நிறையினார் குணத்தோர்க் கெல்லாம் நகையினை நிறுத்துமன்றே. 4**

மறைகளினாலும், பிரமனாலும், திருமாலாலும், மன மொழிகளாலும், பிற எவ்வகைப் பிரமாணங் களாலும் அறியப்படாத முதல்வனது இயல்பை யான் சொல்லப் புகுதற் கேதுவாகிய எனது ஆசை சான்றோரால் இகழ்ந்து நகையாடுதற்குரியது.

## ஆசங்கை நீக்கல்

**அருளினால் ஆக மத்தே யறியலாம் அளவி னாலுந்**
**தெருளலாஞ் சிவனை ஞானச் செய்தியாற் சிந்தையுள்ளே**
**மருளெலாம் நீங்கக் கண்டு வாழலாம் பிறவி மாயா**
**இருளெலாம் இரிக்க லாகும் அடியரோ டிருக்க லாமே 5**

இறைவனியல்பு அத்தகைய பெருமையதெனினும் அவனைச் சிவநூலுட் கூறிய உண்மைகளை அனுபவத்தா லறிந்த ஆசிரியர் அருளிச்செய்யும் உபதேசத்தாற் கேட்டறியலாம்; அதற்கனுகூலமான அளவையாற் சிந்தித்தும் அறியலாம்; சிந்தித்ததனைத் தன்னறிவின் கண்ணே சிவாஞனத்தான் மாசறத்தெளிந்தும் அறியலாம்: அதனாற் பாச நீக்கம் எய்தி நிட்டைகூடிச் சிவானுபூதியும் பெறலாம்.

## அளவை

**அளவை காண்டல் கருதல்உரை அபாவம்பொருளொம் பாறென்பர்**
**அளவை மேலும் ஒழிபுண்மை ஐதீ கத்தோ டியல் பெனநான்**
**களவை காண்பர் அவையிற்றின் மேலும் அறைவர் அவை யெல்லாம்**
**அளவை காண்டல் கருதல்உரை யென்றிம் மூன்றின் அடங்கிடுமே. 6**

பொருள்களின் உண்மையையும் தன்மையையும் அறிதற்குக் கருவியாயுள்ளனவற்றை அளவையென்றல் மரபு. அளந்தறிதற்குத் துணைசெய்வது அளவை எனப்படும். பிரமாணம் என்பதும் அதுவே. காண்டல், கருதல், உரை என மூன்று பகுதியாக அளவை பகுக்கப்படும். இல்லாமை குறிப்பு, உவமை என்று மூன்று வகையை அவற்றோடு கூட்டி அளவை ஆறென்றும், ஒழிபு, நிகழ்ச்சி, ஐதீகம், இயல்பு என்பவற்றையும் சேர்த்து அளவை பத்தென்றும் கூறுப. அவையும் அவற்றிற்கு மேலுங் கூறுவனவும் ஆகியவெல்லாம் காண்டல், கருதல், உரை என்ற மூன்றினுள் அடங்கும். இவற்றை வடநூலார் அனுபவம், யுக்தி, சுருதியென்பர். சுருதி, யுக்தி, அனுபவம் எனவரிசை கூறுவதே அவர்முறை.

**மாசறு காட்சி ஐயந் திரிவின்றி விகற்ப முன்னா**
**ஆசற வறிவ தாகும் அனுமானம் அவினா பாவம்**
**பேசுறும் ஏதுக் கொண்டு மறைபொருள் பெறுவ தாகும்**
**காசறு முரையிம் மானத் தடங்கிடாப் பொருளைக் காட்டும். 7**

மேற்கூறிய மூன்றனுள் பொதுவுணர்வை முதலிற் பெற்று, ஐயந்திரிபறப் பொருள்களை நேரே அறிவதாகிய உயிரினது அறிவாற்றலே காட்சியளவை யெனப்படும். அங்ஙனம் நேரே அறியப்படாமல் மறைந்து நின்ற பொருளை அதனை விட்டு நீங்காது எப்போதும் உடன் நிகழும் ஏதுவைக் கொண்டு அறியும் உயிரின் அறிவாற்றல் கருதல் அளவை எனப்படும். இவ்வாறு அறியப்படாததை அனுபூதிமான்களது சொற்களின் வைத்தறியும் உயிரின் அறிவாற்றல் உரையளவை எனப்படும்.

**கண்ட பொருளை இரட்டுறவே கருதல் ஐயம் திரியவே**
**கொண்டல் திரிவாம் பெயர்சாதி குணமே கன்மம் பொருளென ஐந்து)**
**உண்ட விகற்ப வுணர்வினுக்குப் பொருளினுண்மை மாத்திரத்தின்**
**விண்ட லில்லா வறிவாகும் விகற்ப மில்லாக் காட்சியே.**

*காட்சி, வேற்றுமையிலாதது, வேற்றுமையுடையது, என இருவகைப்படும். பொருளுண்மை மாத்திரையே காட்டுவது முன்னது. ஒவ்வொன்றின் பெயர், இனம், பண்பு, தொழில், உடைப்பொருள் என்பவற்றை உணர்த்துவது பின்னது. இதுவோ அதுவோவென்று ஒன்றை ஐயுறுதல் ஐயக்காட்சி; ஒன்றை மற்றொன்றாக உணர்தல் திரிபுக் காட்சி, (இன்பதுன்பங்களையுணர்த்துவது தன் வேதனைக் காட்சியெனவும் யோகத்தால் மலசத்தி நீங்கப்பெற்று, முக்காலவியல்பையும் மூவிடத்துப் பொருளையும் அறிதற் கேதுவாயது யோகக்காட்சி யெனவுங் கூறப்படும். பிற விரிப்பிற் பெருகும்.)*

***காண்டல் வாயில் மனந்தன்வே தனையோ டியோகக்**
**காட்சியென**
**ஈண்டு நான்காம் அனுமானம் தனக்கும் பிறர்க்கு மென்றிரண்டாம்**
**மாண்ட வுரைதந் திரமந்திரத்தோ டுபதே சச்சொல்**
**லெனமூன்றாம்**
**பூண்ட வளவைக் கெதிர்புலன்தன் னியல்பு பொது வென்**
**றிரண்டாமே. 9**

---

**இது முதலாக உள்ள அளவை இயலின் திருவிருத் தங்கட்குத் திரு. பிள்ளையவர்கள் உரைநடை செய்ய வில்லை; மேல் அடைப்புக் குறிக்குள் உள்ளவை. 2ம் விருத்தத்திற்குரியவை.*

அன்னிய சாதி யும்தன் சாதியும் அகன்று நிற்றல்
தன்னியல்பன்னியத்தைத் தவிர்ந்துதன் சாதிக்கொத்தல்
துன்னிய பொதுவி யற்கை சொன்னவிவ் விரண்டி னுள்ளே
மன்னிய பொருள்கள் யாவும் அடங்கிடும் மானமுற்றால். 10

உயிரினோ டுணர்வு வாயில் ஒளியுரு வாதி பற்றிச்
செயிரொடு விகற்ப மின்றித் தெரிவதிந் திரியக் காட்சி
அயர்விலிந் திரிய ஞானம் ஐம்புலன் சார்ந்து யிர்க்கண்
மயர்வற வந்த ஞானம் மானதக் காண்ட லாமே. 11

அருந்தின்பத் துன்ப முள்ளத் தறிவினுக் கராக மாதி
தரும்தன்வே தனையாங் காட்சி சமாதியான் மலங்கள் வாட்டிப்
பொருந்தியதேசகாலவியல் பகல்பொருள்க ளெல்லாம்
இருந்துணர் கின்ற ஞானம் யோகநற் காண்ட லாமே. 12

பக்க மூன்றின் மூன்றேது வுடைய பொருளைப் பார்த்துணரத்
தக்க ஞானந் தன்பொருட்டாம் பிறர்தம் பொருட்டாம்அனுமானம்
தொக்க விவற்றாற் பிறர்தெளியச் சொல்ல லாகும் அச்சொல்லும்
மிக்க அன்னு வயத்தினொடு வெதிரே கச்சொல்
லெனவிரண்டாம். 13

மூன்று பக்கம் பக்கம்நிகர் பக்கம் நிகரில் பக்கமெனத்
தோன்றும் பக்கந் துணிபொருளுக் கிடமாம் உவமை
நிகர்பக்கம்
ஆன்ற பொருள்சென் றடையாத இடமாம் நிகரில் பக்கமுதல்
ஏன்ற விரண்டும் பொருளுண்மைக் கிடமாம் ஒன்று
பொருளின்றாம். 14

ஏது மூன்றாம் இயல்புகா ரியத்தோ டனுப லத்தியிவை
ஓதி னியல்பு மாமரத்தைக் காட்டலுறு காரியம்புகை
ஆதி யாய அனல்காட்டலாகும் அனுப லத்தியது தன்
சீத மின்மை பனியின் மைகாட்டல் போலுஞ் செப்பிடினே. 15

புகையால் அனலுண் டடுக்களை போல் என்னப் புகறல்
அன்னுவயம்
வகையாம் அனலி லாவிடத்துப் புகையின் றாகும்மலரி னொடு
முகையார் நீரிற் போலென்று மொழிதல் வெதிரே
கச்சொல்இவை
தொகையார் உறுப்பைந் தொடுங்கூடச் சொல்லு வாருமுளர்
துணிந்தே. 16

போது நாற்றத் தாலறிதல் பூர்வக் காட்சி யனுமானம்
ஓது முறையா லறிவினள வுணர்தல்கருதல் அனுமானம்
நீதி யால்முற் கன்மபலம் நிகழ்வ திப்போ திச்செய்தி
ஆதி யாக வரும்பயனென் றறிதல் உரையால் அனுமானம்.17

அனாதியே அமல னாய அறிவன்நூல் ஆக மந்தான்
பினாதிமா றின்றிப் பேணல் தந்திர மந்தி ரங்கண்
மனாதிக ளடக்கித் தெய்வம் வழிபடும் வாய்மை யாகுந்
தனாதியீ றிலாதான் தன்மை யுணர்த்துதல் உபதே சந்தான்.18

ஈண்டு பக்கப் போலிநான் கேதுப்போலி யொருமூன்றாய்
வேண்டு மெழுமூன் றாகும் விளங்குவமைப் போலி யீரொன்பான்
காண்டுந் தோல்வித் தானம் இரண்டிருபத் திரண்டாம்
கருதிலிவை
யாண்டும் மொழிவர் அவையெல்லாம் அளக்கில் அறுபத்
தைந்தாகும். 19

--------

# சிவஞான சித்தியார்

## சுபக்கம்

### முதற் சூத்திரம்

**ஒருவனோ டொருத்தி யொன்றென் றுரைத்திடும் உலக மெல்லாம்**
**வருமுறை வந்து நின்று போவதும் ஆத லாலே**
**தருபவன் ஒருவன் வேண்டுந் தான்முத லீறு மாகி**
**மருவிடும் அநாதி முத்த சித்துரு மன்னி நின்றே. 20**

*உலகம் அவன், அவள், அது என்னும் மூவேறு பகுப்புடையது. அப்பகுப்புகள் முறையாகத் தோன்றி நிற்க வேண்டிய கால எல்லையுள் நின்று ஒடுங்குவனவாதலின் அவற்றைத் தோற்றுவிப்பானொரு முதல்வன் இன்றியமையாது வேண்டப்படும். தோற்றுவிப்பவனே ஒடுககுமிறுதிக் கடவுளாயுமிருப்பன். அவன் இத்தோற்ற ஒடுக்கங்களாற் றுடக்குறாது எஞ்ஞான்றும் பேரறிவு வடிவாக நிலைபெற்று நிற்பன்.*

### முதல் அதிகரணம்

**உதிப்பதும் ஈறு முண்டென் றுரைப்பதிங் கென்னைமுன்னோர்**
**மதித்துல கநாதி யாக மன்னிய தென்ப ரென்னின்**
**இதற்கியா னனுமானாகி யெடேனிப்பூ தாதி யெல்லாம்**
**விதிப்படி தோற்றி மாயக் காணலான் மேதி னிக்கே.**

*உலகம் தோற்றவொடுக்கமில்லாது எக்காலத்தும் நிலை பெற்றிருப்பதென்னின், அது காட்சி அளவைக்குப் பொருந்துமாறில்லை. ஐம்பூதங்களாலாய பொருள்*

களெல்லாம் தோன்றி மறைவது வெளிப்படையாகலின், அவற்றின் தொகுதியாய உலகமும் அவ்வாறே யாமெனவறிக.

**இயல்புகாண் தோற்றி மாய்கை யென்றிடி னியல்பினுக்குச்**
**செயலதின் றியல்பு செய்தி செய்தியே லியல்பதின்றாம்**
**இயல்பதாம் பூதந் தானே யியற்றிடுஞ் செய்தியென்னிற்**
**செயல்செய்வா னொருவன் வேண்டுஞ் செயற்படு**
**மசேதனத்தால். 22**

தோன்றி மறைதல் உலகத்தின் இயற்கையாமெனின், தோன்றுதலும் மறைதலும் மாறுபட்ட தன்மையன வாகலான், அவ்விரு வேறு தன்மைத்தாய செயலினை இயற்கையென்றல் தவறு. இயற்கையாயுள்ள பூதங்கள் தாமே தோன்றி மறையு மென்னில், அறிவில் பொருளாய அவை அறிவுடைப்பொருளால் இயக்கப் பட்டு இயங்குமே யன்றித் தாமே இயங்கா.

**நிலம்புன லனல்கால் காண நிறுத்திடு மழிக்கு மாக்கும்**
**பலந்தருமோரு வனிங்குப் பண்ணிட வேண்டா**
**வென்னி இலங்கிய தோற்றம் நிற்ற லீறிவை யிசைத**
**லாலேநலங்கிளர்தோற்றம் நாசந்தனக்கிலாநாதன் வேண்டும். 23**

இனி, நான்கு பூதங்களுள் நீரானது பிற பூதங்களை யாக்கும்; காற்று பிறவற்றை நிலைநிறுத்தும்; நெருப்பு பிற வற்றை யழிக்கும், தானுமழிவெய்தும்; நிலம் பிறபூதங்களி னின்று நுகரப்படும் பயனைவிளைக்கும்; ஆதலால், இவற் றைச் செயற்படுத்த ஒரு முதல்வன் வேண்டப்படா னென்னில் அது பொருந்தாது; எல்லாவற்றையும் நிலை நிறுத்துவது காற்றானால்

நீரினையும் காற்றே நிலை நிறுத்து மென்பது முடியும். அங்ஙனமாயின் நீர் காற்றையுளதாக்கவில்லை என்பது பெறப்படும். அன்றியும் அனல் மற்றைய பூதங்களை அழிக்குமெனில், அது காற்றையும் அழிக்க வேண்டும் அப்பொழுது காற்று அதனை நிலைநிறுத்து மென்பது பொருந்தாது. அவ்வாறே பிற பூதங்களுள் ஒவ்வொன்றும் மற்றவற்றை யெல்லாம் தொழிற்படுத்து மென்பது தவறாய் முடியும் அவற்றின் மாறுபாட்டை ஒழித்து அறிவில்லாத அவற்றை இயைவித்துத் தொழிற்படுத்துவதற்கு அறிவுடைய ஒருவன் வேண்டும் உதாரணமாக, நீரும் நெருப்பும் தம்முள்மாறுபாட்ட தன்மையுடையன. அவை இரண்டும் நேரே சேர்ந்து விடத்தே ஒன்றை ஒன்று அழிக்கும்; அறிவுடை ஒருவன் நீரை ஒரு பாத்திரத்தில் விட்டு நெருப்பின்மேல் வைத்தால், இரண்டும் மாறுபாடின்றித் தொழிற்படும். மேலும் பூதங்கள் தனித் தனித் முத்தொழிற்படுதலாலே அவை ஒன்றனை ஒன்று தொழிற்படுத்தும் ஆற்றல் உடையன அல்ல. ஆகவேமுத் தொழிற் படாத முதல்வனே அவற்றை முத்தொழிற்படுத்த வல்லன்.

**சார்பினிற் றேன்று மெல்லாந் தருபவனில்லை யென்னிற்**
**தேரினில்லதற்கோ தோற்ற முள்ளதற்கோநீ செப்பா**
**யோரினில் லதுவுந் தோன்றாதுள்ள தேலுதிக்க வேண்டா**
**சோர்வில்லா திரண்டு மின்றி நிற்பது தோன்று மன்றே. 24**

**உள்ளது மிலது மின்றி நின்றதொன் றுளதே லுண்டாம்**
**இல்லதே லில்லை யாகுந் தோற்றமு மிசையா தாகும்**
**முள்ளகா ரணத்தி லுண்டாங் காரிய முதிக்குமண்ணில்**
**இல்லதாம் படங்க டாதி யெழிறரு மியற்று வாளால். 25**

**ஒருபொரு ளொருவ னின்றி யுளதில தாகு மென்னில்**
**தருபொரு ளுண்டே லின்றாந் தன்மையின்றேலுண்டாய்**
**வருதலின் றிலது கார்ய முதலுளதாகு மென்னிற்**
**கருதுகா ரியமு முண்டாய்த் தோற்றமுங் கருத்தாவாலாம்.26**

*இனி, முதற்கணத்தில் றோன்றியழியும் பொருளின் சார்பிலே, பிற்கணத்திற் பிற பொருள்கள் தோன்றும். இவ்வாறே எப்பொருளுஞ் சார்பிற்றோன்றுவதன்றி, முதல்வனை வேண்டாவெனில், தோற்றங்கூறுவது உள்பொருட்கோ இல்பொருட்கோ என்பதை ஆய வேண்டும். இல்பொருள் என்றுந் தோன்றாது. உள் பொருள் தோன்றுவான் என்னில் தோற்றமில்லாத போது அது நுட்பமாய காரண வடிவாயிருக்கும். காரண வடிவினின்றும் காரியம் வெளிப்படலே தோற்ற மெனப்படும். மண்ணிலிருந்து அதிலில்லாத ஆடை முதலியன தோன்றா அதில் நுட்ப நிலையில் உள்ள குடம் முதலியன தோன்றும். எனவே காரணமும் காரியமும் உள்பொருளே வெளிப்படாது காரணத்துள் அடங்கிநின்ற காரியப்பொருளை வெளிப்படுத்துவதே இறைவன் அதனைத் தோற்றுவித்தலாகும்.*

**காயத்தினழிவு தோற்றங் கண்டன முகிலகிற் காணா**
**நீயித்தை யுரைத்த வாறிங் கென்னெனி னிகழ்த்து**
**மாயத்த வுலகம் பூநீர் தீவளி வான மாதி முண்மை**
**யாயித்தா னோன்றி னோன்று தோன்றிநின் றழிதலாலே. 27**

*உடம்பு தோன்றியழிவதேயன்றி உலகந் தோன்றி யழியக் காரணமில்லை என்னில், ஐம்பூத காரிய மாதலின், அஃதும் தோன்றி நின்றழிவதே.*

**ஓரிட மழியப் பின்னு மோரிட நிற்கு மொக்கப்**
**பாரிட மழிவ தின்றா மென்றிடிற் பயில்வித் தெல்லாங்**
**காரிட மதனிற் காட்டு மங்குரங் கழியும் வேனிற்**
**சீருடை துலகுகாலஞ்சேர்ந்திடப்பெயர்ந்துசெல்லும். 28**

*உலகமுற்றிலுமழியாது ஓரிடம் அழியப் பிறிதோரிடம் நிற்குமென்னில், உலகமுழுவதும் அழிவதை யாரும் பார்த்தல் இயலாது. ஒருங்கே கார்காலத்தில் ஒருவகை வித்துக்கள் முளைகளாகத் தோன்றி வளர்வதும் வேனிற் காலத்திலே அழிவதுங் காண்டல்போல், உலகமும் ஒரு காலத்தில் ஒடுங்குமென அறிக.*

**காலமே கடவு ளாகக் கண்டனந் தொழிலுக் கென்னிற்**
**காலமோ வறிவின் றாகு மாயினுங் காரியங்கள்**
**காலமே தரவே காண்டுங் காரணன் விதியினுக்குக்**
**காலமுங் கடவுளேவ லாற்றுணைக் காரணங்காண். 29**

*தோற்றக்கேடுகட்குக் காலமே முதன்மையாகக் கொள் கின்றோமெனின், காலம் அறிவில்லாததாகலின், அது வினைமுதல் (கருத்தா) ஆகாது. காலத்தின்படிச் செயல்கள் நிகழ்கின்றவெனில் அறிவுடைக் கடவுள் ஏவலால் அவை நிகழ்கின்றன. காலம் அவனுக்குத் துணைக்காரணமாமென்றறிக*

**அழிந்தபின் னணுக்க டாமே யகிலாமாய் வந்து நின்று**
**கழிந்திடுங் கன்மத் தென்னிற் கன்மமு மணுவுங் கூட**
**மொழிந்திடுஞ் சடமே யாகி முடிதலான் முடியா செய்தி**
**றொழிந்திடுஞ் மணுரு பங்க ளுலகெலா மொடுங்கு மன்றே. 30**

**காரணவணுக்கள்கெட்டாற் காரிய வுலகின்றென்னிற்**
**காரண மாயை யாகக் காரியங் காண லாகும்**

**காரணமாயை யென்னை காண்பதிங்கணுவேயென்னிற்**
**காரண மாயை யேகாண் காரிய மணுவிற் கண்டால். 31**

**காரிய மென்ப தென்னை காரண வணுவை யென்னிற்**
**காரிய மவய வத்தாற் கண்டனங் கடாதி போலக்**
**காரிய வுருவ மெல்லா மழிதருங் கார ணத்தாற்**
**காரிய வுறுப்பின் மாயை தருமெனக் கருதி டாயே. 32**

**தோற்றமு நிலையுமீறு மாயையின் றொழில தென்றே**
**சாற்றிடு முலகம் வித்துச் சாகாதி யணுக்களாக**
**ஏற்றதே லீண்டு நிற்கு மில்லாதே லியைவ தின்றா**
**மாற்றநீ மறந்தா யித்தான் மாயையை மதித்தி டாயே. 33**

*உலகம் ஐம்பூதங்களினுட்பமாக அழிவெய்தும்; கட் புலனாகாத பரமாணுக்களே அவற்றின் நுட்பம்; அவை களே உயிர்களின் வினைகாரணமாக உலகமாய்த் தோன்றி நின்றழியுமென்னில், வினையும் அணுவுஞ் சடமேயாதலால், தோற்ற ஒடுக்கங்கள் அவற்றாலாவன வல்ல. மேலும் அணுக்களும், நுட்பமாக ஆராயுமிடத்து, வெவ்வேறு தன்மையனவாய்ப் பகுப்புடையன. ஆதலால், அவைகளும் வடிவிழந்து அழிவனவே. ஆகவே அணுக்கள் உலகத்தின் முடிந்த மூலமல்ல. அங்ஙன மாயின் உலகம் முடிவாக எதன்கண் நின்று தோன்றுவ தென்னின் மாயை யினின்று தோன்றும். மாயையே உலக முதற்காரண மாகும். அஃதே உருவப் பகுப்புக்கள் அற்றதாய்ச் சடப் பொருளெவற்றிற்கும் மூலமாய் யாவுந் தோன்றுதற்கு இடனாமென்றுணர்க ஆதல் பற்றியே அறிஞர், தோற்றமும், நிலையும், இறுதியும். மாயை யினின்று நிகழ்வன எனக் கூறினர். வித்தின்கண் மரத்தின் கிளை, இலை முதலிய உறுப்புக்கள் நுட்ப மாயமைந்*

திருப்பதினாலேயே, மரம் வளருங் காலத்தே அவைபுறத்தே வெளிப்பட்டுத் தோன்றுகின்றன. இல்லா விடிற் றோன்றா. அதே போல, மாயையுமாம். மாயையே எல்லாவற்றையும் நுட்பமாகத் தன்னகத்தே கொண்டுள்ள உலக மூலமென அறிக.

**மாயையி னுள்ள வஞ்சம் வருவது போவ தாகும்**
**நீயதிங் கில்லை யென்னி னிகழ்ந்திடு முயலிற் கோடு**
**போயுகு மிலைக ளெல்லா மரங்களிற் புக்குப் போதி**
**னாயிடு மதுவு மென்னிற் காரணங் கிடக்க வாமே** 34

**கருதுகா ரணமுண் டாகக் காரிய முள்ள தாகி**
**வருதலா லநாதி வைய மற்றொரு கடவு ளித்தைத்**
**தருதலா லாதி யாகச் சாற்றலு மாகு மாயைக்**
**கொருவனா ரென்னிங் கென்னி னுள்ளவா றுரைப்பக்**
**கேள்நீ** 35

**புத்திமற் காரி யத்தாற் பூதாதி புருடன் றானும்**
**அத்தனு கரணம் பெற்றா லறிதலா லவற்றை மாயை**
**யுய்த்திடு மதனான் மாயைக் குணர்வொன்று மில்லை யென்றே**
**வைத்திடு மதனா லெல்லாம் வருவிப்பா னொருவன்வேண்டும்.** 36

மாயையிலே எல்லாம் ஒடுங்குமெனின், அஃது எங்ஙனம் ? மரத்தினின்று இலைகள் உதிர்ந்தபின் அவைகள் மீள மரத்திற் போய்ச் சேர்வதில்லையென்று வினவிற் கூறுதும். அத்தகைய இலைகள் உண்டாவதற் கேதுவாய காரணப்பொருளில் அவை அழிந்து அடங்கும். அக் காரணப்பொருள் காரியமாய்ப் பரிணமிக்குங்காலை, இலை வடிவாய் வெளிப்பட்டுத் தோன்றும். காரணவடிவாய் மறைந்திருக்கும் உலகே காரியவடிவாய் வெளிப்படும். உலகிற்கு முதற் காரணமாய மாயை என்றும் உள்ளது. காரிய

வெளிப்பாடு ஒரு முதல்வனால் கால எல்லையிலமை தலின், உலகம் ஆதியும் அந்தமுமுடையதென்ப. பூதப் பொருள்கள் யாவுஞ் சடமாகலின் அவற்றைத் தோற்று விப்பான் அறிவுடைய முதல்வன் ஒருவன் வேண்டும் என்ப தொக்கும்; உயிரானது அறிவுடைய பொருளா தலின் உயிரினை அம்முதல்வ னென்னாமோ வெனின், உடம்பு முதலிய கருவிகளைப் பெற்றாலன்றி ஒன்றை அறியுமாற்றல் உயிர்க்கில்லை. ஆதலின் உயிர்க்கு அவற் றைத்தருவான் உயிரின்வேறாய ஒருவினைமுதல் (கருத்தா) வேண்டும். மாயை சடசத்தியாகலின் அது தானே உயிர்க்கு உடம்பு முதலிய கருவிகளைத் தரமாட்டாது என்றறிக.

**காரியங் கார ணங்கள் முதல்துணை நிமித்தங் கண்டாம்**
**பாரின்மண் திரிகை பண்ணு மவன் முதல் துணை நிமித்தந்**
**தேரின்மண் மாயை யாகத் திரிகைதன் சத்தி யாக**
**ஆரியன் குலால னாய்நின் றாக்குவன் அகில மெல்லாம். 37**

உலகத்திலே ஒவ்வொரு செயலுக்கும் காரணம் மூன்றுள்ளன என்பதைக் கண்கூடாக அறியலாம். மட்கலங்களுக்கு முதற்காரணம் மண்; துணைக்காரணம் திரிகை முதலாயின ; நிமித்தகாரணம் குயவன். அது போலச் சடஉலகமுண்டாதற்கு மாயை முதற்காரணம், இறைவனது ஆற்றல் துணைக்காரணம். இறைவன் நிமித்த காரணம் எனக்கொள்க.

**விந்துவின் மாயை யாகி மாயையின் அவ்வி யத்தம்**
**வந்திடும் விந்துத் தன்பால் வைகரி யாதி மாயை**
**முந்திடும் அராக மாதி முக்குண மாதி மூலந்**
**தந்திடுஞ் சிவன வன்றன் சந்நிதி தன்னில் நின்றே. 38**

சைவத்திலே உலகமுதற்காரணம் தூயமாயை, தூய்தல்மாயை, மூலப்பகுதிமாயை என மூன்றுவகையாகப் பேசப்படும். சிவபெருமானது திருமுன்பாக, அவனது ஆற்றலால், தூயமாயையின் கீழாக அடங்கித் தூய்தல் மாயையும், அதினின்று மூலப்பகுதியும் தோன்றும். உலகைப் பொருளுலகமென்றும், சொல்லுகமென்றும் பகுக்குங்காலை, பொருளுலகமென்பதற்கடிப்படை தூய மாயையிற்றோன்றிய ஐந்து முதல்களும், தூய்தல் மாயையின்றோன்றிய ஆறு முதல்களும் மூலப்பகுதியிற்றோன்றிய இருபத்துநான்கு முதல்களுமாம்.

**வைகரி செவியிற் கேட்ப தாய்அத்த வசன மாகி**
**மெய்தரு முதான வாயுமேவிட விளைந்த வன்னம்**
**பொய்யற வடைவு டைத்தாய்ப் புந்திகா ரணம தாகி**
**யையமில் பிராண வாயு வடைந்தெழுந் தடைவுடைத்தாம். 39**

விரி (வைகரி) என்பது தன் செவிக்கும் பிறர் செவிக்கும் புலனாவதாய்ச் சிறப்புணர்விற்கேதுவாய் உயிர்ப்புக்காலுடன் கலந்து வெவ்வேறெழுத்தொலியாய் வெளிப் படுவதாகும். தன் செவிக்குமாத்திரங் கேட்பதை விரி யெனவும், பிறர் செவிக்குங் கேட்பதை வெளிப்படை யெனவும் கூறுதலும் உண்டு.

**உள்ளுண ரோசை யாகிச் செவியினி லுறுதல் செய்யா**
**தொள்ளிய பிராண வாயு விருத்தியை யுடைய தன்றித்**
**தெள்ளிய வக்க ரங்கள் சிந்திடுஞ் செயல தின்றி**
**மெள்ளவே யெழுவ தாகும் மத்திமை வேற தாயே. 40**

வகை (மத்திமை) யென்பது செவிப்புலனாகாது உள்ளே உணரப்படுஞ் சுட்டுணர்விற்கேதுவாய் உயிர்ப்புக்கா (பிராணவாயு) வின் கலப்பின்றி மக்கள் வெவ்வேறு மொழிகளில் நினைப்பதற்கேதுவாயுள்ளது.

**வேற்றுமைப்பட்ட வன்னம் வெவ்வேறு விபாக மாகித்**
**தோற்றுத லடைவொ டுக்கிச் சொயம்பிர காச மாகிச் சாற்றிடு**
**மயிலி னண்டந் தரித்திடுஞ் சலமே போன்றங் காற்றவே**
**யுடைய தாகிப் பைசந்தி யமர்ந்து நிற்கும். 41**

தொகை (பைசந்தி) யென்பது மயில் முட்டையிலுள்ள நீரானது பலநிறந்தோன்றுவதற்கேதுவாய் அந்நிறங் களைக் காட்டாது அவற்றை அடக்கி நிற்பதுபோல, கீழ் வரும் வகைக்கு ஆதியாய்ப் பொருள்களைப் பொதுவா யறியும் பொது உணர்விற்கேதுவாயுள்ளது.

**சூக்குமை வாக்க துள்ளோர் சோதியா யழிவ தின்றி**
**யாக்கிடும் அதிகா ரத்துக்கழிவினை தன்னைக் கண்டால்**
**நீக்கமி லறிவானந்தம் முதன்மை நித்திய முடைத்தாய்ப்**
**போக்கொடு வரவி ளைப்பும் விகாரமும் புருட னின்றாம். 42**

சொல் என்பது கருத்துணர்த்தும் ஒலிக்கு அடிப்படை யான தூயமாயைப் பகுதியென்பதே அறிவனூற்கருத்து. அது நால்வகைப்படும். அவை நுட்பம், தொகை, வகை விரி என்பன. வடமொழியிலே அவைமுறையே சூக்குமை பைசந்தி, மத்திமை, வைகரி எனப்படும். இறுதி நின்றதை இருவகையாக்கி, ஐவகை பேசப்படுதலுமுண்டு. பிறர் செவிக்குப் புலனாவதை வெளிப்படையென்ப. நுட்பம் என்பது அழிவில்லாதாய்த் தொகை, வகை, விரி என்பவை தோன்றி ஒடுங்குதற்கு அடிப்படையானது. அது இறைவனது திருவருளாற்றலோடு நேராய தொடர்புடைய தாய் இருப்பதால், அதனை உள்ளபடி காணப்பெற்றார்க்கு அது நீங்காத அறிவு, இன்பம், முதன்மை என்பவற்றைத் தரவல்லது; அதனையே ஒலிமுடிவானவீடென்பர்.

அதனைக் கடந்துவிடின், முதல்வனோடு இரண்டறக் கலப்பதே கைவரும். நுட்பத்தின் வடிவை ஒலிப் பிழம்பென்ப.

**நிகழ்ந்திடும் வாக்கு நான்கும் நிவிர்த்தாதி கலையைப் பற்றித்**
**திகழ்ந்திடும் அஞ்ச தாகச் செயல்பரி ணாம மன்று**
**புகழ்ந்திடும் விருத்தி யாகும் படங்குடி லானாற் போல**
**மகிழ்ந்திடும் பிரம மன்று மாமாயை என்பர் நல்லோர். 43**

சொல் நான்கும் தமிழ்மண்டிலமெனப்படும். சுத்த தத்துவங்களிலே ஐந்து கலைகளைப்பற்றி நிற்பன. இவை தூயமாயையின் திரிபுஅல்ல ; துணி கூடாரமானாற் போன்று அதன் படிப்படியாய விரிவே. சொல்லைச் சத்தப்பிரமம் என்பர் சிலர். அது உண்மையிற் சுத்த மாயாவடிவே நுட்பம், தொகை, வகை, விரி, வெளிப்படை யெனச்சொல் ஐந்து. நீத்தல் (நிவிர்த்தி) பதிவு (பிரதிட்டை) புலமை (வித்யா) அமைதி (சாந்தி) அமைதி மேல் (சாந்தியதீதை) எனத் தூயமாயா வட்டங்கள் (சுத்தமாயாகலைகள்) ஐந்து, இவற்றுள் நீத்தற்கலையைப்பற்றி வெளிப்படைச் சொல்லும் பதிவுக்கலையைப்பற்றி விரியும், புலக்கலையைப்பற்றி வகையும், அமைதிக் கலையைப்பற்றித் தொகையும், அமைதி மேற்கலைப்பற்றி நுட்பமும் நிற்கும். குறித்த சொல் வகைகள் மூலமாக உயிர்க்கு அறிவு விளங்கும். அறிவினை விளக்குங்கருவியே சொல்லென அறிக. ஐவகைச் சொல்லும் படிப்படியாக நுட்பமானவை.

**வித்தைகள் வித்தை ஈசர் சதாசிவர் என்றி வர்க்கு**
**வைத்துறும் பதங்கள் வன்னம் புவனங்கள் மந்தி ரங்கள்**
**தத்துவம் சரீரம் போகம் கரணங்கள் தாமெ லாமும்**
**உய்த்திடும் வைந்த வந்தான் உபாதான மாகி நின்றே. 44**

தூயமாயை மேற்கூறிய சொல்லிற்கு மாத்திரமன்றி மந்திரமுதல்வர், மந்திரப் பெருந்தலைவர், சிவனருவுருவினர் முதலிய தமிழ்மண்டிலம் எனப்படும், சுத்த தத்துவத்தில் வாழ்பவர்கள் யாவர்க்கும் பயன்படும் எழுத்து சொல், சொற்றொடர், உடம்பு, உறையுள், நுகர்ப்பொருள் முதலிய யாவற்றிற்கும் முதற்காரணமாமென அறிக.

**மூவகை அணுக்களுக்கு முறைமையால் விந்து ஞானம்**
**மேவின தில்லை யாகில் விளங்கிய ஞானம் இன்றாம்**
**ஓவிட விந்து ஞானம் உதிப்பதோர் ஞான முண்டேல்**
**சேவுயர் கொடியி னான்றன் சேவடி சேர லாமே. 45**

சொல்லின் சார்பில்லாவிடின் மூவகை யுயிர்க்கும் சுட்டறிவு விளங்குமாறு இல்லை. சொல்லைத் தன்னின் வேறாகக் காணப்பெற்று இறைவன் நல்கும் பேரறிவைப் பெறக்கூடுமாயின், உயிர்கள் முடிந்த வீட்டின்பத்தை எய்துதல் கூடும்.

**அருவினில் உருவந் தோன்றி அங்காங்கி பாவ மாகி**
**உருவினில் உருவ மாயே உதித்திடு முலக மெல்லாம்**
**பெருகிடும் சுருங்கும் பேதா பேதமோ டபேத மாகும்**
**ஒருவனே யெல்லா மாகி யல்லனா யுடனு மாவன். 46**

பொருள்கள் தோன்று முறையைப் பார்க்கின், மிகவும் நுண்ணிய அருவப்பொருளினின்று நுண்ணிய உருவப் பொருள்கள் தோன்றும். அவைகளினின்று பருப்பொருள்கள் தோன்றும். அவைகளெல்லாம் பலதிறப்பட்டு முதலாகவும், உறுப்பாகவும் வெளிப்படும். அவைகள் தம்முள்வளர்ந்துந் தேய்ந்தும் திரி புற்றும் இரண்டறக்கலப்புற்றும் விளங்கும்.

*இவற்றை இயைத்து இயக்கு முதல்வன் தன்னியல்பால் வேறாய் நிற்பினும் இவற்றொடு கலந்து ஒன்றாகியும், தன் முன்னிலையிலிவற்றை இயக்குதலான் உடனாகியும் நிற்பன்.*

**அருவுரு ஈனா தாகும் விகாரமும் அவிகா ரத்தின்**
**வருவது மில்லை யென்னின் வான்வளி யாதி பூதம்**
**தருவது தன்னின் மேக சலனசத் தங்க ளோடும்**
**உருவின்மின் உருமே றெல்லாம் உதித்திடு முணர்ந்து**
**கொள்ளே. 47**

*அருவத்தில் நின்று உருவந்தோன்றாது. இயற்கையினின்று செயற்கைவராது என்னில், இத்தடையெழுப்பும் மாயாவாதிகள் அருவமாகிய வானினின்று உருவமாய் பிற பூதங்கள் தோன்றுமென்றும், இயற்கையாயுள்ள வானகத்தேசெயற்கையாயமின்னல், இடி முதலிய தோற்றங்கள் உண்டாவனவென்றுங் கூறுவராதலின் இத்தடை அவர் கொள்கையாலேயே மாறுபட்டொழிதலறிக.*

## இரண்டாம் அதிகரணம்

**மண்ணினிற் கடாதி யெல்லாம் வருவது குலால னாலே**
**எண்ணிய உருவ மெல்லாம் இயற்றுவன் ஈசன்தானுங்**
**கண்ணுகா ரியங்க ளெல்லாம் காரண மதனிற் காண்பன்**
**பண்ணுவ தெங்கே நின்றிங் கென்றிடிற் பகரக்கேள் நீ. 48**

**சீலமோ உலகம் போலத் தெரிப்பரி ததனால் நிற்குங்**
**கோலமும் அறிவா ரில்லை ஆயினுங் கூறக் கேள்நீ**
**ஞாலமே ழினையுந் தந்து நிறுத்திப்பின் நாசம் பண்ணும்**
**காலமே போலக் கொள்நீ நிலைசெயல் கடவுட் கண்ணே. 49**

குயவன் நமது கண்ணெதிரே மண்ணில் நின்று குடம் முதலிய பலகலங்களையு ண்டாக்குதல் போல, முதல்வனும் கருதிய வடிவங்களையெல்லாம் உண்டாக்குவ னென்றால் குயவன் றன்மையறிற்பாலது; முதல்வன் எங்கே நின்று உலகத்தையுள தாக்குவனோ? முதல்வன்றன்மை எத்த கைத்தோ? என்று வினவுவையாயிற் கூறுதும்:- காணப்படும் உலகைப் பற்றிப் பேசுகிற முறையாகக் காணப்படாத முதல்வன் றன்மையைக் கூறுதல் அரிது. அவன் நிலையை ஓர் உதாரணத்தால் விளக்குதும். காலமென்னு முதலானது இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் மூன்று பகுப்பாய் நின்று உலகம் ஏழும் தோன்றி நின்றழிதற்கேதுவாய்த் தனக்கு ஆதாரந்தோன்றாது நிற்றல்போல, முதல்வனும் எப்பொருட்குந் தானேயா தாரமாய் நின்று தனக்கு ஆதாரம் யாதும் வேண்டாது உலகைத் தொழிற் படுத்துவனென அறிக.

**கற்றநூற் பொருளும் சொல்லும் கருத்தினில் அடங்கித்**
**தோன்றும்**
**பெற்றியுஞ் சாக்கி ராதி உயிரினிற் பிறந்தொ டுக்கம்**
**உற்றதும் போல வெல்லா வுலகமும் உதித்தொடுங்கப்**
**பற்றொடு பற்ற தின்றி நின்றனன் பரனு மன்றே.** 50

குயவன் ஊதியத்தின் பொருட்டுத் தான் வனையுங் கலங்களிற் பற்று வைத்திருப்பதுபோல, முதல்வனும், உலகைத் தொழிற்படுத்துவதால் உலகப்பற்றில் கட்டுண்டி ருப்பனோ எனில், அவன் தன் பயன் கருதாமையின், ஐந் தொழிலியற்றுங்கால் அவ்வாறு அவன் கட்டுண்டிருப் பவன் அல்லன் என்றறிக. உயிரின்கண், நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம்,

உயிர்ப்படக்கம் என்னும் உணர்ச்சி நிலைகள் ஏற்படுதல் போல, இறைவன் கண் எல்லா உலகமும் உதித்தொடுங் குவதற்கேதுவாய வளர்ச்சி, காப்பு, ஒடுக்கம் என்ற நிலைகள் உள்ளன. ஆயின், உயிர் அவத்தைகளால் துடக்குறும். முதல்வன் அவற்றால் துடக்குறான், எப்படி என்னில் நாம் கற்றநூலின் சொல்லும் பொருளும் நமது அறிவின் அமைந்து தோன்றுங்கால் அறிவானது அவற்றால் துடக்குறாமை போல என்க.

**உயிரவை ஒடுங்கிப் பின்னும் உதிப்பதென் அரன்பாலென்னில்**
**செயிருறு மலத்தி னாகும் சிதைந்ததே தென்னிற் சித்தத்(து)**
**அயர்வொழி காரியங்கள் அழியுங்காரணங்கி டக்கும்**
**பயில்தரு காரி யம்பின் பண்டுபோற் பண்ணும் ஈசன்.**

உயிரோடுங்கூடிய உலகம் இறைவனால் ஒடுங்கியபின் மீளத்தோன்றுவதேனெனில், உயிர்களின் ஆணவமலம் பரிபாகமடைதற் பொருட்டு அது மீண்டும் உளதாம். கட்டுக் கழலும் எல்லைவரை, அது நிலைபெறாமல் இடையிலே ஒடுங்குவதெதனால் எனின், உயிர்கள் பிறப்பு இறப்பின் இளைப்பு நீங்குதற்பொருட்டேயாம். உலக ஒடுக்கத்தின் கண், காரியப்பொருள்கள் அழிந்து காரணம் அழியாது நிற்றலின், அக்காரணத்தினின்று காரியமாய உலகத்தை முதல்வன் மீளத்தோற்றுவிப்பான்.

**தோற்றுவித் தளித்துப் பின்னும் துடைத்தருள் தொழில்கள் மூன்றும்**
**போற்றவே உடையன்ஈசன்புகுந்தது விகாரமென்னில்**
**சாற்றிய கதிரோன் நிற்கத் தாமரை அலரும் காந்தம்**
**காற்றிடும் கனலை நீரும் கரந்திடும் காசினிக்கே.** 52

*இறைவன் முத்தொழிலை இடையறாது செய்வதால், திரிபுறுவானென்னின், அவை நிகழு மாற்றை அறியின் அவ்வாறு கருத இடமில்லை. கதிரவன் முன்பு, தாமரை அலரவும், காந்தக்கல் நெருப்பினைக் கக்கவும், நீர்வற்றவும் காண்கின்றோம் அல்லவா ? அதுபோல இறைவன்திரு முன்பு உலகம் முத்தொழிற் படுமென் றோர்க.*

**உரைத்தஇத் தொழில்கள் மூன்றும்மூவருக்குலகம்ஓத**
**வரைத்தொரு வனுக்கே யாக்கி வைத்ததிங் கென்னைஎன்னின்**
**விரைக்கம லத்தோன் மாலும்ஏவலான் மேவி னோர்கள்**
**புரைத்ததி காரசத்தி புண்ணியம் நண்ண லாலே. 53**

*முத்தொழிற்குங் கடவுளர் மூவரென உலகங் கூறவும், ஒருவனே அவற்றைச் செய்வானென்பது எவ்வாறெனில், படைப்புக் கடவுளும், காத்தற் கடவுளும் ஒரு கடவுளது ஏவலாலே தத்தந்தொழில் செய்யும் ஆற்றலைப் பெற்றுடையர். இறைவனது ஆற்றல் அவர்களிடத்திற் பதிந்தே அவர் தொழில்களை நடத்துவிக்கின்றது. ஒடுக்கக் கடவுளராகிய பலரும் இறுதி ஒடுக்கஞ் செய்பவனாகிய ஒருவன் அருளைப் பெற்றவர்களே.*

**இறுதியாம் காலந் தன்னில் ஒருவனே இருவ ருந்தம்**
**உறுதியின் நின்றா ரென்னின் இறுதிதா னுண்டா காதாம்**
**அறுதியில் அரனே யெல்லாம் அழித்தலால் அவனால் இன்னும்**
**பெறுதும்நாம் ஆக்கம் நோக்கம்பேரதி கரணத்தாலே. 54**

*எல்லாம் ஒடுங்குங்காலத்தில் ஒடுக்குபவன் ஒருவனே யுளன். மற்றிருவருமிரார். ஏனெனில், இருவருந் தத்தம் தொழில் செய்வதில் உறுதியாய்*

நின்றால், இறுதிநேரிடாது. ஆதலால், முதல்வன் அவ்விருவரையும் பிறரையுமொடுக்கு வன், ஒடுக்கவே, முதல்வன் தவிரப் பிற யாவும் ஒடுங்குத லால், அவற்றைமீளத் தோற்றுவிப்பவனும்அம்முதல்வனே ஆதலாற் காப்பவனும் அவனேயென அறிக.

**சொன்னஇத் தொழில்கள் என்ன காரணந் தோற்றஎன்னின்**
**முன்னவன்விளையாட்டென்று மொழிதலுமாம் உயிர்க்கு**
**மன்னிய புத்தி முத்தி வழங்கவும் அருளால் முன்னே**
**துன்னிய மலங்கள் எல்லாம் துடைப்பதும் சொல்லலாமே. 55**

**அழிப்பிளைப் பாற்றல் ஆக்கம் அவ்வவர் கன்மம்எல்லாம்**
**கழித்திடல் நுகரச்செய்தல் காப்பது கன்ம வொப்பில்**
**தெழித்திடல் மலங்கள் எல்லாம் மறைப்பருட் செய்தி தானும்**
**பழிப்பொழி பந்தம்வீடு பார்த்திடின் அருளே யெல்லாம் 56**

முத்தொழிலும் இறைவன் இயற்றுவதற்குக் காரணம் யாதோவெனில், அவை முதல்வன் திருவிளையாட் டென்பதும் உண்டு. அத்தொழில்களை அவன் எளிதாகச் செய்வன் என்பது அதற்குக் கருத்து.உயிர்கட்கு இருவகை இன்பமளிக்கவும், மும்மலங்களைத்துடைக்கவும், முதல்வன் அருள் கூர்ந்தமையே மெய்க்காரணமாகும். தோற்றுவிப்பது உயிர்கள் வினையை நுகர்ந்து கழித்திடுதற் பொருட்டு; வினையை நுகர்வித்தலே காப்பு; உயிர்கள் இளைப்பாறுதற்பொருட்டு ஒடுக்கம் நிகழும்; அவற்றிற்கு இருவினையொப்புளதாக்கி மலத்தை முதிர்வித்தல் மறைப்பு, கட்டொழித்து வீடு நல்கல் அருளல்; ஆய்ந்துபார்க்கின்; கட்டும் வீடும் அருளேயாமென்பது விளங்கும்.

அருவமோ உருவா ரூபம் ஆனதோ அன்றி நின்ற
உருவமோ உரைக்கும் கர்த்தா வடிவெனக் குணர்த்திங்
கென்னின்
அருவமும் உருவா ரூபம் ஆனதும் அன்றி நின்ற
உருவமும் மூன்றும் சொன்ன ஒருவனுக்குக் குள்ள
வாமே. 57

நண்ணிடும் உருவம் என்னின் நமக்குள உருவம்போலப்
பண்ணிட ஒருவன் வேண்டும் இச்சையேல் பலரும் இச்சை
கண்ணிய உருவம் கொள்ளேம் யாம்பெருங் கடவுள் தானும்
எண்ணிய யோக சித்தர் போலுரு இசைப்பன்காணே. 58

வித்தக யோக சித்தர் வேண்டுருக் கொள்ளு மாபோல்
உத்தமன் கொள்வன் என்னின் அவர்களில் ஒருவனாவன்
அத்தகை யவர்கள் எல்லாம் ஆக்குவ தருளால் ஆங்கு
வைத்தது மாயை யென்னின் வடிவெலாம் மாயை யாமே.
59

இறைவன் வடிவம் அருவமோ, அருவுருவமோ, உரு வமோ, எனக்கு உணர்த்தல் வேண்டுமென்னில் கூறுதும். ஒருவனாய முதல்வனுக்கு மூவகை வடிவங்களும் உள்ளன. இறைவனுக்கு உருவமுண் டெனில், நமக்கு உருவம் வகுப்ப ஒருவன் இருப்பது போல, அவனுக்கும் உருவம் உணடாக்க ஒருவன் வேண்டுமெனில், அவன் தன் விருப்பப்படி உருவங் கொள்ளுவன் ஆகலின், வேண்டாவென்க. யோக சித்தர்கள் நினைத்த உருவங்கொள்ளுதலின் இறைவனைப் போல அவர்களும் தம்வயமுடை யவரே என்னில், அவர்கள் இறைவன் திருவருளால் தமக்கு ஒரு வடிவம் உடையராய் நின்றே பிறிதொருவடிவங்

கொள்வர்; ஆத லால் அவர்கள் இறைவனைப் போலத் தம் வயமுடையவர் அல்லர்.

**மாயைதன் மலத்தைப் பற்றி வருவதோர் வடிவ மாகும்**
**ஆயஆ ணவம் அகன்ற அறிவொடு தொழிலை ஆர்க்கும்.**
**நாயகன் எல்லா ஞானத் தொழில்முதல் நண்ண லாலே**
**காயமோ மாயை என்று காண்பது சத்தி தன்னால். 60**

அவர்கள் வடிவம் மாயாவடிவம். எல்லா வடிவங்களும் மாயா காரியமே. உயிர்க்கு விளக்கம் எய்த மாயா வடிவம் வேண்டப்படுதல் போல, முதல்வனுக்கு மாயா வடிவம் வேண்டியதில்லை. மாயாவடிவம் மலங் காரணமாக வருவதோர் வடிவம். யோகிகள் முதலிய உயிர்களெல்லாம் ஆணவமலத்தோடு கூடிய சிற்றறிவினர். இறைவன் ஆணவம் அற்ற அறிவிலே தங்கி நின்று உணர்த்துந் தொழிலுடையோனாய் எல்லா அறிவும், எல்லாச்செயலும், எல்லா முதன்மையுமுடையனாதலாலே, மலத்தார்க்குரிய மாயாவடிவங் கொண்டு ஒன்றை அறிவானல்லன். தனது பேராற்றலினாலே எல்லாம் அறிவன்; அவன் வடிவம் சிவசத்தியே. அது நமது மாயாவடிவம் போல்வதோ எனில், மாயா வடிவங்கள் நில்லாது அழிதல்போலச் சிவசத்தி அழிவும் மாற்றமும் உடையதன்று. ஆதலால் சத்தி வடிவை மாயா வடிவிற்கு ஒப்பிடுதல் தவறு.

**சத்தியே வடிவென் றாலும் தான்பரி ணாம மாகும்**
**நித்தமோ அழியும் அத்தால் நின்மலன் அருவே யென்னின்**
**அத்துவா மார்க்கத் துள்ளான் அலனிவன் அருமை தன்னைப்**
**புத்திதா னுடையை போல இருந்தனை புகலக்கேள் நீ. 61**

**உலகினில் பதார்த்த மெல்லாம்உருவமோட ருவமாகி**
**நிலவிடும் ஒன்றொன் றாகா நின்றஅந் நிலையே போல**
**அலகிலா அறிவன்தானும் அருவமே யென்னில் ஆய்ந்து**
**குலவிய பதார்த்தத் தொன்றாய்க் கூடுவன் குறித்திடாயே. 62**

*இறைவன் அருவத் திருமேனியே உடையனென்னில் அருவம், உருவம் என்றுபேசுவது சடப்பொருட்கே. ஆறுபெருவழியையுங் கடந்த முதலவனியல்பினை அவற்றுட்படும் சடப்பொருள்களோடு ஒப்பவைத்துப் பேசுதல் பொருந்தாது. உலகப் பொருள்கள் அருவம், அருவுருவம். உருவம் என மூவகைப்படும். உருவப் பொருள் அருவமான இடத்து வேறு பெயர் பெறும். அருவப்பொருளும் அனையதே, இறைவனை அருவ மென்னில் சடமாய அருவப் பொருள்களுள் ஒன்றாக அவன் கருதப்படுவான். அது தவறு.*

**பந்தமும் வீடு மாய பதபதார்த் தங்கள் அல்லான்**
**அந்தமும் ஆதி யில்லான் அளப்பிலன் ஆத லாலே**
**எந்தைதான் இன்ன னென்றும் இன்னதா மின்ன தாகி**
**வந்திடான் என்றும் சொல்ல வழக்கொடு மாற்ற மின்றே. 63**

**குறித்ததொன் றாக மாட்டாக் குறைவிலன் ஆத லானும்**
**நெறிப்பட நிறைந்த ஞானத் தொழிலுடை நிலைமை யானும்**
**வெறுப்பொடு விருப்புத் தன்பால் மேவுதல் இலாமையானும்**
**நிறுத்திடும் நினைந்தமேனி நின்மலன் அருளி னாலே. 64**

*இறைவன் கட்டும் வீடும் உடைய உயிரினியல்பும் உலகத்தின் இயல்பும் உடையனல்லன். முதலும் முடிவு மில்லாதவன். ஆதலால் நம் சுட்டறிவின்பாலனவாய அளவைகளால் அவன் அளந்தறியப்படான். நமது*

அறிவிற்குப் புலனாகும் முத்திறவடிவங்களுள், அவனை இன்ன வடிவமுயையவன்; இன்னதாகான் என்று அறுதியிட்டுக் கூறுதல் நமக்கியலாததே. இயலாததாகவே அதைப்பற்றி வினாவுமில்லை; விடையுமில்லை.

இறைவன் சுட்டிறந்தவன், முதல் நடுவிறுதி யில்லாதவன், முற்றறிவு முற்றுச் செயலுடையான், விருப்பு வெறுப்பிலாதான், உயிர்க்குயிராய்நிற்பவன், பிறரால் அறிவரியன், கருதியதொரு திருமேனியைக் கொள்ளமுடியாத குறைவிலன் ஆதலால் தானினைந்ததொரு திருமேனியை அருளினாலே தனதாகக் கொண்டருளுவனென அறிக.

(உயிர் உடம்பை யியக்குதல்போல், முதல்வன் உலகை யியக்குதல் கூடுமாதலின், முதல்வனுக்கு வடிவம் வேண்டாவென்னில், உருவெடுத்த உயிர்கட்குத் தோன்றியருளுதற் பொருட்டு அவன் திருமேனி கொள்ளுதல் வேண்டும். அருவமாய மாயையை உள்நின்றியக்கி அதற்குருவுகொடுத்த இடத்தே, அவ்வுரு, அவனது திருமேனி யெனப்படும். மறைப்புத் தொழில் அவனது ஊன நடனமெனப்படும். சத்தியுஞ் சிவமுமாய் நின்றே இருவகையாக உலகை இயக்குதலால், அவன் ஆண் பெண் வடிவுடையனாகவுங் கருதப்படுவான்.)

**ஆரணம் ஆக மங்கள் அருளினால் உருவு கொண்டு**
**காரணன் அருளா னாகில் கதிப்பவர் இல்லை யாகும்**
**நாரணன் முதலா யுள்ள சுரர்நரர் நாகர்க் கெல்லாம்**
**சீரணி குருசந் தானச் செய்தியும் சென்றி டாவே.** 65

*அன்பர் நினைந்த வடிவொடுதோன்றி அவர்க்கு மறை நூலென்னும் அருட்பனுவல்களை யுணர்த்தா விடின், உயிர்கள் மெய்யுணர்ந்து கதியடையமாட்டா. திருமால் முதலிய தேவர்களுக்கும் மக்கட்கும். நாகர் முதலியோர்க்கும் ஆசிரிய பரம்பரை ஏற்படமாட்டா.*

**உருவருள் குணங்க ளோடும் உணர்வருள் உருவில்**
**தோன்றும்**
**கருமமும் அருள் அரன்றன் கரசர ணாதி சாங்கம்**
**தருமருள் உபாங்க மெல்லாம் தானருள் தனக்கொன்றின்றி**
**அருளுரு உயிருக்கென்றே ஆக்கினன் அசிந்த னன்றே 66**

*அருள்பற்றிய இறைவன் திருமேனி கொள்ளுதலின் அவனது உறுப்புக்களெல்லாம் அருள்மயமே. செயல்களும் குணங்களும் அருளே. துணை உறுப்புக்கள் முதலிய எல்லாம் அருளே. உருக்கொண்டமையால் இறைவன் அளவுட் படுவான் போல் தோன்றினும் உண்மையாக அவன் சுட்டிறந்த முதல்வனே.*

**உலகினை யிறந்து நின்ற தரனுரு வென்ப தோரார்**
**உலகவ னுருவில்தோன்றி யொடுங்கிடு மென்றும் ஓரார்**
**உலகினுக் குயிரு மாகி யுலகுமாய் நின்ற தோரார்**
**உலகினிலொருவனென்பர் உருவினையுணராரெல்லாம் 67**

**தேவரி னொருவன் என்பர் திருவுருச் சிவனைத் தேவர்**
**மூவராய் நின்ற தோரார் முதலுருப் பாதி மாதர்**
**ஆவது முணரார் ஆதி அரிஅயற் கறிய ஒண்ணா**
**மேவரு நிலையும் ஓரார் அவனுரு விளைவும் ஓரார். 68**

போகியா யிருந் துயிர்க்குப்போகத்தைப் புரிதல்ஓரார்
யோகியா யோக முத்தி உதவுதல் அதுவும் ஓரார்
வேகியா னாற்போற் செய்த வினையினை வீட்டல் ஓரார்
ஊகியா மூட ரெல்லாம் உம்பரி னொருவ னென்பர். 69

ஒன்றொடொன் றொவ்வா வேடம் ஒருவனே தரித்துக்
கொண்டு
நின்றலால் உலகம் நீங்கி நின்றனன் என்றும் ஓரார்
அன்றிஅவ் வேட மெல்லாம் அருள்புரி தொழி லென்று ஓரார்
கொன்றது வினையைக் கொன்று நின்றவக் குணமென்று
ஓரார். 70

நாயகன் கண்ந யப்பால் நாயகி புதைப்ப எங்கும்
பாயிரு ளாகி மூடப் பரிந்துல கினுக்கு நெற்றித்
தூயநேத் திரத்தி னாலே சுடரொளி கொடுத்த பண்பில்
தேயமா ரொளிக ளெல்லாஞ் சிவனுருத் தேசதென்னார் 71

கண்ணுதல் யோகி ருப்பக்காமன்நின் றிடவேட்கைக்கு
விண்ணுறு தேவ ராதி மெலிந்தமை யோரார்மால்தான்
எண்ணிவேள் மதனை யேவ எரிவிழித் திமவான்பெற்ற
பெண்ணினைப் புணர்ந்து யிர்க்குப் பேரின்பம் அளித்தது
ஓரார். 72

அவன்வடிவங்கள் போகமீதற் பொருட்டும், வினையினை யொழித்தற் பொருட்டும். வீடு அருளுதற் பொருட்டுங் கொள்ளப்படு மாதலின், அவை மூவகைப்படுமென்ப, இவ்வுண்மையறியாதார், வினையால் உருவெடுத்த தேவருள் ஒருவனாக முதல்வனை யெண்ணியிடர்ப்படுவர். அவர் அரனது திருவருளுருவம் உலகிற்கப் பாற்பட்ட தென்பதை

யுணரார். அவனது அருள்வெளிக்குள் உலகம் தோன்றி ஒடுங்கு மென்பதையும் உணரார். உலகை யியக்குவான் அதனோடு இரண்டறக்கலந்து நிற்கும் அவன் நிலையையும் உணரார். இறைவன் தேவர் மூவராயும் நின்றமையும் அறியார். அவன்சிவமுஞ் சத்தியுமாய் நிற்பதைத் தனது மங்கை பாகவடிவிற் காட்டியதையும் அறியார். அயனரி அடிமுடி தேட நின்று அளவிறந்த தன்மை யுணர்த்தி யதையுமறியார்.

அவர், அவன் உருவிற்பட்டஅடி, யாவர் மேலும்பட்ட தென்ற வரலாற்றினுண்மை யுணரார். முதல்வி திருக்கண் புதைத்தபோது இருளும், நெற்றிக்கண் திறந்தபோது ஒளியும், எங்கும் பரவினமையால், உலகின்கணுள்ளஒளிகளெல்லாம் இறைவன் திருமேனி ஒளியென உணரார். இறைவன் யோகத்தமர்ந்தபோது, காமன் தன் தொழில் நடாத்தியும், விண்ணவர் முதலிய உயிர்கள் இன்ப நுகர்ச்சி யிழந்தமையும், காமனை யெரித்து மலை மகளை மணந்த ஞான்று உயிர்கள் இன்பமெய் தினமையும் உணரார்.

அவர் ஒன்றொடொன்று ஒவ்வாத பல வேடங்களையும் ஒரு முதல்வனே மேற்கொண்டு செயலியற்றுதலால் அவன் உலகப் பொருள்களுளொன் றெனப்படாது அவற்றின் வேறாய பெற்றியனென்பதை அறியார். வேடங்கொள்வது அருட்டொழி லென் பதிறாயர். உணராமையின் அவர்கள் முதல்வன் திருவுருக்கோடல்பற்றக் குறைகூறுவர்.

**படைப்பாதித் தொழிலும் பத்தர்க் கருளும் பாவனையும்நூலும்**
**இடப்பாக மாதராளோ டியைந்துயிர்க் கின்பமென்றும்**
**அடைப்பானாம் அதுவும் முத்தி யளித்திடும் யோகும் பாசம்**
**துடைப்பானாந் தொழிலும் மேனி தொடக்கானேற் சொல்லொ**
**ணாதே. 73**

*இறைவன் திருமேனி கொள்ளாவிடத்து ஆதிப் படைப்புத் தொழிலும், அன்பர்க்கருளுதலும், கலையறிவளித்தலும், இருவகை இன்பமிகுதலும், ஒடுக்கஞ் செய்தலும் ஆசிரிய வழிமுறையும் நிகழமாட்டா.*

**உருமேனி தரித்துக் கொண்ட தென்றலும் உருவி றந்த**
**அருமேனி யதுவுங் கண்டோம் அருவுரு வான போது**
**திருமேனி உபயம் பெற்றோம்செப்பிய மூன்றும் நந்தங்**
**கருமேனி கழிக்க வந்த கருணையின் வடிவு காணே. 74**

*இறைவற்கு உருவமுளதாகவே, அவ்வுருவ மொடுங்கு மிடத்துள்ள அருவமும் அவன் திருமேனியே. இரண்டிற்கு மிடையேயுள்ள அருவுருவத் திருமேனியும் அவனுக்குண்மைபெற்றாம். மூவகைத்திருமேனியும் நமது கருமேனி கழிக்க வந்த கருணையின் வடிவுகளே.*

**அத்துவா மூர்த்தியாக அறைகுவ தென்னை என்னின்**
**நித்தனாய் நிறைந்த வற்றின் நீங்கிடா நிலைமை யானும்**
**சித்துடன் அசித்ததுக் கெல்லாம் சேட்டித னாத லானும்**
**வைத்தவாம் அத்துவாவும்வடிவெனமறைகளெல்லாம். 75**

*அத்துவாக்களை இறைவன் திருமேனி யென நூல்கள் கூறுவதற்கேது என்னை யெனில், அவற்றுள்*

நிறைந்து கலந்து அவையாய் நிற்றலானும், அறிவுள்ளது மில்லது மாய உலகமனைத்தையும் உடன்நின்று செலுத்துதலானும், அவையல்லனாயும், அவற்றை அவன் திருமேனி யென நூல்கள் இயம்பும்.

**மந்திர மத்து வாவின் மிகுத்தொரு வடிவ மாகத்**
**தந்ததென் அரனுக்கென்னிலசகத்தினுக்கு உபாதானங்கள்**
**விந்துமோ கினிமான் மூன்றாம் இவற்றின்மே லாகிவிந்துச்**
**சிந்தையா ரதீத மான சிவசத்தி சேர்ந்து நிற்கும். 76**

**சுத்தமாம் விந்துத் தன்னில் தோன்றிய ஆத லானும்**
**சத்திதான் பிரேரித்துப்பின்தான் திட்டித்துக் கொண்டே**
**அத்தினாற் புத்தி முத்தி அளித்தலால் அரனுக் கென்றே**
**வைத்தவாம் மந்திரங்கள் வடிவென மறைகளெல்லாம் 77**

**மந்திர மதனிற் பஞ்ச மந்திரம் வடிவ மாகத்**
**தந்திரம் சொன்ன வாறிங் கென்னெனிற் சாற்றக்**
**முந்திய தோற்றத்தாலும் மந்திரமூலத் தாலும்**
**அந்தமில் சத்தி யாதிக் கிசைத்தலு மாகு மன்றே. 78**

பெருவழிகள் ஆறனுள் மந்திரத்தை இறைவனுக்குச் சிறப்புத் திருமேனி யென்பதெற்றா லெனின், மந்திரங்கள் தூய மாயையிலெழுவன. தூயமாயை சிவசத்தியின் நேரான சார்புடையது. சிவசத்தி மந்திரத் தலைவர்களை நிலைக்களமாகக் கொண்டு, மந்திரம் பயில்வார்க்கு இருவகை யின்பங்களையும் உதவும்; இக் காரணம்பற்றி மந்திரங்கள் இறைவனுக்குச் சிறந்த வடிவமாயின. மந்திரங்களுட் சிறந்த பஞ்சப் பிரம மந்திரங்கள்

மிகச்சிறப்பாய வடிவங்களெ னப்படும். அவை பிற மந்திரங்கட்கு முற்பட்டன; அவற்றிற்கு அடிப்படை யுமாவன; அழிவற்ற ஆதிசத்திக்குத் திருமேனி யாவன. இங்ஙனம் மந்திர முதலியன இறைவனுக்குத் திருமேனி யெனப்படினும். அவை உபசாரமே யென அறிக.

## மூன்றாம் அதிகரணம்

**அயன்றனை ஆதி ஆக அரனுரு வென்ப தென்னை**
**பயந்திடுஞ் சத்தி யாதி பதிதலாற் படைப்பு மூலம்**
**முயன்றனர் இவரே யாயின் முன்னவ னென்னை முற்றும்**
**நயந்திடும் அவனி வர்க்கு நண்ணுவ தொரோ வொன்**
**றாமே. 79**

**சத்திதான் பலவோ வென்னில் தானொன்றே அனேகமாக**
**வைத்திடுங் காரி யத்தான் மந்திரி யாதிக்கெல்லாம்**
**உய்த்திடு மொருவன் சத்தி போலரன் உடைய தாகிப்**
**புத்திமுத் திகளை யெல்லாம் புரிந்தவன் நினைந்தவாறாம்.80**

அயன் முதலிய கடவுளர் உருவையும் இறைவன் உருவோடொப்ப நூல்கள் இயம்புவதெதனாலெனின். முதல்வனது சத்திகள் அக்கடவுளர்மாட்டுப் பதியப் பெற்றமையால் அங்ஙனம் அவை கூறும். படைப்பு முதலிய தொழில்கட்கு அவர்கள் தாமே தலைவ ரெனின், முதல்வனொருவன் அவரின் வேறாக வேண்டப்படானென்பது முடியும்; பலதெய்வக் கோட்பாடு தவறாகலின், ஐந்தொழிற்குந் தலைவனாய் ஒருவனே அக்கடவுளர் வாயிலாக ஒவ்வொரு தொழிலையும் இயற்றுவிப்பனெக் கொள்க. சத்திகள் பலவாமோ எனின், அரசனது ஆட்சி ஆற்றல் ஒன்றே,

அமைச்சர், படைத்தலைவர், நடுவர், பாடிகாவலர் முதலாயினார்பால் நின்று செய்யுந்தொழில் வேறு பாட்டாற் பலவகைத்தாய்ப்பல்பெயர் பெற்றமை போல, இறைவனது சத்தி ஒன்றே தொழில் வேறுபாட்டாற் பலதிருப்பெயரோடு திகழ்ந்து பயனளிப் பதென அறிக.

**சத்திதன் வடிவே தென்னில் தடையிலா ஞான மாகும்**
**உய்த்திடு மிச்சை செய்தி இவைஞானத் துளவோ வென்னின்**
**எத்திறம் ஞான முள்ள தத்திறம் இச்சை செய்தி**
**வைத்தலான் மறைப்பில் ஞானால் மருவிடுங் கிரியை**
**எல்லாம். 81**

சிவசத்தியின் வடிவம் யாதெனில், சுட்டிறந் தறிதலாகிய இறைவனது பேரறிவே. அதுவே பராசத்தி யெனப்படும். அதுவே மூவகை மாயையினும் பொருந்தி ஐந்தொழிற்கும் வித்தாயகாலை, ஆதிசத்தி யெனப்படும். இதனைப் பராசத்தியின் கூறென்பர். அறிவின்கண், விழைவு, செயல்களு முளவோவென்றால், அறிவு எவ்வாறுளதோ அவ்வாறே விழைவு செயல்களும் நிகழுமாதலின், அவையெல்லாம் இறைவனது தடையில்லாப் பேரறிவில் அடங்கியனவே.

**ஒன்றதாய் இச்சாஞானக் கிரியையென் றொருமூன் றாகி**
**நின்றிடுஞ் சத்தி இச்சை உயிர்க்கருள் நேச மாகும்**
**நன்றெலாம் ஞான சத்தி யால்நயந் தறிவன் நாதன்**
**அன்றருட்கிரியை தன்னால் ஆக்குவன் அகிலமெல்லாம். 82**

**சீவனும் இச்சா ஞானக் கிரியையாற் சிவனையொப்பன்**
**ஆவனென் றிடின்அனாதி மலம்இவற் றினைம றைக்கும்**
**காவல னிவன்செய் கன்மத் தளவினிற் கொடுப்பக்காண்பான்**
**பாவியாம் புத்திமுத்திப் பயன்கொளும் பண்பிற்றாகும் 83**

ஒரு சத்தியே விழைவு, அறிவு, செயலென முத்திறப்பட்டு நிற்கும். உயிர்கட்கு மலத்தை நீக்கிச் சிவமாந்தன்மை யளிக்கும் இறைவனது கருணையே விழைவு எனப்படும். உயிர்கட்குரிய நன்மைகளெல்லாம் விரும்பி அறிதலே அறிவு. அவற்றை அறிந்தவாறே செய்விக்கும் ஆற்றலே செயல். விழைவு, அறிவு, செயல் என்பன உயிர்க்கு முள்ளனவாதலால், சிவனுஞ் சீவனு மொப்பரென்னாமோவெனில், உயிர்களின் முத்திற வாற்றல் களை மலமானது மறைக்கும்; முதல்வன் உயிர்களின் வினைக்கு ஏற்பப் பயனளிப்ப, அதனால், உயிர் பொருள்களையறிந்து நுகரும்; வினையால் வருவதாய உலக நலனும் வினைக்கழிவின் வரும் வீடும் இறைவன்பால் உயிர்கள் பெருந்தன்மையன. ஆதலால் சீவன் சிவனின் வேறென அறிக.

**ஞானமே யானபோது சிவன்தொழில் ஞானமொக்கின்**
**ஈனமில் சதாசி வன்பேர் ஈசனாம் தொழில் தேறின்**
**ஊனமேற் கிரியை வித்தை உருத்திரன் இலயபோகம்**
**ஆனபே ரதிகா ரத்தோ டதிகர ணத்த னாமே.** 84

**வித்தையோடீசர் சாதாக் கியஞ்சத்தி சிவங்கள் ஐந்துஞ்**
**சுத்ததத் துவஞ்சி வன்தன் சுதந்தர வடிவ மாகும்**
**நித்தமென் றுரைப்பர் காலம் நீங்கிய நிலைமை யாலே**
**வைத்திலர் முற்பிற் பாடு வருவித்தார் கருமத் தாலே.** 85

இறைவனது விழைவானது எக்காலத்தும் ஒரு தன்மையாயிருக்கும். ஓரோர்கால் அவனது அறிவாற்றல் மாத்திரம் பொதுவாக நிகழும். செயலாற்றல் மாத்திரம் பொதுவாக நிகழும், இவை இரண்டும் ஒத்தும் நிகழும். ஒன்றினுமற்றொன்று சிறப்பாகவும் நிகழும். இறைவன் சிவ முதலின்கண் தனது அறிவாற்றலை மட்டும்

*பொதுமையால் நிகழ்த்துவன். அருண் முதலின் (சத்திதத்துவத்தின்) கண், அவனது செயலாற்றல் பொதுமையால் நிகழும். இந்த இரண்டு முதலும் ஒடுக்க முதல் எனப்படும். அருட் சிவ முதலிலே இறைவனது அறிவுஞ் செயலும் ஒத்து நிகழ்ந்து படைப்பன வற்றிற்கெல்லாம் பாதுகாப்பாய் விளங்கும்; இது காப்பு முதல் எனப்படும். அரசு முதலிலே இறைவனது செயல் சிறப்பாக மிகுதிப்படும். தூயபுலத்திலே இறைவனது அறிவாற்றல் சிறப்பாக மிகுதிப்படும். அரசு முதலிலே தூயமாயா உலகத்தோற்றத்தின் பொருட்டுச் செயல் நிகழும். தூய புலத்திலே கீழுள்ள தத்துவங்களி நிகழ்தற்பாலதாகலின, ஆண்டு அறிவு சிறந்திலங்கும். இந்த இரண்டு முதலும் வளர்ச்சி முதல் எனப் பேசப்படும். இங்குக் கூறிய ஐந்து முதல்களும் தூய மாயையின் படிப்படியான விரிவாய் முதல்வனது சொந்த வடிவமெனப்படும். அவன் நேரே, நிலைக்களமாகக் கொள்ளுதற்குரிய இடங்கள் அவையென உணர்க. முன் அவை கால தத்துவத்திற்கப்பாற்பட்டவை. முன் பின்னாக இவற்றைப் பேசுவது அவற்றின் தொழிலின் பகுதியை வைத்தென்க.*

**ஒருவனே இராவ ணாதி பாவக முற்றாற் போலத்**
**தருவனிவ் வுருவ மெல்லாம் தன்மையும் திரியா னாகும்**
**வரும்வடி வெல்லாஞ் சத்தி சத்திதான் மரமுங் காழ்ப்பும்**
**இருமையும் போல மன்னிச் சிவத்தினோ டியைந்து நிற்கும். 86**

**பொன்மைநீ லாதி வன்னம் பொருந்திடப் பளிங்க வற்றின்**
**தன்மையாய் நிற்குமாபோல் சத்திதன் பேதமெல்லாம்**

**நின்மலன் தானாய்த் தோன்றி நிலைமையொன் றாயே நிற்பன**
**முன்னருட்சத்தி தன்பால் முகிழ்க்குந்தான் முளையா**
**னன்றே. 87**

ஒருவனே இராமன், இராவணன் முதலிய பலவேடங்கள் பூண்டமைபோல, இறைவன் பல வடிவு களைத் தாங்கி நின்றாலும், அவற்றால் தன்தன்மையில் வேறு பாடிலன், பலவடிவுகட்கும் காரணம் அவனது ஆற்றலாய சிவசத்தியே. சத்தியும் சிவமும் மரமும் வயிரமும் போல இருவகையாக இயைந்துநிற்கும். பொன்னிறம், கருநிறம் முதலியவை களைச் சார்ந்த பளிங்கானது அவற்றின் தன்மை உடையதாய்த் தோன்றுமாறுபோல, சத்தி வேற்றுமைகளெல்லா வற்றோடு மியைந்த முதல்வனும் அவ்வேறுபாடு களினியல் புடையோனாய்த் தோன்றினும். உண்மை யில் ஒரு தன்மையனாகவே நிற்பான். அருட் சத்தி வாயிலாகவே அவன் தோன்றுவான்; வேறாகத் தோன்றான்.

**சத்தியுஞ் சிவமு மாய தன்மைஇவ் வுலக மெல்லாம்**
**ஒத்தொவ்வா ஆணும் பெண்ணும் உணர்குண குணியுமாகி**
**வைத்தனன் அவளால் வந்த ஆக்கமிவ் வாழ்க்கையெல்லாம்**
**இத்தையும் அறியார் பீட லிங்கத்தி னியல்பு மோரார். 88**

இறைவன் சத்தியுஞ் சிவமுமாய இருவேறு தன்மைப் பட்டு நிற்பதனாலே, இவ்வுலகமெல்லாம் ஒருபுடையொத்து ஒருபுடை யொவ்வாத ஆணும் பெண்ணுமாகவும், குணமுங்குணியுமாகவும் அமைந் துள்ளன. உலக வாழ்க்கை யெல்லாம் சத்தி

சிவத்தினோடியைந்ததனால் வந்த ஆக்கமே, இதனை யறியாதார் அருட்சிவத்திற்கறி குறியாகிய பீடமும் இலிங்கமுமாய திருவடிவத்தின் றன்மையுணரார்.

**சிவன்அரு உருவும் அல்லன் சித்தினோ டசித்தும் அல்லன்**
**பவமுதல் தொழில்க ளொன்றும் பண்ணிடு வானும் அல்லன்**
**தவமுதல் யோக போகம் தரிப்பவ னல்லன் தானே**
**இவைபெற இயைந்து மொன்றும் இயைந்திடா**
**இயல்பினானே. 89**

உலகின் வேறாக முதல்வனைக் கருதுமிடத்து, அவன் உருவனுமல்லன், அருவனுமல்லன்; அறிவுடையது, இல்லது எனப்படும் உலகப்பொருள் யாதுமல்லன் படைப்பு முதலிய தொழில்களொன்று மியற்றாதவன். தவம், யோகம், போகம் முதலிய ஒன்றும் மேற்கொள்ள வேண்டியவனுமல்லன்; இவற்றை உயிர்களின் பொருட்டுப் பொருந்தினும் அவற்றைத் தன்பொருட்டு வேண்டாத் தனித்தன்மையன். குணங்குறிகளில்லாதவன். இயல்பாகவே கட்டற்றவன் ஒருவனே யாயுள்ளோன். இன்ப வடிவன் என்றறிக.

## இரண்டாம் சூத்திரம்

**உலகெலா மாகி வேறாய் உடனுமாய் ஒளியாய் ஓங்கி**
**அலகிலாஉயிர்கள் கன்மத்தாணையின் அமர்ந்து செல்லத்**
**தலைவனாய் இவற்றின் தன்மை தனக்கெய்த லின்றித்தானே**
**நிலவுசீர் அமல னாகி நின்றனன் நீங்கா தெங்கும். 90**

இறைவன் உலகத்தைத் தொழிற்படுத்து மிடத்து உயிர்களோடு கலந்தும் உடனாகியும் வேறாயு

முள்ளான்; அவன் ஒன்றினுங் கலவாது நின்ற தனிநிலையிற் சிவன் எனப்படுவன். உயிர்களோடு கலந்த நிலையிற் சத்தி எனப்படுவன். ஐந்தொழிலியற்றுங்கால் பதியெனப் பெயர் பெறுவன். உடலில் உயிர்போலக் கலந்தும், உலகின் வேறாய கதிரவன்போல வேறாகியும், அறிவுங் கண்ணொளியும் போல உடனாகியும் இறைவன் திகழ்கிறான். அவனது கலப்பு நிலையையே வடநூலார் அத்வைதமென்பர். தமிழிலே, அகரம் பிற எல்லா எழுத்தொலிகளோடும் நுட்பமாய்க் கலந்துள்ள நிலையே அதற்கு உதாரணமாக எடுத்துப் பேசப்படும்.

இறைவன் உயிர்க்குயிராய் அறிவினை விளக்குவதினால் கலப்புநிலை யுற்றோனாகியும், உயிர்கள் வினைக்கீடாகப் போக்கு வரவு செய்விக்குந் தனது அறிவாற்றலின் தொடர்பால், உயிர்களுடனிற்குந் தலைவனாயும், உயிர், தளை யென்பவற்றின் றன்மை தனக்கெய்துதலின்றித் தான் என்றுமொரு தன்மை யனாயும் குற்றமற்ற பேரறிவினனாயும், எவ்விடத்து முள்ள தனி முதலாயும், இலங்குகின்றான்.

## முதல் அதிகரணம்

**ஒன்றென மறைக ளெல்லாம் உரைத்திட உயிர்கள் ஒன்றி**
**நின்றனன் என்று பன்மை நிகழ்த்துவ தென்னை யென்னின்**
**அன்றவை பதிதான் ஒன்றென் றறையும்அக் கரங்கள்**
**தோறும்**
**சென்றிடும் அகரம் போலநின்றனன் சிவனுஞ்சேர்ந்தே 91**

**உருவொடு கருவி யெல்லாம் உயிர்கொடு நின்று வேறாய்**
**வருவது போல ஈசன் உயிர்களின் மருவி வாழ்வன்**
**தருமுயி ரவனை யாகா உயிரவை தானு மாகான்**
**வருவம னிவைதா னாயும் வேறுமாய் மன்னி நின்றே. 92**

மறைகளெல்லாம் பொருள் ஒன்றென்னு முழங்கவும், பரம்பொருள் உயிர்களோடு இரண்டறக் கலந்து நின்றதென்று மொழிந்து பல பொருளுண்மை செப்புதல் மறைக்கருத்திற்கு மாறாகுமன்றோ எனின், அவை பொருள் ஒன்றென்றது கடவுள் ஒன்றென்ற கருத்துப்பற்றியே. ஒலி புலனாகாத அகரம் எல்லா எழுத்தொலிகளோடுங் கலந்து நின்றாற்போலக் கடவுளும் உயிர்களில் விரவி நிற்கின்றானென்க. உடம்பினையும் பிறகருவிகளையும் உயிரானது சேர்ந்து நின்றியக்கினாலும், தன்மையால் அது அவற்றின் வேறாதல்போல, முதல்வனும் உயிர்களின் வேறாவன் உயிர்கள் அவன் ஆகமாட்டா; அவன் உயிர்கள் ஆக மாட்டான்.

## இரண்டாம் அதிகரணம்

**இருவினை இன்பத் துன்பத் திவ்வுயிர் பிறந்தி றந்து**
**வருவது போவ தாகும் மன்னிய வினைப்பய யன்கள்**
**தருமரன் தரணி யோடு தராபதி போலத் தாமே**
**மருவிடா வடிவுங் கன்ம பலன்களும் மறுமைக் கண்ணே. 93**

உயிர்கள் இருவினைப் பயனாகிய இன்ப துன்பங்களை நுகர்தற் பொருட்டு இவ்வுலகிற் பிறவியெடுத்தலும், மேல் கீழுலகங்களுக்குச் செல்லுதற்பொருட்டு இறத்தலும், மீள இவ்வுலகத்திற

பிறத்தலும் உடையன. வினைப்பயனாகிய உடம்பும், இன்பதுன்பங்களும் சடமாகலின், அவைதாமே உயிர்களை வந்து அடையமாட்டா. ஆதலால் அவற்றை இறைவனே தருவன். நோய்க்கு மருந்து கொடுக்கும் மருத்துவன் போலவும், குற்றத்துக்கு ஒறுத்தல் செய்யும் அரசன் போலவும், முதல்வன் திகழ்கின்றானென அறிக.

**இருவினை என்னை இன்பத் துன்பங்கள் இயல்ப தென்னின்**
**ஒருதன்மை இயல்புக் குள்ள தொருவனுக் கிரண்டு செய்தி**
**வருவதென் மலருந் தீயும் மருவலின் வாசம் வெம்மை**
**தருவதென் நீரென் செய்து தானியல் பாகு மன்றே 94**

**தன்னியல் பொழியப் பூவும் தழலும்வந் தணைய நீரின்**
**மன்னிய திரண்டு செய்தி வருமிரு வினையி னானும்**
**உன்னிய இன்பத் துன்பம் உறும்உயி ருணர்வி லாத**
**துன்னிய அசித்தை இன்பத் துன்பங்கள் சூழ்ந்திடாவே. 95**

இன்ப துன்பங்கள் நமக்கு இயல்பாயுள்ளன வாமன்றி அவற்றிற்குக் காரணம் இருவினை களல்லவெனின், இன்பத்தை அல்லது துன்பத்தை நாடுதலாகிய ஒருதன்மையே நமக்கு இருப்பின், அது நம்மியல்பு என்பது பொருத்தம். அவ்வாறன்றி மாறுபட்ட இருதன்மை இயல்பாகாது. நீருக்கு இயற்கையில் இல்லாத மணமும் வெப்பமும் முறையே மலரின்சார்பாலும் நெருப்பின் சார்பாலும் ஏற்படுவது போல, ஓரியல்புடைய ஒன்றிற்குப் பிறவற்றின் சார்பால், மாறுபட்ட தன்மைகள் வந்து எய்துமெனின், இரு தன்மையுடைமை இயற்கை யன்றென்பதே முடிந்தது. இன்ப துன்பத்திற் கேதுவாய செயல்நிலையே இருவினையென்றோதியவாறு காண்க.

இன்ப துன்பங்களை உடல் வாயிலாக நுகரவல்லது உயிரேயன்றி உடலன்றாகலின். அவற்றிற்குக் காரணம் உயிரின் செயலே யாதல்வேண்டும். இன்பம் துன்பம் எனநுகர்ச்சி இருவகையாதலின் வினையும் இரண்டாயிற்று.

**இம்மையின் முயற்சி யாலே இருநிதி ஈட்டி இன்பம்**
**இம்மையேநுகர்வர் செய்தி இலாதவர் பொருளுமின்றி**
**இம்மையே இடரு ழப்பர் வேறிரு வினைய துண்டேல்**
**இம்மையின் முயற்சி யின்றி எய்திட வேண்டும் இங்கே. 96**

**இருவினைச் செயல்காண் இம்மை இரும்பொரு ளின்பம் வேண்டி**
**வருவினை செய்யுங் காலை மடிவரும் மடியு மின்றித்**
**தருவினை யதனில் அத்தந் தானறும் துயருந் தங்கும்**
**ஒருவினை செய்யா தோரும் உடையர்இவ் வுலககத் துள்ளே.**

**பேறிழ வின்ப மோடு பிணிமூப்புச் சாக்கா டென்னும்**
**ஆறுமுன் கருவுட் பட்ட தவ்விதி அனுப வத்தால்**
**ஏறிடும் முன்பு செய்த கன்மமிங் கிவற்றிற் கேது**
**தேறுநீ இனிச்செய் கன்மம் மேலுடற் சேரு மென்றே. 98**

இப்பிறப்பிலே முயற்சிசெய்து பொருளீட்டி, இன்பம் நுகர்தலையும், முயற்சியில்லாதவர்கள் பொருள் வருவாயில் லாவது இடர்ப்படுதலையுங் காண்கின் றோம். ஆதலின், இப்பிறப்பிற் செய்யுஞ் செயலே இன்பதுன்பத்திற்குக் காரணமாமன்றி, காணப்படாத இருவினையே அவற்றிற்குக் காரணமென்றல் பொருந்தாதெனின், பொருளும் இன்பமும் வேண்டி முயல்வார்க்கு முயற்சிப் பயன் கைவராது தளர்ச்சி யேற்படுதலும், தளர்வின்றி முயன்றகாலையும் அம்

முயற்சிக்குத் துணையாய பொருள் கிடையாது போதலும், பிற இடையூறுகள் நேர்தலும், காண்கின் றோம்; முயற்சி செய்யாதார் செல்வராய் வீற்றிருத் தலையும் அறிகின்றோமே; இவற்றிற்குக் காரணம், முன்னை இருவினையென உய்த்துணர்தலே பொருந்துவ தாகும், செல்வ வறுமை உய்த்துணர்தலே பொருந்துவ தாகும். செல்வ வறுமைகளும் பிணி மூப்புச் சாக்காடு களும் அடைதற்கு முதற்காரணமாய முன்னையிருவினை கருவினுள் நுட்பமாய் அமைந்துகிடப்பன. அவ்வினை வெளிப்படையாய்த் தோன்றுவதற்கு எடுத்த பிறப்பிற் செய்யும் முயற்சி துணைக்காரணமாகும். ஈண்டுச் செய்யுஞ் செயல்கள் இனியெடுக்கும் பிறவியில் நுகர்வனவற்றிற்கு வித்தாகுமென அறிக.

**உடற்செயல்கன்மம் இந்தஉடல்வந்த வாறேதென்னின்**
**விடப்படு முன்னுடம்பின் வினை இந்த உடல்விளைக்கும்**
**தொடர்ச்சியால் ஒன்றுக்கொன்று தொன்றுதொட்டனாதி வித்தின்**
**இடத்தினின் மரம்ம ரத்தின் வித்தும்வந் தியையு மா போல். 99**

உடலின் செய்தியால் வினை ஏற்படுமென்ற இடத்து அவ்வுடல் ஏற்படுதற்குக் காரணம் யாதுஎனின், முன்னுடம்பின் வினையாமென்க. வித்தில் மரமும், மரத்தில் வித்துந்தோன்றுதல் போல, ஒன்றிற்கொன்று தொடர்புடைய தாய்த் தொன்றுதொட்டு, அவை தோன்றி வருகின்றன.

**முற்செயல் விதியை இந்த முயற்சியோடனுபவித்தால்**
**இச்செயல் பலிக்கு மாறென் இதமகி தங்கள் முன்னர்**
**அச்செய லானால் இங்கும் அவைசெயின் மேலைக் காகும்**
**பிற்செயா தனுப விப்ப தின்றுபின் தொடருஞ் செய்தி. 100**

முன்செய்த வினையின் பயனை இப்பிறப்பிலே செய்யும் முயற்சியைத் துணைக் காரணமாகக் கொண்டு நுகர்ந்தபின், அம்முயற்சி வரும் பிறவிக்கு வித்தாதல் யாங்ஙனமெனின், அது தனக்காயினும் பிறர்க்காயினும், ஆற்றிய இன்ப துன்பச் செயல் வடிவாயிருத்தற்பாலது ஆகலின் என்க. வினை யாதுஞ் செய்யாதார்க்கு வரக்கடவதொன்றுமில்லை யாலோவெனின், அடக்க மாகவோ, தெளிவாகவோ, இயற்றுஞ் செயலில்லாது நுகர்ச்சியில்லையாதலின், நுகர்ச்சியுள்ள வரையிலும் முயற்சி நிகழும். நிகழவே, வினையும் உளதாமென்க. முயற்சி செய்யாதோர்க்கும் பயன் விளைகின்றதே யெனில், முயற்சியின் எளிமையே அஃதின்மையென்ப மரம் முதலியவைகளும் நீரையிழுத்தல் முதலிய நுண்ணிய முயற்சியின்றி வாழ்வதில்லை.

**மேலைக்கு வித்து மாகி விளைந்தவை உணவு மாகி**
**ஞாலத்து வருமா போல நாம்செய்யும் வினைகளெல்லாம்**
**ஏலத்தான் பலமாச் செய்யும் இதமகி தங்கட்கெல்லாம்**
**மூலத்த தாகி என்றும் வந்திடும் முறைமை யோடடே. 101**

உலகத்தில் விளைந்த கனி முதலிய உணவுப் பொருள்கள் இப்போது உணவுமாய்ப் பின் விளைவிற்கு வித்துமாயிருத்தல் போல, தன்னுணர்வாற் செய்யுஞ் செயல்களெல்லாம் இப்பிறப்பில் இன்பதுன்ப நுகர்ச்சிக் குத் துணையாவதோடு, வரும் பிறப்பிற்கு வித்தாய்க் கருத்தாற் செய்யப்படும் எதிர்வினையைப் பயக்கும்.

**இதமகி தங்கள் என்ப திகல்மன வாக்குக் காயத்(து)**
**இதமுயிர்க் குறுதி செய்தல் அகிதமற் றதுசெய் யாமை**
**இதமகிதங் களெல்லாம் இறைவனே ஏற்றுக் கொண்டிங்(கு)**
**இதமகி தத்தால் இன்பத் துன்பங்கள் ஈவனன்றே. 102**

**இறைவனிங் கேற்ப தென்னை இதமகி தங்களென்னின்**
**நிறைபர னுயிர்க்கு வைத்த நேசத்தின் நிலைமை யாகும்**
**அறமலி இதஞ்செய் வோருக் கனுக்கிர கத்தைச் செய்வன்**
**மறமலி அகிதஞ் செய்யின் நிக்கிர கத்தை வைப்பன். 103**

*மனமொழி மெய்களால் உயிர்களுக்குறுதி யாவனவற்றைச் செய்தலே நன்மை. அவற்றைச் செய்யாமையும், அவற்றிற்கு மறுதலையாயவற்றைச் செய்தலுமே தீமை. நன்மை தீமைகளின் பயனைத் தருபவன் இறைவனே. வினைகளை இறைவன் ஏற்றுப் பயனளித்தற்குக் காரணம் உயிர்கள் வீடுபேறடைதற் பொருட்டு அவன் கொண்ட கருணையே. அறங்கள் செய்வார்க்கருளும், மறங்கள் செய்வார்க்கு ஒறுப்பும் இறைவன் வகுத்தனன்.*

**நிக்கிர கங்கள் தானும் நேசத்தால் ஈசன் செய்வது**
**அக்கிர மத்தால் குற்றம் அடித்துத்தீர்த் தச்சம் பண்ணி**
**இக்கிர மத்தி னாலே ஈண்டறம் இயற்றி டென்பன்**
**எக்கிர மத்தி னாலும் இறைசெயல் அருளே என்றும். 104**

*இறைவன் ஒறுப்பதும் கருணையே. முறை தவறாகச் செய்தவற்றின் பொருட்டுச் செய்தாரைத் தண்டித்து அச்சம்விளைவித்து அறஞ் செய்யுமுறையை இறைவன் அவர்க்குணர்த்துவன். இறைவனது ஒடுக்கம், மறைப்பு, ஆகிய தொழில்களும் அருள்மயமே.*

**தந்தைதாய் பெற்ற தத்தம் புதல்வர்கள் தம்சொலாற்றின்**
**வந்திடா விடின் உறுக்கி வளாரினால் அடித்துத்தீய**
**பந்தமும் இடுவர் எல்லாம் பார்த்திடில் பரிவே யாகும்**
**இந்தநீர் முறைமை யன்றோ ஈசனார் முனிவு மென்றும். 105**

பெற்றோர், தம்புதல்வர் தஞ்சொல் வழி நில்லாத விடத்து, அவரை அச்சுறுத்தி வளாரினாலடித்துத் தீய விலங்குமிடுவர். பார்ப்பவர்களுக்கு அச்செயல் இரக்கத்தை விளைக்கும். அவ்வாறே முதல்வனது ஒறுத்தற் செயல்களுமாமென அறிக.

**செயல்களே பலத்தைச் செய்யும் தெய்வம்வேண்டாஇங்**
**கென்னின்**
**முயலுமிச் செயல்கள் இங்கே முழுவதும் அழியும் எங்கே**
**பயனளிப் பனஅழிந்தே பலன்களைப்பண்ணும்கெட்டே**
**வயலிடும் தழையும் தின்னும் மருந்தும்பின் பலிக்கு**
**மாபோல். 106**

**செய்க்கிடுந் தழையும் தின்னுந் திரவிய மதுவும்போல**
**உய்த்திடுஞ் செய்தி கெட்டே உறுவிக்கும் பலத்தை என்னின்**
**வைத்திடுஞ் சோறும் பாகும் அருந்தினர் வயிற்றின்மாய்ந்தால்**
**மெய்த்திடும் பலம்உனக்கு மலமலான் வேறுமுண்டோ. 107**

**திரவியம் உவமை யன்று செய்திக்கண் திரவி யங்கள்**
**விரவிய இடத்தே வீந்து பலந்தரும் இம்மை அம்மை**
**பரவிநீ பார்நீர் அங்கி பாத்திரத் திட்ட வெல்லாம்**
**கரவிடு மிங்கே எங்கே பலன்கொளக் கருதி னாயே. 108**

செயல்களே தத்தம் பயனைத் தருவன, பயன் தருதற்கு முதல்வன் ஒருவன் வேண்டப்படான் என்னில், செய்த செயல்கள் முற்றிலும் அழிந்தொழியக் காண்கின்றோம். அவை பயனை எவ்வாறு விளைத்தல் கூடும்? வயலிலிட்ட தழையும் உண்ணும் மருந்தும் உருமாற்றமடைந்து பயனளித்தல்போல, வினைகளும் கெட்டுப் பயன்தருமெனில், தழை மருந்து முதலியன

அவை நின்ற இடத்தே கெட்டுப் பயன்தருவன. உணவு முதலியன வயிற்றிலே முழுவதும் அற்றொழிந்தால், மிஞ்சுவது மலமன்றி வேறன்று. வினையோ ஓரடலிற் செய்யப்பட்டாலும் மற்றொருடம்பிற் சென்று பயன் தருவது ஆதலால், தழைமருந்து முதலியன தக்க உவமையாகா.

**செய்தவர் மனத்தே எல்லாச் செய்தியும் கிடந்து பின்னர்**
**எய்தவே பலன்க ளீனும் என்றிடின் இருஞ்சு வர்க்கம்**
**பொய்யர்வாழ் நரகம் பூமி புந்தியிற் கிடந்து போந்த**
**ஐயனே அழகி துன்சொல் இந்திர சால மாய்த்தே. 109**

வினையைச் செய்தவர் மனத்திலே அதுதங்கிப் பயன்றருமெனில், மேல், கீழ், நடு என்னு மூவிடத் திலுமுள்ள பொருளின் நுகர்ச்சியை, மன நினைவு எவ்வாறு பயக்கும்? மனத்தால் அவற்றை நினைத்தின் புறுதல், மாயமாய இந்திர சாலமாமேயன்றி மெய்ந் நுகர்ச்சியாகாது.

**தானஞ்செய் பொருள்த ரித்தோர் செய்தவர் தக்க செய்தி**
**ஊனம்பின் னுறவே காண்டும் பலமுறு விப்பான் வேண்டும்**
**ஈனமில் செய்தி ஈச னிடும்பணி இவைநாம் செய்தால்**
**நூனங்கள் அதிகம் நோக்கி நுகர்விப்பன் வினைநோய் தீர. 110**

**உலகுடல் கரணங் காலம் உறுபலம் நியதி செய்தி**
**பலவிவை கொண்டு கன்மம் பண்ணுவ துண்பதானால்**
**நிலவிடா இவைதாம் சென்று நினைந்துயிர் நிறுத்திக் கொள்ளா**
**அலகிலா அறிவ னாணை அணைத்திடும் அருளி னாலே. 111**

ஒரு பொருளை ஈவோனும் ஏற்போனும் அப்பொருளும் ஆகிய எல்லாம் அழிந்தபின், ஈதலாகிய செய்கை தானே பயன்றருமென்றல் யாங்ஙனம் பொருந்தும்? முதல்வன் பலனளிப்பது யாங்ஙனமெனில், உலகில் நிகழுஞ் செயல்கள் அவன் கட்டளைப்படி நிகழ்வன. தன்னுணர்ச்சி முனைப்பால் நாஞ்செய்யுஞ் செயல்களும் அவனது ஏவல் வழிப்படும் வினையே. அவன் நமது முயற்சியின் குறைவு நிறைவுகளை யறிந்து அவற்றிற்கேற்ற பயனையளிப்பன். உயிர்கள் வினை செய்வதற்கு உடல், அகக்கருவி, காலம், செயப்படு பொருள். இதற்கிது பயனாகவேண்டுமென்னுமுறை, செயல் என்னுமிவை வேண்டப்படும். அவைதாமே உயிரை அடையா. இவற்றின் துணையின்றி எத் தொழிலும் செய்யமாட்டாத உயிர் இவற்றையமைத்துக் கொள்ள வல்லதன்று. ஆதலின் முதல்வனே இவற்றை உயிரோடிணைத்துச் செயல் செய்விப்பன். செயற்பயன் செயலாலமைதலின் முதல்வனே பயன்றருவனென அறிக.

**ஒழுக்கம்அன் பருள்ஆ சாரம் உபசாரம் உறவு சீலம்**
**வழுக்கிலாத் தவம்தா னங்கள் வந்தித்தல் வணங்கல்**
**வாய்மை**
**அழுக்கிலாத் துறவ டக்கம் அறிவொடர்ச் சித்த லாதி**
**இழுக்கிலா அறங்க ளானால் இரங்குவான்**
**பணியறங்கள். 112**

நற்பழக்கம், அன்பு, அருள், தூய்மை, வகைதெரிவு உறவினர்க்குதவி, நற்குணம், பொறியடக்கம், ஈகை, பெரியார் வழிபாடு, பணிவு, வாய்மை, பிறன்மனை

விழையாத்துறவு, அடக்கம், பகுத்தறிவு, தக்காரை நன்குமதித்தல் முதலிய நலங்கள் வாய்க்கப் பெற்றால் அருளாளனாகிய முதல்வன் பணிகள் அறங்களாய் முடியும்.

**மனமது நினைய வாக்கு வழுத்தமந் திரங்கள் சொல்ல**
**இனமலர் கையிற் கொண்டங் கிச்சித்த தெய்வம் போற்றிச்**
**சினமுத லகற்றி வாழும் செயலற மானால் யார்க்கும்**
**முனமொரு தெய்வ மெங்கும் செயற்குமுன் னிலையா**
**மன்றே. 113**

மேற்கூறிய அறங்களோடு விரும்பிய ஒருதெய்வத்தை மனத்தினால் நினைந்து வாயினால் வாழ்த்தி மந்திரங்கள் சொல்லிக் கையினால் பல்வகை நன்மலர் தூவிப்போற்றிச் சினத்திற்கேதுவாகிய அறியாமையை அகற்றி வாழ்கின்ற செயலாகிய அறமானது ஏற்படுமானால், அனைய அறவாழ்கை யுடைய யாவர்க்கஞ் செய்யுஞ் செயல்களுக்குத் துணையாக அவர் வழுத்துந் தெய்வம் எங்கும் முன்னிற்கும்.

**யாதொருதெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே**
**மாதொரு பாக னார்தாம் வருவர்மற் றத்தெய் வங்கள்**
**வேதனைப் படும்இ றக்கும் பிறக்கும்மேல் வினையுஞ்**
**செய்யும்**
**ஆதலான் இவையி லாதான் அறிந்தருள் செய்வனன்னே. 114**

எத்தெய்வத்தை வழிபட்டாலும் அத்தெய்வத் தோடு வேறறநின்று உமையொரு பாகனார்

அருள்புரிவர். ஏனென்றால், அவரொழிந்த பிறதெய்வங் கள், உயிர் களாதலின், வினை செய்து துன்பப்படுதலும், பிறவி யெடுத்தலு முடையன. அத்தன்மைகளில்லாத முதல்வனொருவனே செயற்றிறன் அறிந்து பயனளிக்க வல்லான்.

**இங்குநாம் சிலர்க்குப் பூசை இயற்றினால் இவர்களோ வந்(து)**
**அங்குவான் தருவா ரன்றேல் அத்தெய்வ மத்த னைக்காண்**
**எங்கும்வாழ் தெய்வமெல்லாம் இறைவனாணையினால்**
**நிற்ப(து)**
**அங்குநாம் செய்யுஞ்செய்திக்காணை வைப்பாலளிப்பன்.**

**காண்பவன் சிவனே யானால் அவனடிக் கன்பு செய்கை**
**மாண்பறம் அரன்றன் பாதம் மறந்துசெய் அறங்க ளெல்லாம்**
**வீண்செய லிறைவன் சொன்ன விதியறம் விருப்பொன்**
**றில்லான்**
**பூண்டனன் வேண்டல் செய்யும் பூசனை புரிந்து கொள்ளே. 116**

**தாபர சங்க மங்க ளென்றிரண் டுருவில் நின்று**
**மாபரன் பூசை கொண்டு மன்னுயிரிக் கருளைவைப்பன்**
**நீபரன் தன்னை நெஞ்சில் நினைவையேல்நிறைந்தபூசை**
**ஆய்பரம் பொருளை நாளும் அர்ச்சிநீ அன்பு செய்தே. 117**

இம்மையிலே, பெற்றோர், உயர்ந்தோர் முதலியோர்க்கு நாம் வழிபாடியற்றின், மறுமையிற் பயன்றருவாரவரல்லர்; அவர்களின் வேறாயகடவுளே தருவார். அதுபோலவே, பிற எத்தெய்வத்தை வழிபட்டாலும் சிவனே பயனளிப்பன் என்றறிக. அவ்வாறாயின் வழிபட்ட தேவரே எதிர்நின்று வழிபட்டார்க்கு அருள் செய்வரென நூல்களுட்

கேட்கப்படுமது யாதுகாரணம்பற்றி யெனின், அரசன் ஆணைவழி நின்று அமைச்சர் முதலிய தலைவர்கள் குடிகட்கு உதவி புரிதல்போல, இறைவன் ஏவல்வழி நின்று அவ்விடங்களிலுள்ள தெய்வங்கள் தத்தம் ஆட்சித்திறன் செலுத்துவராதலின் அவர்கள் செய்யும் அருளும் இறைவனது திருவருளே என உய்த்துணர்க. எல்லா வழிபாடுகளையும் ஏற்றுக்கொண்டு அருள் செய்பவன் சிவபெருமான் ஒருவனே யாதலின், அவன் திருவடியை வழிபடுதலே ஒப்பற்ற பேரறமாம். அவன் திருவடியை மறந்து செய்யும் அறங்களெல்லாம் வீண்செயல்களாகுமாதலால், இறைவனது கட்டளை வழி நிற்றலே அறம். பற்றற்ற அருட்கடலாகிய அவனை வழிபடும் முறையினைக் கைக்கொள்ளுக. அப் பெருமான் நிற்பதும் இயங்குவதுமாய இருவகை வடிவங்களிலும் நின்று உயிர்கள் செய்யும் வழிபாட்டினையேற்று அவர்களுக்கு அருள் புரிவன். அப்பெருமானை மனத்தகத்தே உறுதியாக நினைந்து வழிபடின், அது பூரணமான வழிபாடாகும். நாடோறும் அவனுக்கு அன்பு செய்து வழிபடுக. பரம்பொருளாகிய அவனைச் சிந்தை செய்க.

**அரனடிக் கன்பர் செய்யும் பாவமும் அறம தாகும்**
**பரனடிக் கன்பி லாதார் புண்ணியம் பாவ மாகும்**
**வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி**
**நரரினிற் பாலன் செய்த பாதகம் நன்மை யாய்த்தே** 118

முதல்வன் திருவடிப்பேரன்பர் செய்யுஞ் செயல்கள் மறச்செய்கையாகத் தோன்றினும் அவைகள் உண்மையில் அறச்செய்கைகளே. அவன் திருவடிக்கன்

பிலாதார் செய்யுஞ் செயல்கள் புண்ணியமாகத் தோன்றினாலும், அவை பாவமாய் முடிதல் கூடும். தக்கனது பெருவேள்வி தீமையாயும் சண்டேசுர நாயனார் இழைத்த கொடுஞ்செயல் நன்மையாயும் முடிந்தமை காண்க.

**மறைகளீ சன்சொல் அச்சொல் வழிவாரா உயிரை வைக்கும்**
**சிறைகள்மாநிரயம் இட்ட பணிசெய்வோர் செல்வத்தோடும்**
**உறையும்மா பதிகள் உம்ப ருலகங்கள் யோனிக் கெல்லாம்**
**இறைவனா ணையினால் இன்பத் துன்பங்கள் இயைவதாகும்.**

**ஆணையால் அவனி மன்னன் அருமறை முறைசெய் யாரை**
**ஆணையில் தண்டஞ் செய்தும் அருஞ்சிறை யிட்டும் வைப்பன்**
**ஆணையின் வழிசெல் வோருக் கரும்பதி செல்வம் நல்கி**
**ஆணையும் வைப்பன் எங்கும் ஆணையேஆணை யேகாண்.**

**அரசனும் செய்வ தீசன் அருள்வழி அரும்பா வங்கள்**
**தரையுளோர் செய்யில் தீய தண்டலின் வைத்துத் தண்டத்**
**துரைசெய்து தீர்ப்பன் பின்புசொல்வழி நடப்பர் தூயோர்**
**நிரயமும் சேரார் அந்த நிரயமுன் நீர்மை ஈதாம்.** 121

**அருளினால் உரைத்த நூலின் வழிவாரா ததன்மஞ் செய்யின்**
**இருளுலாம் நிரயத் துன்பத் திட்டிரும் பாவந் தீர்ப்பன்**
**பொருளுலாஞ் சுவர்க்கமாதி போகத்தாற் புணியந் தீர்ப்பன்**
**மருளுலாம் மலங்கள் தீர்க்கும் மருந்திவை வயித்ய நாதன்.** 122

மறைகளெனப்படுவன ஈசனது கட்டளையே : அக்கட்டளைப்படி நடவாதாரை ஒறுத்தற்பொருட்டு அமைக்ப்பட்ட சிறைக் களமே நரகம். கட்டளைப்படி நடப்போர் தங்குதற் கமைத்த பெரும் பதிகளே விண்ணுலகங்கள். உடலெடுத்த எல்லா உயிர்கட்கும்

இன்ப துன்பங்கள் இறைவன் கட்டளைப்படியே பொருந்துவன. அரசன் செயலின் வைத்து இறை செயலை அறிக. அரசன் செய்வதும் ஈசன் அருள் வழியே யாதலின், உலகில் பெரும் பாவஞ் செய்து தக்க தண்டனை யுற்றோர் மறுமையில் நரகமெய்தார். தண்டனையாற் திருத்தம் ஏற்பட க்கூடுமாதலின், தண்டனைப் பட்டோர் தூயராவர் அருளினால் இறைவன் காட்டிய நெறி நிற்பார்க்கு, மயக்கத்திற கேதுவாய மலநோயை இறைவன் ஒழித்தலால், இறைவனுக்கு மருத்துவனென்ற திருப்பெயர் உண்டு. நல்வினை தீர விண்ணுலகப்பேறும் தீவினை தீர நரகத்துன்பமும் அவன் அளிப்பன.

**மருத்துவன் உரைத்த நூலின் வழிவரிற் பிணிகள்வாரா**
**வருத்திடும் பிணிகள் தப்பில் தப்பிய வழியுஞ்செய்யத்**
**திருத்தினன் மருந்து செய்யா துறும்பிணி சென்றுந் தீர்ப்பன்**
**உரைத்தநூற் சிவனும் இன்னே உறுங்கன்ம மூட்டித் தீர்ப்பன்.**

மருத்துவன் கூறிய நூன்முறைப்படி ஒருவன் ஒழுகுவனாயின், பிணிகள் எய்தமாட்டா. அம்முறையிற் றப்பினால், பிணிகள் நேர்ந்து துன்பம் விளைக்கும். அப்பிணிகள் தீர மருத்துவன் மருந்தினைக் கொடுப்பான். நூன்முறையிற் றப்பாத விடத்தும் பண்டை வினையால் வரும் நோயினையும், அவன் மருந்து உண்பித்துத் தீர்ப்பன். இங்ஙனமே இறைவனும் தன் கட்டளைவழி நில்லாமையால் உளதாந் தீமையைத் தீவினைப் பயனுகர்ச்சியாற் தீர்ப்பன. இம்மையில் அவன் கட்டளைவழி நின்றாலும், முன் வினைப்பயனாய் நுகரக் கிடப்பனவற்றை யொழித்தற்குரிய வழிபாட்டு முயற்சியிற் செலுத்தியும் அவன் அவற்றைத் தீர்ப்பன்.

**மண்ணுளே சிலவி யாதி மருத்ததுவன் அருத்தி யோடும்**
**திண்ணமா யறுத்துக் கீறித் தீர்த்திடும் சிலநோயெல்லாம்**
**கண்ணிய கட்டிபாலும்கலந்துடன் கொடுத்துத்தீர்ப்பன்**
**அண்ணலும் இன்பத் துன்பம் அருத்தியே வினையறுப்பன.**

**பூதனா சரீரம் போனால் புரியட்ட ரூபந் தானே**
**யாதனா சரீர மாகி இன்பத்துள் பங்க ளெல்லாம்**
**நாதனார் ஆணை உய்க்க நரகொடு சுவர்க்கம் துய்த்துத்**
**தீதிலா அணுவாய் யோனி சேர்ந்திடும் சீவனெல்லாம். 125**

**உடல்விடா யோனிபற்றி உதிப்பினும் உதிக்குமொன்றிற்**
**படர்வுறா துறும்பா வத்தாற்பாடாணம் போற்கிடந்து**
**கடனதாங் காலஞ் சென்றாற் கடுநர கதனில் வீழ்ந்தங்(கு)**
**இடருறும் உருவங்கன்மத் தளவினில் எடுக்கு மன்றே 126**

*உலகத்திலே சில நோய்களால் ஏற்பட்ட ஊனத்தை மருத்ததுவன் விரைந்து அறுத்துக் கீறித் தீர்ப்பன். வேறு சில நோய்களின் கெடுதியைப் பாலோடும் கற்கண்டோடும் கலந்த மருந்தினை உண்பித்துத் தீர்ப்பன். இறைவனும் அவ்வாறே இன்ப துன்பங்களாய மருந்தை ஊட்டி வினைநோயைத் தீர்ப்பன. இறைவன் புசிப்பிக்கும் வினைப்பயன்களை உயிர் நுகருமுறை எவ்வாறெனிற் கூறுவதும்; ஐம்பூதங் களாகிய இவ்வுடம்பு கழிந்த உடனே உயிர்கள் தமது நுண்ணுடம்பாகிய எண்ணுடலே இரு வினைப் பயன் நுகர்தற்குரிய உணர்ச்சியுடம்பாகத் திரியப் பெற்று, துறக்க இன்பத்தினையும் நிரயத் துன்பத் தினையும் நுகர்ந்த பின்பு, குற்றமற்ற நுண்ணுடம்போடு மீண்டுமிவ்வுலகிற் கருப்பையிற் சேர்ந்து எஞ்சிய*

வினைப்பயனை நுகர்தற்குத் தொடங்கும். வினைகளின் வெவ்வேறு தன்மைக்கேற்ப, ஒரு பூத உடம்பை நீத்துஉடனே உயிரானது சுவர்க்க நரகம் புகாமல் மீட்டு மொரு கருப்பையிற் சென்று பிறத்தலுங்கூடும். அவ்வாறன்றி ஒருடம்பையு மெடாது கல்லைப் போலக்கிடந்து, சிலகாலம் கழித்து நரகம் புகுததற்குரிய உணர்ச்சி யுடம்பை யெடுத்தலுங் கூடும்.

**பன்னகம் அண்ட சங்கள் பரகாயந் தன்னிற்பாய்வோர்**
**துன்னுதோல் முட்டை யாக்கை துறந்துசெல் வதுவே போல**
**உன்னிய வுயிர்கள் தூல வுடல்விட்டு வானி னூடும்**
**மன்னிடும் நனவு மாறிக் கனவினை மருவு மாபோல். 127**

இம் மாற்றங்கள் எவ்வாறு நிகழுமெனில் பாம்பு சட்டை கழற்றுவதுபோல, உடலை விட்டு ஓரிடத்தில் உயிர்கள் நிலைபெறுதலும், முட்டையை விட்டுக் குஞ்சு பறந்தோடுவது போல ஓரிடம் விட்டு வானூடு சென்று பிறிதோரிடம் சேறலும், கூடுவிட்டுக் கூடுபாய்தல் போல ஒருடம்பு விட்டுப் பிறிதோருடம் பெடுத்தலும் நிகழற் பாலன. இங்ஙனஞ் செய்வதால் உயிர்கள் தம்மின் வேறாவதில்லை. அறிவு மாறப்பெறுமே யெனின், நனவிலுள்ள உணர்வு மாறியே கனவின் உணர்ச்சியை உயிர் தலைப்படுதல் போலும் அஃதென ஓர்க.

**தன்மமோ டதன்ம மாகித் தானிரு பயனுந் தந்து**
**நன்மைதீ மையினும் இன்பத் துன்பினும் நாடிக் காண**
**முன்னமே ஆன்மா வின்தன் மும்மலத் தொன்ற தாகிக்**
**கன்மமும் மூலங் காட்டிக் காமிய மலமாய் நிற்கும். 128**

அறச்செயல், பாவச்செயல் என்னுமிருவகைச் செயலுக்கும் முதற்காரணமாய மூலவினை மும்மல்ஙகளி லொன்றாக உயிர்கட்குள்ளது. அது நன்மை தீமையாகிய

காரணவேதுவானும் உய்த்துணரப்படும். அம்மூலவினை செயலாய் வெளிப்பட்டாலன்றிப் பயன்றராமையின். அது இருவினையின் வேறாக வைத்தெண்ணப் படவில்லை. மூலவினையே காமியமல மெனப்படும். கான்மியமென்பது காமியமாயிற்றென்ப.

மலம் என்பது உயிரைக் கட்டுப்படுத்துவது. இருவகைச் செயலும் இன்பதுன்ப நுகர்ச்சியில் உயிர்களைக் கட்டுப்படுத்துதலால், அவற்றிற்கேதுவாய மூலவினை மலமெனப்பட்டது.

**இருவினை அனாதி யாதி இயற்றலால் நுகர்வால் அந்தம்**
**வருமலஞ் சார்ந்து மாயா உருவுகள் மருவி யார்த்துத்**
**தருசெயல் முறைமை யாலே தான்பல பேதங் காட்டி**
**அருவதாய் நின்ற ரன்தன் ஆணையின் அமர்ந்து செல்லும்.**

மூலவினை தொடக்கமில் காலமாக உயிரைச் சார்ந்துள்ளது. அதனின்று இருவகைச் செயல்கள் தோன்றியழிய அவற்றின் பயனும் நுகரப்பட்டுக் கழிதலால், வினைக்கு ஆதியந்தமுண்டென்பர். அங்ஙனமாயினும், மீட்டு மீட்டுஞ் செய்யப்பட்டுப் பயன் தருதலால் அதன் ஈறின்மை புலனாதல் காண்க. மூலவினை யானது ஆணவத்தோடு கலப்புற்று மாயா வடிவங்களிற் பொருந்தி, உயிரைக் கட்டுப்படுத்திப் பல்வேறு பிறவிகளீன்று உயிர்கட்குப் புலனாகாது முதல்வன் கட்டளைக் கீழடங்கியியலும்.

**சங்கமம் தாப ரங்கள் தத்தம்கன் மத்துக் கீடா**
**அங்குரு யோனி மாறும் அச்சுமா றாதிங் கென்னின்**
**இங்குமா னுடர் இயற்றும் புண்ணியத் தின்ப ஈட்டம்**
**அங்குவான் சுரர்களாயோ நரர்களாய் அருந்துவாரோ.** 130

**நரர்களாய்த் துய்ப்ப ரென்னின் நரர்பதி சுரருலோகம்**
**சுரர்களாய்த் துய்ப்ப ரென்னிற் சொன்ன அச் சழிவுமாகும்**
**சுரர்களாய்ப் பலன்கள் துய்த்துத் தாமிங்குத் தோன்றும்போது**
**நரர்களாய்ப் பிறப்பர் ஞாலத் தமரராய் நண்ணிடாரே. 131**

*உயிர்கள் வினைக்கீடாக வெவ்வேறு பிறவி யெடுக்குங்காலை, நுண்ணுடம்பு திரிபெய்தப் பெறும். அதனை அச்சுமாறிப் பிறத்தலென்ப. ஒருசாரார் நிற்பனவும் நடப்பனவுமாய உயிர்கள் அவ்வறப் பிறவியிலே மீட்டு மீட்டும் பிறக்குமேயன்றி அச்சுமாறிப் பிறத்தலில்லை யென்ப. அது பொருந்துமாறில்லை. மக்கள் யாக்கைவிட்டு விண்ணுல கின்பம் நுகரச் செல்வார், மக்கள் வடிவுகொண்டு அவற்றை நுகர்வ தில்லை, தேவவடிவெடுத்தே நுகர்வர்; அங்கும் அச்சு மாற்றமுள்ளது. மனிதவடிவாய் விண்ணுலகின்பம் நுகர்வ ரெனின். அவ்வுலகமும் மக்கள் உலகமே. தேவரானோர் மீண்டும் இவ்வுலகிற் பிறக்குங்காலை மக்கள் வடிவெடுப்ப தன்றித் தேவராய்ப் பிறப்ப தில்லை.*

**வண்டுக ளாகி மாறும் மயிர்க்குட்டி மாற்றோர் செந்துப்**
**பண்டைய உருவந் தானே வேட்டுவ னாய்ப்பி றக்கும்**
**கண்டுகொள் யோனி யெல்லாம் கன்மத்தால் மாறுமென்றே**
**கொண்டன சமயமெல்லாம் இச்சொல்நீ கொண்ட தெங்கே.**

**அகலியை கல்ல தானாள் அரிபல பிறவியானான்**
**பகலவன் குலத்திற் றேன்றிப் பாரெலாம் முழுதும் ஆண்டு**
**நிகரிலா அரச னாகும் சிலந்திநீ டுலகம் போற்றச்**
**சகமதில் எலிதா னன்றோ மாவலி யாய்த்துச் தானே. 133**

**செப்பினாய் மாற வேறு சிலர்வி தி யாலே கன்மால்**
**வைப்புறும் யோனி எல்லாம் மாறிவந் திடாவிங் கென்னின்**
**எப்படி யானுஞ் செய்திக் கிறைகரி யாவ னென்றே**
**முற்பட மொழிந்தே னெல்லாம் முதல்வன்தன் விதியேயாகும்.**

**அவ்வவ யோனி தோறும் அவ்வவ உலகந்தோறும்**
**செவ்விதின் அறிந்து கன்மம் சேர்ந்திடா சீவன் சேரா**
**இவ்வகை தம்மிற் சேர்வும் இறைசெய லானாற் செய்த**
**எவ்வுரு வுந்தன் கன்மால் மாற்றுவன் இறைவன் தானே. 135**

தோற்றத்தில் அச்சு மாறுதற்குக் கம்பளிப்பூச்சி வண்டாக மாறுவதையும், புழுவானது குளவியாக மாறுவதையும் காட்டாகக் கூறலாம். இதிகாச புராணங்களுள் அகலிகை கல்லானமையும், திருமால் பிறவி எடுத்தமையும் சிலந்திப்பூச்சி செங்கட் சோழ னானமையும், எலி மாபலிப் பெருமன்னனாயினமையும் உதாரணமாகப் பேசப்படும். அவை சிறப்புக் காரணமாய் வெஞ்சொல்லாலும் அருட்பேற்றினாலும் ஆயினவெனின், எல்லா உயிர்களும் தத்தம் வினைக்கேற்ற வாறு முதல்வனது ஒறுப்பிற்கும் அருளிற்கும் உரியவாதல் தேர்க. வடிவமாற்றம் உயிர்கட்கு இறைவனாலமைவனவாகும். பருவுடம்பின் மாற்றத்திற்குக் காரணம் நுண்ணுடம்பின் கண் ஏற்படும்.

ஒரு தன்மைத்தாய நுண்ணுடம்பு பல்வேறு வகை ஆதல் யாங்ஙனமெனில், ஒரு தன்மைத்தாய பொன்னே, ஆரம், சங்கிலி முதலிய பல்வேறு வடிவுடைய அணிகளாக ஆக்கப்படுதல்போல என்க.

**மாறியிவ் வுருவமெல்லாம் வருவதெங் கேநின் றென்னில்**
**கூறிய சூக்கு மத்தாம் உருவெனிற் குறியொன் றென்னின்**

**வேறொரு குறியா மாரம் வீரசங் கிலியு மாகும்**
**தேறுநீ ஒருவ னாலிச் செயலெலாம் சிவனா லாகும். 136**

**சூக்குமங் கெட்டுத் தூலந் தோன்றிடா சூக்கு மத்தின்**
**ஆக்கியோ ருடல்கி டப்ப தின்றுட லாக்குந் தன்மைக் (கு)**
**ஒக்கிய சத்தி யுண்டாய் உடல்தருங் காலம் உற்று**
**நீக்கிட மரம்பின் வேரோர் நீள்மரம் நிகழ்த்து மாபோல். 137**

நுண்ணுடம்பினின்று பருவுடம்பு தோன்றுவது எப்படி யெனில், பொன் பணியாவது போலத் தோற்ற வேறுபாட்டி னாலன்று; வித்து மரமானாற்போல, ஒன்று திரிந்துபிறி தொன்றாய்த் தோன்றுவது போலவுமன்று; மதியின் கலைகள் மறைந்து ஒவ்வொன்றாய்த் தோன்றுவது போலவுமன்று; மரத்தின் மேற்பகுதிகள் அற்றொழிந்த பின், மர வேரினின்று பிறிதொரு மரம் உண்டாதல்போல நுண் உடம்பிலே சத்திவடிவ மாயிருந்த பருவுடம்பு வெளிப்படு மென்க.

**விதிப்படி சூக்கு மத்தே உருவரும் வினையா லிங்கே**
**உதித்திடா உருவ மாக உருவரு மரங்கள் வித்தில்**
**கதித்தெழு மரமும் வித்தும் கழியும்பின் அழியுஞ்சூக்க**
**மதிக்கெழு கலைகள் போல வருவது போவ தாமே. 138**

வித்தினின்று மரமுண்டாதல்போல, வினை காரணமாக நுண்ணுடம்பினின்று பருவுடம்பு வெளிப் படும். மரமழிந்தால் வித்து அழியும். பருவுடல் அழிந்தாலும் நுண்ணுடம்பு அழிவதில்லை. மதியின் கலைகள் பதினாறுள், அவற்றிற்குக் காரணமாய கலை அழிவதில்லலை. அதுபோல நுண்ணுடல் அழிதலில்லை.

**தூலமாம் உருவி னுக்குச் சூக்குமம் முதல தற்கு**
**மூலமான் அதற்கு மூலம் மோகினி அதன்மு தற்றான்**
**மேலதாம் விந்து சத்தி சிவமிவை மிசையா மெல்லாம்**
**சாலஇன் றாகும் ஆன்மாச் சிவத்தினைச் சார்ந்தபோது. 139**

*பருவுடம்பிற்கு நுண்ணுடம்பு முதற்காரணம். அதற்கு முதற்காரணம் மூலப்பகுதி. அதற்கு முதற்காரணம் தூய்தல் மாயை. அதற்கு மேலாகக் குண்டலிசத்தி யெனப்படுந் தூயமாயை உள்ளது. உயிர் சிவத்தினைச் சார்ந்தபோது இவற்றின் தொடர் பனைத்தும் அறவே யொழிந்துவிடும்.*

**அரன்விதி அருள தென்றே அறைந்தனம் அதுவு முன்னே**
**தரைநர கருந்து றக்கம் தனுகர ணாதி யெல்லாம்**
**வருவதுஞ் செய்தனாதி மலங்களிம் மருந்தால் தீர்த்துப்**
**பரகதி யதுவுந் தந்து பாதபங் கயமும் சூட்டும். 140**

**எழுமுடல் கரண மாதி இவைமலம் மலம லத்தாற்**
**கழுவுவ னென்று சொன்ன காரண மென்னை என்னில்**
**செழுநவ அறுவை சாணி உவர்செறி வித்த முக்கை**
**முழுவதுங்கழிப்பன் மாயை கொடுமல மொழிப்பன்**
**முன்னோன். 141**

*இறைவன் உயிர்க்கு உடல், மனம், உலகம், நுகர்பொருள் எல்லாமுதவி மலங்களையொழித்து வீடருள்வனென்பது கூறப்பட்டது. உடல் முதலியன மாயையினாலாவன. மாயையும் ஒரு மலமாகக் கூறப்பட்டுள்ளது. மூலமாகிய ஆணவத்தைப் பிறிதொரு மலத்தால் இறைவன் நீக்குவனென்பது எவ்வாறு பொருந்துமெனின், ஆடையின் அழுக்கைச் சாணி, உவர்மண் முதலியவற்றின் கலப்பால் நீக்குவதல்போல,*

இறைவன் மாயையினாலே உயிரைப் பற்றிய மலத்தை யொழிப்பனென அறிக.

**நித்தமாய அருவாய் ஏக நிலையதாய் அகிலத் துக்கோர்**
**வித்துமாய் அசித்தா யெங்கும் வியாபியாய் விமலனுக்கோர்**
**சத்தியாய்ப் புவன போகந் தனுகர ணமும்உயிர்க்காய்**
**வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமும் செய்யுமன்றே. 142**

மாயையென்பது யாதெனில், அது என்றுமுள்ளதாய் அருவமாய், பொருட்டன்மையால் ஒன்றாய், உலகத்திற்கு வித்தாய், அறிவிலதாய், எங்கும்பரந்ததாய், இறைவனுக்கு ஒரு சடசத்தியாய் உடம்பு முதலியவற்றிற்கு முதற்காரணமாய் நின்று உயிர்க்கு ஒரு கட்டாய், உயிரின் மெய்யியல்புக்கு மாறுபட்ட உணர்ச்சியைக் கொடுப்பதால் மயக்கமுஞ் செய்வதாயும் உள்ளது. மயக்கம் செய்யாதது தூயமாயையென அறிக. ஒடுக்கம் நிகழந்தபோது உயிர்கள் தங்கு மிடமாயது மாயையே.

**மாயையிற் கால மோடு நியதிபின் கலாதி தோன்றும்**
**ஆயஅக் கால மூன்றாய் ஆக்கியும் அளித்தும் போக்கிக்**
**காயமோ டுலகுக் கெல்லாம் காலசங் கையினைப் பண்ணி**
**நாயக னாணை யாலே நடத்திடுஞ் சகத்தை யெல்லாம் 143**

அம்மாயையினின்று காலமுதல் தோன்றும். காலமானது முதல்வன் கட்டளையால் முத்திறப்பட்டுச் சென்ற கால எல்லையையும், நிகழ்காலப் பயனையும், எதிர்காலப் புதுமையையும் பொருத்துவிப்பதாய் உலகு, உடல் ஆகியவற்றின் முத்தொழிலை வரையறைப்படுத்தி நிற்பது.

**நியதிபின் தோன்றிக் கன்ம நிச்சயம் பண்ணி நிற்கும்**
**அயர்விலாக் கலையின் தோன்றி ஆணவம் ஒதுக்கிச் சித்தின்**
**செயல்புரி கிரியா சத்தி தெரிவிக்குஞ் சிறிதே வித்தை**
**உயர்கலை யதனில் தோன்றி அறிவினை உதிக்கப் பண்ணும். 144**

**விச்சையின் அராகந் தோன்றி வினைவழி போகத்தின்கண்**
**இச்சையைப் பண்ணி நிற்கும் தொழிலறி விச்சை மூன்றும்**
**வைச்சபோ திச்சா ஞானக் கிரியைமுன் மருவி ஆன்மா**
**நிச்சயம் புருட னாகிப் பொதுமையின் நிற்ப னன்றே. 145**

*முறைமுதல் என்பது காலத்திற்குப் பின், மாயையிற்றோன்றி, அவரவர் செய்த வினையை அவரவரே நுகருமாறு செய்விக்கும்.*

*அதற்குப் பின் மாயையினின்று கலைமுதல் தோன்றி ஆணவ இருளைச் சிறிது ஒதுக்கி, உயிரின் செயலாற்றலைப் பொதுவகையாக விளக்கும். கலையில் புலமுதல் தோன்றி அறிவினைப் பொதுவாக விளக்கும். புலத்தில் அவாமுதல் தோன்றி உயிரின் விழைவாற் றலைப் பொதுவாக விளக்கும்.*

*ஈண்டுக் கூறிய காலம், முறை, கலை, புலம், அவா என்னும் ஐந்தும்பற்றி நின்ற உயிர், தோன்றல் (புருடன்) எனப்படும். உலக நுகர்ச்சியில் நோக்கமாய் நிற்கு நிலையே தோன்றல் முதல் எனக் கொள்ளுக. இது உண்மையில் ஒரு முதல் அன்று.*

*கால முதலிய ஐம்முதலையும் பஞ்சகஞ்சுகம் என்பர். ஐயுடை என்பது தமிழ்.*

**வருங்குண வடிவாய் மூலப்பிரகிருதி கலையில்தோன்றித்**
**தருங்குண மூன்றாய் ஒன்றிற் றான்மூன்றாய் மும்மூன்றாகும்**
**இருங்குண ரூப மாகி இயைந்திடு மெங்கும் ஆன்மாப்**
**பெருங்குண வடிவாய்ப் போக சாதனம் பெத்தமாமே. 146**

கலை முதலினின்று மூலப்பகுதி தோன்றும். அம்மூலப் பகுதியில் மூவகைப் பண்பும் அடக்கமாய்த் தோன்றாது நிற்கும். அவை வெளிப்படையாய்த் தோன்றுங்கால் பண்பு முதல் உளதாம். ஒவ்வொரு பண்பும் முத்திறப்படும். அப்பண்பு முதலிற்றோன்றுந் தத்ததுவங்களும் பண்பு வடிவாயிருக்கும். அவை யெல்லாம் உயிர்க்குப் பொருள் நுகர்வுக் கருவியாய்க் கட்டுக்களாய் நிற்பன. உயிர் அவற்றைச் சார்ந்து பண்பு வடிவாயிருக்கும். உயிர்களிடத்தே முப்பண்புகளுள் ஒன்றிரண்டு மிகுந்தும் பிற குறைந்து மிருக்கும்.

**சித்தமாம் அவ்வி யத்தம் சிந்தனை யதுவுஞ் செய்யுஞ்**
**புத்திஅவ் வியத்தில் தோன்றிப் புண்ணிய பாவஞ்சார்ந்து**
**வத்துநிச் சயமும் பண்ணி வருஞ்சுக துக்க மோகப்**
**பித்தினின் மயங்கி ஞானக் கிரியையும் பேணி நிற்கும். 147**

மூலப்பகுதியின் சார்பால் உயிர் திரிபுணர்ச்சி யுடையதாம். அதுவே உலகப் பொருளிற் பற்றுவைத்தற் கேதுவாகிய மெய்யுணர் வின்மையைத் தருதலால், அது அவிச்சையைத் தருவதாக நூல்கள் கூறும்.

(பண்பு முதலினின்று மெய்ப்பண்பு, செயற்பண்பு, தாழ்பண்பு என்ற மூன்றும் உளவாகும். இவை முறையே சாத்துவிகம், இராசதம், தாமதமெனவும் படும். மெய்ப்பண்பிலே விளக்கமும் மென்மையும் அடங்கும்;

செயற்பண்பிலே விரைவும் தாக்கும் அடங்கும்; தாழ் பண்பிலே செருக்கும் தகாதன விழைதலும் அடங்கும்; மெய்ப்பண்பு அறிவினை விளக்கும். செயற்பண்பு நுகர்ச்சிகளிற்செலுத்தும்; தாழ்பண்பு மடி விளைக்கும். இவற்றின் விரிவே பிற குணங்கெல்லாம் என அறிக பெரியாரைப்பேணல் பணிவு, இனியவை கூறல், பொறை, உறுதி, இரக்கம், உயர்குண நாட்ட முதலியன முதற்பண்பிலடங்கும். வீரம், மானம், நுகர்ச்சி, விருப்பம் முதலியன இரண்டாவதனுள் அடங்கும். ஊக்கமின்மை, பேருறக்கம், களவு முதலியன மூன்றாவதனுள் அடங்கும்.)

முப்பண்பில் மெய்ப்பண்பு மிகுந்து தெளிமுதல் தோன்றும். தெளிமுதலானது உயிர்களின் நற்செயல், தீச்செயல் சார்தற்கிடமாய், ஒரு பொருளை இன்னதென்று துணிதற்கருவியாய், முக்குணச் சார்பால், இன்ப துன்ப மயக்கத் தோற்றம் புலப்படுவதாய் உயிர்களின் அறிவு தொழில்கட்கு ஆதரவாய் நிற்பது. அதுவே பலவகையாக பாவங்கட்கும் இடமாம். அவற்றை ஐம்பதெனவும், அறுநூற்றுப் பன்னிரண் டெனவும் கணக்கிடுதலுமுண்டு. அவற்றைச் சிவஞான பாடியத்துட் காண்க. "அளவிலாப் பாவகத்தாலமுக் குண்டு இங்கு அறிவின்றி" என்ற மணிவாசகமும் அது.

**ஆங்காரம் புத்தி யின்கண் உதித்தகந் தைக்கு வித்தாய்**
**ஈங்கார்தான் என்னோ டொப்பார் என்றுயான் என்ன தென்றே**
**நீங்காதே நிற்குந் தானும் மூன்றதாய் நிகழு மென்பர்**
**பாங்கார்பூ தாதி வைகா ரிகம்தைச தம்தா னென்றே. 148**

**மனமது தைச தத்தின் வந்தொரு பொருளை முந்தி**
**நினைவதுஞ் செய்தங் கைய நிலைமையின் நிற்கும் ஆங்கே**
**இனமலி சோத்தி ராதி கன்மஇந் திரிய மெல்லாம்**
**முனமுறை செய்த வைகா ரிகம்தரு மென்பர் முன்னோர்.**

தெளிமுதலினின்றும் வினைமுதன்மை யுண்டாகும்; அது அகந்தைக்கு வித்தாயுள்ளது, பிராணனை இயக்குவது, இச்சைவடிவாயது, பொறிகட்குப் புலனாய பொருளை யான் என்றும் எனதென்றுங் கருதுதற் கேதுவாய்த் தெளி முதலோடிணைந்துநிற்பது. வினை முதன்மை முப்பண்பில் இரண்டாவதாகிய செயற்பண்பு மிகுந்தது. அது தெளிவு, செலவு, தாழ்வு என்று முத்திறப்படும். இவற்றை முறையே தைசதம், வைகாரிகம், பூதாதி எனவடநூலார் கூறுவர். தெளிவில் நின்று மனமும், அறிவுப்பொறி ஐந்துந்தோன்றும். செலவில் நின்று வினைப்பொறியைந்துந் தோன்றும். தாழ்வினின்று தன்னளவு (தன்மாத்திரை) எனப்படும் பூதநுட்பமைந்துந் தோன்றும். இவையைந்தும், மனம் தெளிமுதல், வினைமுதன்மை என்னும் அகக் கருவிமூன்றுங்கூடி, எண்ணுடல் என்னும் நுண்ணுடம் பாகும். மனமானது, எதிர்ப்பட்டதைப் பற்றும். அதன் பகுதியாக சித்தம், பற்றியதை யாதென ஆராயும். நினைவாற்றலைச் சித்தத்தின் குணம் என்ப, மனம் ஐயநிலையில் நிற்கும். ஆங்காரம் துணிவேனென்றெழும். புத்தி துணியும்.

**நற்செவி துவக்குக் கண்நா நாசிஐந் தினையும் நல்லோர்**
**புத்திஇந் திரிய மென்று புகன்றனர் இவைத மக்குச்**
**சத்தநற் பரிசரூப இரதகந் தங்கள் ஐந்தும்**
**வைத்தனர் விடயமாக அடைவினின் மருவு மென்றே** 150

அறிவுப்பொறிகள் மெய், வாய், கண், மூக்கு, செவியென்னும் உறுப்புக்களை இடமாகக் கொள்வன. அவை ஐம்பூதங்களினிடமாய் நின்று, பூதஇயல்புகளை யறியும். அவற்றிற்குப் புலனாம் பூதகுணங்கள் ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்பன.

**வாக்கொடு பாதம் பாணி பாயுவோ டுபத்தம் ஐந்தும்**
**நீக்கினர் முன்னே கன்மேந் திரியங்க ளெனநி னைந்தே**
**ஆக்கிய வசன கமன தானமும் விசர்க்கா னந்தம்**
**ஊக்கமார் ஐந்தும் ஐந்தின் தொழிலென ஓதி னாரே. 151**

வினைப்பொறிகள் என்பன, சொல், கால், கை, கழிவிடம், மகிழிடம் என்னும் ஐந்தையுமிடமாக உடையன. இவற்றிற்குச் சொல்லுதல், செல்லுதல், இடுதல், கழித்தல், மகிழ்வித்தல் என்பன தொழில். (சொற்பொறி வானிடமாய் நின்று சொல்விக்கும். செல்பொறி காற்றிடமாய் நின்று செலுத்தும். கைப்பொறி அனலிடமாய் நின்று இடுதல் ஏற்றலைச் செய்யும். கழித்தற்பொறி நீரிடமாய் நின்று அழுக்குகளைக் கழிவிக்கும். இறுதிப்பொறி முதற் பூதத்தைப் பற்றி மகிழ்வு விளைக்கும்.)

**வாயாதி சோத்தி ராதி புறத்துவாழ் கருவி யாகும்**
**ஓயாத மனாதி காயத் துணருமுட் கருவி யாகும்**
**ஆய்வார்கட் கராக மாதி அவற்றினுட் கருவி யென்பர்**
**மாயாடன் வயிற்றி வற்றால் தொடக்குண்டு வாழுமான்மா. 152**

அறிவுப்பொறியும் வினைப்பொறியும், புறக் கருவிகள்; மனம், வினைமுதன்மை, தெளிமுதல் என்பன உட்கருவி. கலை, புலம், அவா என்பன உட்கருவிக்

குள்ளீடுகள். இவையனைத்தும் மாயையின் வயிற்றிற் றோன்றி யுயிரைக் கட்டுப்படுத்தி நிற்பன.

**ஓசைநற் பரிச ரூப இரதகந் தங்க ளென்று**
**பேசுமாத் திரைகள் ஐந்தும் பிறக்கும்பூ தாதி கத்தின்**
**நேசஇந் திரியங் கட்கு நிகழறி விதனாற் காண்டும்**
**ஆசைசேர் மனாதி தன்மாத் திரைபுரி யட்ட கந்தான்**

**சாற்றிய பஞ்ச தன்மாத் திரைகளிற் சத்த முன்னாத்**
**தோற்றும்வான் வளிதீ நீர்மண் தொடக்கியே ஒன்றுக்**
**கொன்றங்(கு)**
**ஏற்றமா மோசை யாதி இருங்குண மியைந்து நிற்கும்**
**ஆற்றவே விடய பூதம் அங்காங்கி பாவத் தாமே. 154**

**இரந்தர மாகி வான்றான் இடங்கொடுத்திடும்சலித்துப்**
**பரந்தவை திரட்டும்கால்தீச் சுட்டொன் றுவித்தல் பண்ணும்**
**நிரந்தரங் குளிர்ந்து நின்று பதஞ்செய்யும் நீர்மண் டானும்**
**உரந்தருங் கடின மாகித் திரித்திடும் உணர்ந்து கொள்ளே. 155**
**மண்புனல் அனல்கால் வான்பால் வடிவுநாற் கோணமாகும்**
**தண்பிறை மூன்றுகோணம் தகும் அறுகோணம் வட்டம்**
**வண்பொன்மை வெண்மை செம்மை கறுப்பொடு தூம வன்னம்**
**எண்தரும் எழுத்துத் தானும் லவரய வவ்வு மாமே. 156**

பூதநுட்பங்கள், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற பெயருடையன. இவை பொருள்களை யறியுமாறு பொறிகட்கு ஊக்கந்தருவன. பூதநுட்பங்களாய தன் மாத்திரைகளும், பூதகுணங்களும் பெயரொற்றுமை யுடையன எனினும், தன்மையால் வேறென உணர்க. பூதநுட்பங்களினின்றும் ஐம்பூதங்கள் தோன்றும். ஐம்பூதங்களுள் வான் எல்லாவற்றிற்கும் இடங்

கொடுக்கும் காற்றானது எங்குமியங்குவதாய்ப் பொருட்களைத் திரட்டுந்தன்மையது. நெருப்பானது, சுடுதலோடு பொருட்களை இணைக்குந் தன்மையு முடையது. நீரானது தண்மையோடு பதமாக்கும் தன்மையுமுடையது. மண்திண்மையோடு தாங்கும் பொறையுமுடையது. உலகப் பொருட்கள் ஐம்பூதக் கலப்பாலுண்டாய் விளங்குகின்றன. ஐம்பூதங்களின் தனிவடிவம் வேறாகக் கூறப்படும். மண் நாற்கோண வடிவுடையது; புனல் பிறைவடிவுடையது; அனல் முக்கோணவடிவுடையது; கால் அறுகோண வடி வுடையது; வான் வட்டவடிவுடையது. இவற்றின் நிறம், முறையே பொன்மை, வெண்மை, செம்மை, கருமை, புகைநிறம். இவற்றிற்கு வித்தான எழுத்தொலிகள் முறையே லகாரம், வகாரம், ரகாரம், யகாரம், அகாரம் என்பன. இறுதி நின்றதை ஹகாரமென்பாருமுளர்.

**குறிகள்வச் சிரத்தி னோடு கோகன தஞ்சு வத்தி**
**அறுபுள்ளி அமுத விந்து அதிதெய்வம் அயன்மா லாதி**
**செறிபுகழ் ஈச னோடு சதாசிவம் பூத தெய்வம்**
**நெறிதரு கலைஐந் திற்கும் நிகழ்த்துவர் இந்த நீர்மை. 157**

இவற்றிற்கு அடையாளங்களாவன முறையே வச்சிரப்படை அல்லது குலிசம், தாமரை, குறுக்கு என்னுஞ் சுவத்திகம், அறுபுள்ளி, வெண்டுளி (அமுதவிந்து) என்பன. இவைகட்குத் தலைவர்கள் முறையே மலரோன், மாலவன், உருத்திரன், பெருமுதல்வன், அருட்சிவன் என்பவர்கள். அவர்கள் தொழில் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல். அருளல் என்பன. தூயமாயையின் பகுதிகளாய்த்

தத்துவங்களை உள்ளடக்கிய ஐந்து கலைகட்கும் இவ்வாறே தலைவர்களும் அடையாளங்களும், எழுத்துக்களும் கூறப்படுவதால், கலைத் தலைவர்களே ஐம்பூதத்திற்கும் இயக்குந் தலைவர்களாய் உள்ளாரென்பதும், ஐங்கலையோடு ஐம்பூதங்கட்குத் தொடர்புண்மையும் ஊகிக்கப்படும்.

**சுத்தத்த் துவங்க ளென்று முன்னமே சொன்னஐந்தும்**
**இத்தகை மையின்இ யம்பும் இவைமுப்பத் தொன்றுமாகத்**
**தத்துவம் முப்பத் தாறாஞ் சைதன்னி யங்கள் ஐந்து**
**சித்தசித் தான்மா ஒன்று முப்பதும் அசித்தே செப்பில்** 158

**ஐந்துசுத் தத்தின் கீழேழ் சுத்தாசுத் தம்அ சுத்தந்**
**தந்திடும் புமான்கீ ழெண்மூன் றாயதத் துவஞ்சீவர்க்கு**
**வந்திடும் பிரேர காண்டம் மருவுபோக சயித்தி ரத்தோ(டு)**
**அந்தமில் அணுக்க ளுக்குப் போக்கிய காண்ட மாமே.** 159

முப்பத்தாறு தத்துவங்களும் அறிவில்லாத மாயா காரியங்களேயாம். தூயமுதல்களாகிய ஐந்தும் இறைவனது அறிவாற்றலின் நேராய சார்புடைமையால், அறிசார்பின எனப்படும். புருடத்துவமென்பது உயிர்ச்சார்புடைமையால் அறிவுள்ளது மில்லது மெனப்படும் சித்தசித்தாம். ஏனை முப்பது முதலும் சடமேயென அறிக. உயிர்களை இயக்குந் தலைவர்கள் தூயமாயா உலகங்களிலுள்ளவர்கள். உயிர்கட்குப்போக நோக்கந்தரும் தத்துவங்கள் தூய்தல் மாயையிற் றோன்றினவை. உயிர்கட்கு நுகர்ச்சி மூலப் பகுதியின் கீழுள்ள முதல்களால் அமைவன. ஆதலால், தூயமாயையிலுண்டாய முதல்களின் தொகுதி இயக்கு எனவும், தூய்தல் மாயை முதல்களின் தொகுதி

'நுகர்யோக்கு' எனவும், மூலப்பகுதி முதல்கள் 'நுகர்ச்சி' எனவும், கூறப்படுதற்குரியன.

தூயமாயா தத்துவங்கள் சிவமுதல் எனவும், தூய்தல் மாயா தத்துவங்கள் அறிமுதல் எனவும், மூலப்பகுதித் தத்துவங்கள் உயிர்முதல் எனவும் பெயர்பெறுதற்குரியன.

**தத்துவ ரூப மாகும் தரும்அரு வுருவ மெல்லாம்**
**தத்துவம் தூல சூக்க பரங்களு மாகி நிற்கும்**
**தத்துவம் தன்னிற் சாரும் அணுக்கள்சா தாக்கியத்தில்**
**தத்துவ சத்தம் சாரும் சகலமும் தத்து வங்காண். 160**

**தத்துவம் எண்மூன் றும்சென்(று) ஆன்மதத் துவத்தொடுங்கும்**
**வித்தையி னொடுங்கும் ஆறும் சிவத்தினி னொடுங்கும் மூன்று**
**நித்ததத் துவம்இம்மூன்றும் என்பர்கள் இரண்டும்நின்ற**
**சுத்தமாம் சிவத்தொ டுங்கும் தோற்றமும் இதுபோலாகும். 161**

அருவம், உருவம், அருவுருவமாய எல்லாப் பொருள்களும் முதல்களினாலாகிய வடிவங்களாம். முதல்கள் பரியன, நுண்ணியன, மிகநுண்ணியன என முத்திறப்படும். முதல்களை நிலைக்களமாகக் கொண்ட அணுபக்கத் தெய்வங்களும் சிவபக்கத் தெய்வங்களும் அவ்வம் முதல்களின் பெயராற் பேசப்படும். ஆதலால் எல்லாவற்றையும் முதல்களின்வைத்தறிக. நிலமுதல் மூலப்பகுதி யீறாகிய இருபத்து நான்கு முதல்களும் உயிர் முதல்வனாகிய கறைமிடற்றிறையால் ஒடுக்கமெய்தும். மூலப்பகுதியின் மேல் உள்ள ஆறுமுதல்களும் அறிமுதற் றலைவராய அனந்தரால் ஒடுங்கும். சிவமுதற் றலைவரால் தூயபுலம் (சுத்த வித்தை) அரசுமுதல், அருட்சிவமுதல் என்னுந் தூயமுதல்கள் ஒடுங்கும். அருண் முதலும் சிவமுதலுமாகிய இரு முதல்கள் தூய

சிவனால் ஒடுங்கும். தோற்றமும் இம்முறையே யாமென அறிக. தூயசிவனாரே மாறின்றி வைகுமுதல்வர்.

**நான்காம் அதிகரணம்**

**மொய்தரு பூத மாதி மோகினி அந்த மாகப்**
**பொய்தரு சமய மெல்லாம் புக்குநின் றிடும்பு கன்று**
**மெய்தரு சைவ மாதி இருமூன்றும் வித்தை யாதி**
**எய்துதத் துளங்க ளேயும் ஒன்றுமின் றெம்மிறைக்கே. 162**

**சிவஞ்சத்தி நாதம் விந்து சதாசிவன் திகழும் ஈசன்**
**உவந்தருள் உருத்தி ரன்தான் மால்அயன் ஒன்றி**
**னொன்றாய்ப்**
**பவந்தரும் அருவ நாலிங் குருவநா லுபய மொன்றாய்**
**நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்பன் என்பர். 163**

அகச் சமயம் ஆறினுக்கும் வேறாய சமயங்களிற் கூறப்படும் தெய்வங்களெல்லாம் மண்முதல் தூய்தல் மாயை வரையுள்ள முதல்களின் நிலை பெறுவனவாகும். கடவுள், உயிர், இருள், வினை, இரு மாயை என்பவற்றை ஒப்புக் கொண்டுள்ள அகச் சமயங்களாறும் கூறுந் தெய்வங்கள் இறைவனது ஒடுக்கம், காப்பு, வளர்ச்சி என்ற நிலைகளின் பாற் படுமாகலின் தூய முதல்களிடத்தவாம். சித்தாந்த சைவர் கூறும் கடவுள் எல்லாத் தத்துவங்களையும் கடந்த சைவர் கூறும் கடவுள் எல்லாத் தத்துவங்களையும் கடந்த தூய சிவமென உணர்க. அத்தூய சிவன் ஒருவனே, ஒன்பது வகையாக நடிப்பன. சிவம், அருள் (சத்தி) ஒலி, வட்டம், அருட்சிவம், பெருமுதல்வன், முதல்வன், மாலவன், மலரோன் என்னும் திருமேனிகள் ஒன்பதும்

ஒன்றிலிருந்து ஒன்றாக முறையே தோன்றும் முதல் நான்கும் இறைவனது தோன்றா திருமேனிகள். நடுநின்றது பிழம்பாய இறைவடிவம். இறுதியில் நின்ற நான்கும் உருவத் திருமேனிகள். தூய உலகங்களில் இவ்வொன்பதும் இறைவன் திருமேனிகளே. தூய்தல் மாயா உலகங்களிலே, பெருமான் அனந்தர் வாயிலாக உருவத்திருமேனி கொள்ளுவன். மூலப்பகுதிச் சார்பாய் உலகங்களிலே, கறைமிடற்றண்ணலை அவன் நிலைக்களமாகக் கொண்டு உருவத்திருமேனி கொள்ளுவனென அறிக.

**சத்தியாய் விந்து சத்தி யாய்மனோன் மனிதா னாகி**
**ஒத்துறு மகேசை யாகி உமைதிரு வாணி யாகி**
**வைத்துறும் சிவாதிக் கிங்ஙன் வருஞ்சத்தி ஒருத்தி யாகும்**
**எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள். 164**

அருள், வட்டம் என்பன சத்தித் தன்மையன. இவற்றோடு அருட்சிவ முதல்வி, பெருமுதல்வி, உமை, திருவாணி ஆகிய சத்தி வேறுபாடுகள் ஏழும் ஒரே சிவசத்தியின் திருமேனிகளே.

**சத்திதான் நாத மாதி தானாகுஞ் சிவமும் அந்தச்**
**சத்திதான் ஆதி யாகும் தரும்வடி வான வெல்லாம்**
**சத்தியும் சிவமு மாகும் சத்திதான் சத்த னுக்கோர்**
**சத்தியாம் சத்தன் வேண்டிற் றெல்லாமாஞ் சத்தி தானே. 165**

சிவசத்தி, எல்லா முதல்களிலும் பொருந்தி யிருக்கும். அச்சத்தியை இறைவன் நிலைக்களமாகக் கொண்டிருப்பன். ஆதலால் இறைவனது திருமேனி களெல்லாம் சத்தியின் சார்பாற்றோன்றினும், இருவருக்கும் பொதுவாயுள்ளனவே. சத்தி மரம்

போல்வ தெனின், சிவம் அம்மரத்தின் வைரம் போலும். சிவனுக்குச் சத்தி அவன் விரும்பியவாறே எல்லாம் ஆகு மாதலின், சத்தியை அவனுக்கு மனைவியென்று செப்பும் வழக்கு உளதாயிற்று.

**சிவம்சத்தி தன்னை ஈன்றும் சத்திதான் சிவத்தைஈன்றும்**
**உவந்திரு வரும்பு ணர்ந்திங் குலகுயி ரெல்லாம்ஈன்றும்**
**பவன்பிரம சாரி யாகும் பால்மொழி கன்னி யாகும்**
**தவந்தரு ஞானத் தோர்க்கித் தன்மைதான் தெரியு மன்றே. 166**

சிவ முதலில் நின்று அருண் முதல் தோன்றும். அதன் கணின்று அருட் சிவமுதல் தோன்றும். ஆதலால் சிவம் சத்தியைப் பெற்றும், சத்தி சிவத்தைப் பெற்றும், இருவருங் கலந்து உலகுமுயிருமாகிய எல்லாவற்றையும் பெற்றும், சிவபிரான் மணமிலா இளைஞனே; அருண்முதல்வி மணமிலா மங்கையே. தவத்திற் சிறந்த பேரறிஞர் இவ்வுண்மையை ஓர்வர்.

**தனுகரண புவன போகம் தற்பரம் பந்தம் வீடென்(று)**
**அணுவினோ டெல்லா மாகி அடைந்திடுந் தத்துவங்கள்**
**இனிதறிந் திவைநி விர்த்தி முதல்கலை யிடத்தே நீக்கி**
**நனிபர முணர்ந்தோ னந்தத் தத்துவ ஞானி யாவன். 167**

உடம்பு, கருவிகள், உலகம், நுகர் பொருள் என்பன முதல்களாலாயினவேயென்றும், உயிர்க்குக் கட்டு, வீடு என்னுமிரு வகையிலும் முதல்கள் கலப்புறு கின்றன என்றும், முதல்களின் கலப்பு உயிர்க்கன்றி முதல்வனுக்கில்லையென்றும் அறிந்து முதல்களை யுட்படுத்தி மேற்பட்ட நீப்புக்கலை முதலிய கலை களைத் தூயதாக்குமிடத்தே, முதல்களின் தொடர் பறுக்கப்பெற்று, அவற்றைக் கடந்த பரம்பொருளை

ஐயந்திரிபறத் தெரிந்தோனே சிவஞ் சத்தியைப் பற்றிய உண்மையை அறியவல்லவன் ஆவன்.

**எல்லாமாய்த்தத்துவங்கள் இயைந்தென் அணுவுக் கென்னில்**
**தொல்லாய கன்ம மெல்லாம் துய்ப்பித்துத் துடைத்தற் கும்பின்**
**நில்லாமை முற்று வித்தது நீக்கவும் கூடிநின்ற**
**பொல்லாத ஆணவத்தைப் போக்கவும் புகுந்ததன்றே. 168**

உயிர்கட்கு எல்லா வகையிலும் முதல்கள் வந்து பொருந்திய தெதற்கெனின், மூல வினையின் செயற்பாடுகளை யெல்லாம் நுகர்வித்தொழித்து, அவ்வினையை முதிர்வித்துப் பற்றைக் கழித்தற் பொருட்டும், அதனை யொழிப் பதோடுமூலமாகிய ஆணவத்தைப் போக்குதற்பொருட்டும் என அறிக.

**ஒன்றதாய் அநேக சத்தி யுடையதாய் உடனாய் ஆதி**
**அன்றதாய் ஆன்மா வின்தன் அறிவொடு தொழிலை ஆர்த்து**
**நின்றுபோத் திருத்து வத்தை நிகழ்த்திச்செம் பினிற் களிம்**
**பேய்ந்(து)**
**என்றும்அஞ் ஞானங் காட்டும் ஆணவம் இயைந்து நின்றே. 169**

ஆணவமலமென்பது யாதெனில், செம்பிற் களிம்பு போல, உயிர்களோடு தொடக்கமில் காலங் கலந்துள்ள தாய், பொருட்டன்மையால் ஒன்றேயாய்ப், பலபல திறல் களுடையதாய், உயிரினறிவையுந் தொழிலையு மறைப்பதாய், மாயா காரியங்களோடு கூடிய உயிர்கட்கு நுகர்ச்சி விருப்பம் நிகழ்தற்கேதுவாய் நின்று அறியாமையைப் பயப்பது.

மலமென வேறொன் றில்லை மாயாகா ரியம தென்னின்
இலகுயிர்க் கிச்சா ஞானக் கிரியைகள் எழுப்பும்மாயை
விலகிடும் மலமி வற்றை வேறுமன் றதுவே றாகி
உலகுடல் கரண மாகி உதித்திடும் உணர்ந்து கொள்ளே. 170

மாயையே ஆன்ம ஞானக் கிரியையை மறைத்துநிற்கும்
தூயவெம் பரிதி தன்னைத் தொடர்முகில் மறைத்தாற் போலப்
போய்முகில் அகலச் சோதி புரிந்திடு மதுவே போலக்
காயமு மகல ஞானத் தொழில்பிர காச மாமே. 171

ஆணவமென அறிவை மறைப்பது வேறொன்றில்லை மாயையே அங்ஙனஞ் செய்வது என்றால், உயிர்களின் அறிவு விழைவு செயல்களை மாயையானது விளக்குமேயன்றி மறைப்பதில்லை. உலகு, உடல், கருவிகள் முதலியன மாயையிலுதிப்பன. மாயைப் படைப்புக்களோடு உயிர் கூடாத விடத்து அதன் அறிவினை மறைப்பது ஆணவமென அறிக.

பரிதியைமுகில்மறைப்பப் பாயொளிபதுங்கினாற்போல்
உருவுயிர் மறைக்கின் ஞானக்கிரியைகள் ஒளிக்குமாகும்
கருதிடும் இச்சா ஞானக் காரியம் காயம் பெற்றால்
மருவிடும் உயிர்க்குக் காயம்வந்திடா விடின்மறைப்போ. 172

போதகா ரியம்ம றைத்து நின்றது புகல்ம லங்காண்
ஓதலாம் குணமு மாக உயிரினுள் விரவ லாலே
காதலால் அவித்தை சிந்தத் தரும்கலை யாதி மாயை
ஆதலா லிரண்டுஞ் சோதி இருளென வேறா மன்றே. 173

கதிரவனை முகில் மறைத்தாற்போல உயிரினறிவினை மாயை மறைக்குமென்றும், முகில் விலகியவுடன் கதிரவனொளி இலங்குதல்போல, மாயை ஒழியவே,

உயிரினறிவு விளங்குமென்றுங் கூறுதல் பொருந்தாது. அது உண்மையானால் மாயைச்சார்பால் உயிரினறிவு செயல் கனொழிதல் வேண்டும். அவ்வாறில்லாது, மாயைப் படைப்பாய உடல் முதலியவற்றின் சார்பால் அறிவு செயல்களின் விளக்கமும், அவை நீங்கினால் அவற்றின் மறைப்பும் ஏற்படுதலால், மாயை விளக்குங் கருவியேயன்றி மறைக்குங் கருவியாகாது.

ஆணவமானது உயிருடன் கலந்து உயிரறிவை மறைத்தலால், உயிரின் குணம்போல்வதொன்று; அது இருள்போல்வது மாயை அவ்விருளை அகற்றும் விளக்குப் போல்வது. ஆதலால் ஒளியுமிருளும் போல் தம்முள் மாறு பட்ட அவ்விரண்டும் வெவ்வேறென அறிக.

**புருடன்தன் குணம் அவித்தை யெனில்சடம் புருடனாகும்**
**குருடன்தன் கண்ணின் குற்றம் கண்ணின்தன் குணமோ கூறாய்**
**மருள்தன்றன் குணம தாகி மலம்அசித் தாகி நிற்கும்**
**தெருள்தன்றன் குணம தாகிச் சித்தென நிற்கும்சீவன். 174**

ஆணவம் உயிரின் இயற்கைக்குணம் என்றால் உயிர் சடப்பொருளாகும். குருடனுக்குக் கண் தெரியாமை கண்ணின் குணமாகுமா? ஆகாது. கண்ணின் ஒளிக்குணத்தை மறைக்கும் படலம்போல் உயிரின் அறிவுக்குணத்தை மறைப்பதாய் அறியாமையைத் தன்குணமாக உடைய ஆணவமென்பது சடமாய், உயரின் வேறாயுள்ளதென அறிக.

**மும்மலம் நெல்லி னுக்கு முளையொடுதவிடு மிப்போல்**
**மம்மர்செய்தணுவினுண்மை வடிவினை மறைத்துநின்று**
**பொய்ம்மைசெய் போக பந்த போத்திருத் துவங்கள் பண்ணும்**
**இம்மலம் மூன்றினோடும் இருமல மிசைப்பன் இன்னும். 175**

**மாயையின் காரி யத்தை மாயேய மலம தென்றும்**
**ஏயும்மும் மலங்கள் தந்தந் தொழிலினை இயற்ற ஏவும்**
**தூயவன் தனதோர் சத்தி திரோதான கரிய தென்றும்**
**ஆய்வர் இம்மலங்கள் ஐந்தும் அணுக்களை அணைந்து நிற்கும். 176**

நெல்லுக்கு முளைக்குமாற்றல், தவிடு, உமி என்பன சேர்ந்தாற்போல மும்மலங்களும் உயிரோடு பிணைந்து நின்று அதற்கு மயக்கம் விளைத்து அதன் உண்மை வடிவத்தை மறைத்து நுகர்ச்சியையும், நுகர்ச்சிப் பொருளையும், நுகருந் தன்மையையும் நல்கும். வினை, உயிர்க்கு இன்ப துன்பங்களைத் தோற்றுவித்தலால் முளைத்தற் சத்தி போன்றது. மாயை இன்ப துன்ப மீயுமுடல், கரண முதலியன அளிப்பது. அது தவிடுபோல்வது. ஆணவம் உமிபோல்வது. அது இன்ப துன்பங்களை உயிர் நுகருமாறு நிலைபெறுத்துவது. உடல் கரண முதலிய மாயைப் படைப்புக்களை மாயேய மலமென்றும், மும்மலமுந் தத்தம் தொழிலைச் செய்யும்படி, உயிர்பக்குவப்படும் வரை மறைத்தற் றொழிலைச் செய்யுஞ் சிவசத்தியை மறைப்பு மலமென்றும் கொண்டு மலமைந்து என்றும் கூறுப.

**மலம்மாயை கன்மம் மாயே யம்திரோ தாயி மன்னிச்**
**சலமாரும் பிறப்பி றப்பில் தங்கிஇத் தரைகீழ்மேலும்**
**நிலையாத கொள்ளிவட்டங் கறங்கென நிமிடத் தின்கண்**
**அலயாரும் இறைவ னாணை யால்உயிர் நடக்கு மன்றே. 177**

**அண்டஞ் சுவேத சங்கள்உற்பிச்சம் சராயு சத்தோ(டு)**
**எண்தரு நாலெண் பத்து நான்குநூ றாயி ரத்தால்**
**உண்டுபல் யோனி யெல்லாம் ஒழித்துமா னுடத்து தித்தல்**
**கண்டிடில் கடலைக் கையால் நீந்தினன் காரி யங்காண். 178**

**நரர்பயில் தேயந் தன்னில் நான்மறை பயிலா நாட்டில்**
**விரவுத லொழிந்து தோன்றல் மிக்கபுண் ணியந்தா னாகும்**
**தரையினிற் கீழைவிட்டுத் தவஞ்செய்சாதியினில்வந்து**
**பரசம யங்கள் செல்லாப் பாக்கியம் பண்ணொ ணாதே 179**

**வாழ்வெனும் மையல் விட்டு வறுமையாம் சிறுமை தப்பித்**
**தாழ்வெனும் தன்மையோடுசைவமாம் சமயம்சாரும்**
**ஊழ்பெறல் அரிது சால உயர்சிவ ஞானத் தாலே**
**போழிள மதியி னானைப் போற்றுவார் அருள்பெற்றாரே. 180**

*ஐம்மலங்களாற் கட்டுண்ட உயிர் பிறப்பிறப் பெடுத்து, கொள்ளிவட்டமும் காற்றாடியும் போலத் துறக்கம், நானிலம், நிரயம் என்னு மூன்றிடங்கட்கும் போக்குவரவு செய்யும், முட்டை, வியர்வை, வித்து, கருப்பை என்னும் நால்வகைத் தோற்றத்தினையுடைய எண்பத்து நான்கு நூறாயிரப் பிறப்பு வகைகளிலும் உழன்று மக்கட் பிறப்புடையனாதல், கடலைக் கையால் நீந்திக் கரையெய்தினாற் போலும். மக்களாய்ப் பிறந்தும் உறுதிப்பொருளை யுணர்த்தும் நூல்கள் பயிலாத நாகரிகமில்லாத நாடுகளிற் பிறவாமல், தவத்திற்குரிய நாடுகளிற் பிறத்தல் பெருந்தவப்பயனாகும். அங்ஙனம் பிறந்தாலும் தவஞ்செய்யுங் குடியிற் பிறத்தல் அரியதாகும். அவ்வாறாயின பின்னும், புறச்சமயம் புகாது மெய்ந்நெறி நிற்கப்பெறுதல் அரிதாகும். மேலும் ஆற்றல், கல்வி, செல்வம், குலம், அதிகாரமென்னும் வாழ்வுபற்றி வருஞ் செருக்கும் வறுமைபற்றி வருஞ் சிறுமையுமில்லாது, தாழ் வெனுந் தன்மையோடு சிவநெறிசாரும் நல்வினையுடைமை மிகஅரிது. சிவநெறி*

*ஒழுகிப் பயன்கருதாத அறிவோடு இறைவனை வழுத்துவோர் அவனருள் பெற்றோராவர்.*

**மானுடப் பிறவி தானும் வகுத்தது மனவாக் காயம்**
**ஆனிடத் தைந்து மாடும் அரன்பணிக் காக அன்றோ**
**வானிடத் தவரும் மண்மேல் வந்தரன் றனைஅர்ச்சிப்பர்**
**ஊனெடுத் துழலும் ஊமர் ஒன்றையும் உணரார் அந்தோ. 181**

**கருவினுள் அழிவ தாயும் கழிந்திடா தழிவ தாயும்**
**பரிணமித் தழிவ தாயும் பாலனாய் அழிவ தாயும்**
**தருணனாய் அழிவ தாயும் தான்நரைத் தழிவ தாயும்**
**உருவவே யழிவே யானால் உள்ளபோ தேபார் உய்ய. 182**

*மக்கட் பிறவியை இறைவன் வகுத்தது மனமொழி மெய்களால் அவன் பணியாற்றுதற்பொருட்டே. வானுலகினவரும் மணிமிசைவந்து அரனை வழிபாட நிற்பவும், வழிபடுதற்கென மக்கள் யாக்கையெய்திய மடவோர் தங்கடமை யாதுமுணரார். அங்ஙன முணராமை அவர்களின் தீவினைப்பயனே. மக்கள் உடம்பானது, கருப்பத்திலே அழிவதாயும், பிறந்தவுடன் அழிவதாயும், பிறந்து சிறிது வளர்ந்து அழிவதாயும், வளர்ச்சி முற்றியபின் அழிவதாயும் நரைத்து அழிவதாயும் உள்ளதாகலின், அதன் நிலையாமையை உணர்ந்து அஃது உள்ளபோதே அது கொண்டு உய்தி கூடுதற்கு முயலவேண்டும்.*

**ஒருபுலன் நுகரும் போதங் கொன்றில்லை ஒன்றின் பாலும்**
**வருபயன் மாறி மாறி வந்திடும் எல்லாம் மாறும்**
**ஒருபொழு துணரி னுண்டாம் அல்லதிவ் வல்லல் வாழ்க்கை**
**மருள்கன வதுவும் போல மாயும்பின் மாயு மன்றே. 183**

**அரிசனம் பூசி மாலை அணிந்துபொன் னாடை சாத்திப்**
**பரிசனம் பின்பு செல்லப் பாரகர் பரிக்கக் கொட்ட**
**வரிசின்னம் ஊதத் தொங்கல் வந்திட உணர்வுமாண்டு**
**பெரியவர் பேச்சுமின்றிக் கிடத்தலால் பிணத்தோ டொப்பர். 184**

ஒரு பொருளை நுகருங்கால் நமது அறிவு மற்றொன்றை அறிவதில்லை. ஒன்றினையறியுங்காலும் அதனை இடைவிடாதறிய முடியாது, இடைவிட்டு அறியுந்தன்மையது. தூக்கம் மயக்கம் முதலியன வந்தபோது அறிவு முற்றிலும் அடங்கி விடுகின்றது. துன்பமிக்க இவ்வாழ்க்கையானது இருப்பது போலத் றிக் கனவுபோல மறைந்தொழியும். செல்வச் செருக்கினாற் பெரியவர் என்று பேசப்படுவோர் பிணத்தோ டொப்பர். அவர்க்கும் பிணத்திற்கும் சந்தனப்பூச்சு, பூமாலைசூடுகை, பொன்னாடைதரித்தல், பரிசனத் தொடர்பு கொடுட்டுமுழக்கம், சிவிகையேற்றம், அறவொழிந்து பேச்சின்றிக் கிடத்தல் என்பன பொதுவாதல் காண்க.

**பிணத்தினை ஒத்துவாழ்வோர் பின்நடைப் பிணங்கள் போல**
**உணக்கியே உழல்வீர் உங்க ளுடலுயிர் உணர்வு மெல்லாம்**
**கணத்திடைத் தோன்றி மாயும் காயமென்றறிந் தொருக்கால்**
**வணக்குறீர் அரனை என்றும் வானவர்வணங்கவைப்பன். 185**

பிணத்தினையொத்து வாழ்வார் பின்னே நடைப் பிணங்கள் போல, தமது உடலையும், உயிரையும், உள்ளத்தையும் வருத்தித் திரிபவர்கள், உடல் முதலியன வெல்லாம் கணப்பொழுதிற்றோன்றி மறையுந் தன்மையன வென்றறிந்து இறைவனை ஒருபொழுதாவது அன்போடு வணங்குவார்களாயின், அவர்களுக்கு அவன்

வானவர் என்றும் வணங்கும்படியான உயர்பதம் அளிப்பன்.

## மூன்றாந் சூத்திரம்

**உயிரெனப் படுவ திந்த உடலின்வே றுளதாய் உற்றுச்
செயிருறும் இச்சா ஞானச் செய்திகள் உடைய தாகிப்
பயில்வுறும் இன்பத் துன்பப் பலன்களும் நுகரும் பார்க்கில்
துயிலொடும் அஞ்ச வத்தைப் படும்உண்மை துரியா தீதம். 186**

உடலின் வேறாக உயிரென்பது ஒன்றுண்டு. அஃது உடம்பிற் பொருந்தி யான் எனதென்னுஞ் செருக்குடைய தாகும். ஐம்பொறிகள் உயிரல்ல. அவை அறியுமெனினும் உயிரைப் போல விழைவு செயலுடையன அல்ல. பிராணன் உயிரன்று. அஃது இன்ப துன்பங்களை நுகராமையின் நனவிலுங்கனவிலும் உயிரொன்றே பயில்வதால், கனவில் மாத்திரம் பயிலும் நுண்ணுடம்பு உயிரன்று. உயிர்கள் ஐவகை நிலைகளுடையன. ஆதலின், அவையில்லாத கடவுள் உயிரன்று. கருவிகளனைத்தும் நீங்கிய மேல் நிலையிலும் உயிருண்டு. ஆதலாற் கருவிகளின் கூட்டம் உயிரன்று

**உடலின் வேறுயிரேன் இந்த உடலன்றோ உணர்வ தென்னின்
உடல்சவ மான போதும் உடலினுக் குணர்வுண் டோதான்
உடலினின் வாயுப் போனால் உணர்ச்சியின் றுடலுக் கென்னின்
உடலினின் வாயுப்போகாதுறக்கத்தும் உணர்வதின்றே. 187**

உடலிற்கு வேறாக உயிர் உண்டென்று கொள்வானேன். உடம்பே பொருள்களையறியும் என்னாமோவெனின், உடல் பிணமானபோது அஃது எதனையும் அறியக்காண்கிலமே. பிணமாயபோது

பிரிந்துபோவது உயிரென அறிக. பிராணவாயு நீங்கினமையால் உடல் அழியாதாயிற்றெனின், பிராணவாயு தூக்கத்தில் நீங்காதிருந்தும் அஃது ஒன்றையுமறியக் கண்டிலம்.

**அறிவதைம் பொறியே யென்னின் உறக்கத்தி னறியாவாகும்**
**அறிவதும் ஒன்றொன் றாக ஒன்றொன்றாய் அறியு மென்னின்**
**அறிவுக ளொன்றையொன்றங் கறிந்திடா ஐந்தையுங் கொண்(டு)**
**அறிவதொன்றுண்ட தான்மா ஐம்பொறி அறிந்திடாவே. 188**

உடலினின்று பொருள்களை அறிவது ஐம்பொறிகளென்னில், அவைகளும் தூக்கத்தில் அறிவதில்லை. ஐம்பொறிகள் ஒடுங்கிநிற்றலே தூக்கத்தில் தெரியாமைக்குக் காரணமெனில், ஐம்பொறிகளுள் ஒன்று எதையாவது அழுந்தி அறியுங்காலை, மற்றப் பொறிகள் தத்தம் புலனை அறிவதில்லை. மேலும், ஒரு பொறி அறிந்ததை மற்றொன்று அறியக் கூடவில்லை. ஆதலால், ஐந்து பொறிகளையுங் கொண்டு பொருள்களை அறியுமுயிர் வேறுளதென்க.

**அறிந்திடும் பிராணவாயு அடங்குதல் விடுதல்செய்தால்**
**அறிந்திடா துடலு றக்கத் தறிவின்மை கரண மின்மை**
**அறிந்திடும் முதலி யாகின் அதுநிற்கக் கரணம் போகா**
**அறிந்திடும்பிராணன் தன்னை அடக்கியும்விட்டும் ஆன்மா.**

பிராணவாயு கருவிகளைக்கொண்டு அறியும். தூக்கத்தில் ஐம்பெறிகளுதவியின்மையால் அஃது அறிதல் இல்லை யெனின், பிராணவாயு அவற்றின் வாயிலாக அறிந்து கொண்டிருக்கும்போது, அவை ஒடுக்கக் காரணமில்லை, ஆதலால் கருவிகளை ஆளுமுயிர் வேறு உளதென அறிக.

# இலக்கணவியல்

--------

## நான்காஞ் சூத்திரம்

**உணர்வனகரண மென்னின் ஒன்றையொன்றுணரா**
**வெவ்வேற்(று)**
**அணைதருஞ் செயல்கள்நான்கும் அறிந்தவை அடக்கி ஆக்கிப்**
**புணருமுட் கரண மாக்கிப் புறக்கரு வியினும் போக்கி**
**இணைதரு மிவற்றின் வேறாய் யானென தென்ப தான்மா**
**190**

அந்தக்கரணங்கள் பொருள்களையறியுமெனில், ஐம்பொறிகள் போல அவைகளுள்ளும் ஒன்று செய்வது மற்றொன்று செய்யலாகாமையின், அவற்றின் வேறாய், யான் எனது என்னுமுணர்ச்சி உடையதாய், அந்தக்கரணங்களை அறிந்தடக் குவதாய்க் கனவில் அவற்றை உட்கருவியாகக் கொண்டும், நனவில் அவற்றைப் புறக்கருவிகளிற் செலுத்தியும் நிற்கும் உயிர் வேறுளதென அறிக.

## முதல் அதிகரணம்

**கருவியாம் மனமும் புத்தி அகங்காரம் சித்தம் நான்கும்**
**மருவிஆன் மாவே என்ன வரும்தீபம் எனத்தெரிந்தங்(கு)**
**ஒருவியான் மாவினுண்மை உணர்ந்தவர் தமையுணர்ந்தோர்**
**தருமிது பசுஞா னம்பின் சிவஞானத் தனக்கு மேலாம். 191**

மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் ஆய்கருவி, தெளிகருவி, செயற்கருவி, நினைகருவி ஆகிய நான்கும் உயிரோடு ஒன்றித்துநின்று உயிரேயாய்த்

தோன்றினும், அவை உயிரல்லவென்றும், கண்ணுக்கு விளக்குப்போல அவை உயிர்க்குக் கருவியேயா மென்றும் அறிந்து உயிரின் உண்மைத் தன்மை உணர்ந்தோர், தம்மையுணர்ந்தோராவார். தம்மை யுணர்தல் பசு ஞானமெனப்படும். அதற்கு மேலாயது சிவஞானம்.

**அவ்வுடன் உவ்வும் மவ்வும் மனம்புத்தி அகங்காரங்கள்**
**செவ்விய விந்து நாதஞ்சித்தமோ டுள்ள மாகும்**
**ஒவ்வெனும் எழுத்தாம் ஐந்தும் உணர்வுதித்தொடுங்கு மாறும்**
**பவ்வமும் திரையும்போலும் பார்க்கில் இப்பண்புந் தோன்றும்.**

**அயன்அரி அரனும் ஈசர் சதாசிவம் அதிதெய் வங்கள்**
**உயவரும் அவ்வோ டுவ்வு மவ்விந்து நாதங் கட்குப்**
**பயனுறும் அஞ்சில் ஆன்மாப் பரவிடில் அசித்தாம் பார்க்கில்**
**சயமுறு வளியி ரண்டும் தவிர்த்துறில் தானுந் தோன்றும். 193**

அந்தக்கரணங்களாற் பெறப்படும் அறிவானது, சுட்டுணர்வெனப்படும். தூய முதல்களிலெழும் நுட்ப எழுத்துக்களால் சுட்டறிவு விளங்கற்பாலது. அவைகள் அந்தக்கரணங்களோடும் உயிரின் தோன்றல் நிலையாய புருட தத்துவத்தோடுந் தொடர்புடையன. நுண்ணொலி தோன்றல் முதலைச் செலுத்தும்; நினைகருவியைத் தொகையொலியும் செயற்கருவியை அகாரமும், தெளிகருவியை உகாரமும் ஆய்கருவியை மகாரமும், செலுத்தும். நுண்ணொலி, தொகையொலி, அகரம், உகரம், மகாரம் ஆகிய ஐந்துஞ் சேர்ந்து ஓங்காரமாம். சுட்டுணர்வு தோன்றியொடுங்குவதை நோக்கின், கடலின் அலையெழுந்து அடங்குவதை ஒக்கும்.

அகாரம், உகாரம், மகாரம், தொகையொலி, நுண்ணொலி என்பவற்றிற்கு முறையே அயன், அரி, அரன், முதல்வன், அருட்சிவன் என்பவர்கள் தலைவர்கள், அகக்கருவிகள், எழுத்துக்கள், தலைவர்கள் ஆகிய முத்திறத்தை வரோடும் உயிர் பொருந்தியவழி, அது பொருள்களை யறிந்து பயனுறும். அங்ஙனம் பொருந்தாவழி, உயிர் அறிவில்லாதது போன்று கிடக்கும். இதனை இடைபிங்கலையிற் செல்லும் காற்றினை அடக்கித் தேர்ந்த யோகிகள் நன்கறிவர்.

**ஆன்மாவின் வடிவு தானே அனேகார்த்தக் கூட்ட மென்னில்**
**பார்ப்பார்கட் கன்மா இன்றாய்ப் பலபொரு ளுண்மை யாகும்**
**சேர்ப்பாய பலவே உண்மை என்றிடில் சென்றிவற்றை**
**ஓர்ப்பான்வே றுணர்வோர்க்கெல்லாம் உணர்பொருள் வேற தாமே. 194**

அகக்கருவி, எழுத்து, தலைவர் என்னு மூவகையுங் கூடிய கூட்டமே உயிர் என்னில், கூட்டமென்பது ஒரு பொருளாயில தாகவே, கூடிய பல பொருள்கள் உளவென்பதும், உயிர் இல்லையென்பதும் முடியும். அவையே ஆன்மாவெனில், அவற்றை அறிபவன் யார்? அவற்றை அறிவோன் அவற்றின் வேறாய உயிரென அறிக.

## இரண்டாம் அதிகரணம்

**அறிவிச்சை செயல்க ளெல்லாம் அடைந்தணல் வெம்மையும் போல்**
**குறியுற்றங் கேகா னேக குணகுணி பாவ மாகி**
**நெறியுற்றுங் நிற்கு மென்னில் நிகழ்புலன் கரணமெல்லாம்**
**செறிவுற்ற கறிவு கொள்ள வேண்டுமோ சீவ னார்க்கே 195**

ஒரு பரம் பொருளே எண்ணிறந்த வடிவுகளாய்த் திரிபுற்று நிற்ப, அவையெல்லாம் அறிவு, விழைவு, செயல்களுடையவனாய் அப்பரம் பொருளோடு தீயுஞ்சூடும்போலக் குண குணித் தன்மையுடையனவாய் நிற்பன; அவையே உயிரெனப் படுமெனின், கருவிகளு தவியின்றித் தானே பொருள்களை அறியக்கூடிய கடவுளின் பகுதியாய உயிர்களும் தாமே அறியும் வன்மையுடையனவாயிருத்தல் வேண்டும். அங்ஙன மின்றி, உயிர் அகக்கருவி, புறக்கருவிகளைப் பொருந்தி நின்றே அறிதலைச் செய்கின்றது. ஆகவே, உயிர்கள் கடவுளின் பகுதியாகமாட்டா.

**குணங்களை யின்றி ஒன்றாம் குறியுடைத் தான்மா என்னின்**
**இணங்கிடா இச்சாஞானக் கிரியைகள் இவைஉடற்கட**
**பிணங்கிடுஞ் சன்னிதிக்கண் எனிற்பிணத் துறக்கத் தின்றாம்**
**உணங்கிடும் கரண மென்னில் சன்னிதி ஒழிந்ததன்றே. 196**

**சன்னிதி குணம தாகும் தானென்போல் என்னிற் காந்தம்**
**முன்னிரும் பென்றாய் ஈர்க்கு முறைமையுண் டகற்றலின்றாம்**
**உன்னுதல் ஒடுங்கல் ஓடல்இருத்தலே கிடத்தல்நிற்றல்**
**என்னுமித்தொழில்கள் மற்றும் இயற்றுவதான்மா என்னே.197**

இனி உயிர், அறிவு மாத்திரையாய் நிற்பது எனில், உடலின் கண்ணே அறிவு, விழைவு, செயல்கள் நிகழமாட்டா. உயிரின் முன்பாக உடலின்கண் கருவிகள் தொழிற்படுமெனில், பிணத்தின் கண்ணும், தூக்க மெய்திய உடலின் கண்ணும் அறிகருவிகள் தொழிற்படாமைக் கேது என்னை? அவைகள் ஒடுங்கினமையே ஏது என்னில், உயிரின் சந்நிதியில் உடல் இருக்கும்போது அவை ஒடுங்குதற்குக் காரணமில்லை.

இதனாற் சந்நிதியென்ற கொள்கை தவறு. சந்நிதியென்பது ஒருவகைப் பண்பு. அஃது இரும்பை யிழுக்குங் காந்தத்தின் குணம் போல்வதெனின், காந்தத்தின் முன் இழுத்தலாகிய ஒரு குணமே கண்டோம். அதுபோல, உயிரின்முன் உடம்பிற்கும் ஒரு செயலே நிகழவேண்டும். அவ்வாறின்றி நினைத்தல், மறத்தல், ஓடல் இருத்தல், கிடத்தல், நிற்றல் என்னு மாறுபட்ட தொழில்கள் நிகழ்தற்கேதுவென்னை? அவையனைத்தும் சந்நிதியென்ற ஒரு பண்பின் பயன்றானா? அத்தகைய பண்புடைய உயிரைக் குணம் யாதுமில்லாது அறிவு மாத்திரையாய் நிற்பதென்றல் பொருந்து மாறில்லை.

**உருவுயி ரென்னின் இந்த உடலினுட் காண வேண்டும்**
**வருவது பரிணா மத்தாய் அநித்தமாம் பூத மாகும்**
**கருவினில் நுழையு மாறும் காட்டிட வேண்டும் கண்ணின்**
**மருவிடா தென்னின் உன்றன் வாயினால் உருவன் றென்னே.**

இனி, உயிர் நுண்ணிய உருவப்பொருள் என்பையாயின், அஃது உடம்பினுள் எங்கேயாவது கண்ணுக்குப் புலனாதல் வேண்டும். அஃது உடம்பாய்த் திரிபுற்று நிற்குமென்னில், அஃது அழிவெய்தும் பூதத்தோடு ஒன்றாதல் வேண்டும். கருவினுள் அஃது எவ்வாறு உடம்பின் மூலத்தின் வேறாகப் புகுவதென் பதுங் காட்டவேண்டும். உயிர் கட்புலனாகாதெனின், உருவமென்ற கொள்கை தவறாகும்.

**சூக்கும உருவ தென்னில் தூலகா ரணம தாகும்**
**ஆக்கிய மனாதி தன்மாத் திரைவடி வசேத னம்பின்**
**நீக்கிய சூக்கு மத்தே நிற்பதோர் உருவுண் டென்னின்**
**ஆக்கிடும் உருவமெல்லாம் அசித்துமாய் அநித்தமாமே. 199**

**அருவுரு என்னில் ஆன்மா அருவுரு வாவ தின்றாம்**
**உருவரு வாகா தாகும் ஒருபொருட் கிரண்டு தன்மை**
**வருவது மில்லை காட்ட வன்னிபோல் மருவு மென்னின்**
**உருவமுங் காண வேண்டும் உண்மையும் ஒழிந்து போமே.**

**சந்திரன் வடிவு போலத் தான்அரு வுருவ மென்னின்**
**வந்துநங் கண்ணிற் றோன்றும் வடிவுள தாமு யிர்க்கும்**
**இந்தஊ னுருவந் தானாய்எழுவதும் உயிரே யென்னில்**
**பந்தமாய் அசித்தாய் ஆன்மாப் பவுதிக மாகு மன்றே. 201**

மேலும் உயிர் நுண்ணிய உருவுடையதாகலிற் கட்புலனா காதெனின், அது நுண்ணுடம்புபாகும். அந்நுண்ணுடம்பு சடமாகிய மனமுதலிய அகக் கருவிகளாலும் பூத நுட்பங்களாலு மாயது. உயிரானது நுண்ணுடம்பினுள், அதி நுட்பமாக நிற்பதெனில், அது கலை முதலிய முதல்களாலாயபரவுடம்பாய்ச் சடமாகும். அப்பரவுடம்பு அழிவுடையதாகலின் அதுஉயிராதல் யாங்ஙனம்? இனி உயிர் அருவுருவப் பொருளென்னில் அருவாயுமுருவாயும் ஒரே காலத்தில் ஒருபொருள் எவ்வாறிருத்தல்கூடும்? விறகில் நெருப்புப்போல எனின், அது கடைந்தபோது உருவாய் வெளிப்படுதலின், அது தக்க உவமையாகாது. மதியின் வடிவுபோல உயிர் அருவுருவாமென்னில், மதிபோல உயிர்கட் புலனாதல் வேண்டும். மதி முற்றிலும் மறைந்து சிறிது சிறிதாகத் தோன்றுதல்போல, உயிர் அருவாய்க் கருவிற்பதிந்து உடம்பாக வளர்ந்து தோன்றுமெனில், சித்தாகிய உயிர் அசித்தாகிய உடம்பாதல் எப்படி?

**அருவவி காரி ஆன்மா ஆகாயம் போல வென்னின்**
**உருவினைக் கட்டி யாட்டி ஓட்டிமீட் டுலாவப் பண்ணி**

**மருவிநிற் பித்தி ருத்திக் கிடத்திமண் புரட்டி மற்றும்**
**பெருவிகா ரங்க ளெல்லாம் தருவதென பேசி டாயே. 202**

இனி, உயிரானது ஆகாயம்போல அருவாய் விகார மற்று நிற்பது என்னில், அங்ஙனம் அது நிற்பின், உடம்பினை இயக்கி, ஆடுதல், ஓடுதல், நிற்றல், இருத்தல், கிடத்தல், புரளுதல் முதலிய பல்வேறு செயல்களைச் செய்விப்பதுயாது?

**அசித்தெனின் உணராதான்மா அசித்துச்சித் தாகுமென்னின்**
**அசித்துச்சித் தாகா தாகும் சித்தசித் தாவ தில்லை**
**அசித்தொரு புறமா யொன்றில் சித்தொரு புறமாய் நில்லா(து)**
**அசித்துறாச் சித்தே யென்னின் அசித்தடைந் தறிவ தின்றாம்.**

இனி உயிர்க்குத் தானே அறியும் அறிவில்லை. மனத்தோடு கூடித்தான் அறியுமென்னில், உயிர் சடப்பொருளாகும். சடப்பொருள் பிறிதொரு சடத்தைக் கூடினால் அறியுந்தன்மையடையுமோ? உயிரைச் சித்தசித்து என்னில் ஒரு பொருளே அறிவுடையதாயும் அறிவிலதாயு மிருத்தல் கூடு மென்றல் தவறு. அசித்தினைச் சேராத சித்து என்று உயிரைக் கூறவும் இடமில்லை. அசித்தாகிய கருவிகளைப் பொருந்தாமல் உயிர் எதனையும் அறியாது.

**உயிரினை அணுவதென்னின் உடம்பல துவார மோடும்**
**பயில்வுறக் கட்டுணாதுபாரமும் தரித்துச்செல்லா(து)**
**அயர்வுறும் அசித்தாய்ப் பூத அணுக்களி னொன்ற தாகும்**
**இயல்புறும் அவய வத்தால் அணுவுரு இறக்குமன்றே. 204**

இனி உயிர் பரமாணு அளவிற்றாய் உடம்பினுள் நிற்பது எனில், அஃது உண்மையாயின் உடம்பில் உயிர்

தங்கமாட்டாது. உடம்பிலுள்ள பல்கோடிதுளைகளுள் ஒன்றின் வழியாக அது ஓடிப்போய்விடும். உடம்பில் அது கட்டுப்பட்டு நிற்பதெப்படி? அது, பூத அணுக்களிலொன் றாமன்றோ. அஃது அத்துணைச் சிறிதாயின், உடற் பொறையைத் தாங்குவதெப்படி? அணுவினும் நுட்பப் பொருளிருப்பதால், அணு ஒடுங்குவதுபோல உயிரும் ஒடுங்கியழிவதாகும்.

**உடலினின் ஏக தேசி உயிரெனின் உருவாய் மாயும்**
**படர்வுறுமறிவின்றெங்கும் சுடரொளிப்பண்பதென்னில்**
**சுடர்தொடிற் சுடுவதெங்கும் தொட்டிடம் அறிவுண்டாகும்**
**அடர்புலன் இடத்து மொக்கஅறிவெழவேண்டுமன்றே. 205**

உயிரானது, உடம்பில் நெஞ்சின்கண் நுட்பமாக நிற்ப, விளக்கொளிபோல அதன் அறிவானது எங்கும் பரவுமென்ற மிருதி நூலார் கொள்கையைத்தழுவினால், உயிர்க்கு உரு உண்டென்ற கொள்கைபோல அஃதுந்தவறாகும். உயிரானது உடம்பெங்கும் வியாபகமா யிருந்தாலன்றி உடம்பு முழுவதும் உணர்ச்சி உடையதாகாது. விளக்கின் ஒளிபோல உயிர் பரவி நிற்குமென்னில், விளக்கினொளி விளக்கின் நுண்வடிவே. அவ்வாறே உயிரினறிவுமா மெனில், உயிர் ஓரிடத்தில் மாத்திரம் நிலைத்திருப்பதென்று கொள்ள இடமில்லை. விளக்கின் சூடுபோல்வது உணர்ச்சி எனில் விளக்கின் சுடரோ, தொட்டவரைச் சுடும்; அதன் ஒளி பரவுமிடத்தெல்லாம் அஃது ஒத்த முறையிற் சூடு தருவதில்லை. உயிரின் உணர்ச்சி உடம்பெங்கும் ஒத்த முறையிற்பரவியிருத்தலால், விளக்கின் சூடு உயிரின் அறிவிற்கு உவமையாகாது. விளக்கை ஓரிடத்தில்

வைத்தால் அதற்கு நெருக்கமான இடமெங்கும் அதன் ஒளி ஒரு தன்மையாய்ப் பரவும். உயிரின் அறிவு ஐம்புலன்களிடத்தினும் ஒருதன்மையாக நிகழ்வதில்லை. இக்காரணத்தாலும் விளக்கொளிதக்க உவமையாகா தென அறிக.

**உருவினில் நிறைந்து நின்றங் குணர்ந்திடும் உயிர தென்னின்**
**மருவிடா துறக்கம் வாயில் அறிவொக்க வழங்க வேண்டும்**
**பெருகிடும் சுருங்கும் போதம் பேருடல் சிற்று டற்கண்**
**வருமுடற் குறைக்க வொக்கக் குறைந்துபின் மாயு மன்றே.**

இனி, உடம்பளவில் உயிர் நிறைந்து நின்று பொருள்களை உணருமெனில், உறக்கம் நேரிடக் காரணமில்லை. ஐம்பொறியினும் ஒருங்கே அறிவு நிகழ்தல் வேண்டும். மேலும் பெரிய உடல், சிறிய உடல் என்பவை களுக்குத் தக்கவாறு உயிரினறிவு பெருகுதலும் சுருங்குதலு முடையதாக வேண்டும். உடலுறுப்பினைக் குறைப்பின் அறிவுங் குறைந்து, உடம்பு மாய, அறிவும் மாய்ந்துபோம். ஆதலால் இக்கொள்கை தவறு.

**எங்குந்தான் வியாபி யாய்நின் றுணரும்இவ் வான்மா**
**வென்னில்**
**தங்கிடும் அவத்தை போக்கு வரவுகள் சாற்றல் வேண்டும்**
**பங்கமார் புலனொன் றொன்றாய்ப் பார்த்திடல் பகரல்**
**வேண்டும்**
**இங்கெலாம் ஒழிந்தால் நிற்ப தெங்ஙனம் இயம்பல்**
**வேண்டும்.** 207

இனி உயிர் கடவுளைப்போல, எங்கும் பரவி நின்று பொருள்களை யறியுமென்னில், உயிர்க்கு உணர்ச்சி

நிலை மாற்றங்களாய அவத்தைகள் ஏற்பட வேண்டியதில்லை; போக்கு வரவிற்கிடமில்லை; ஐம்புலனும் ஒருங்கே அறியாது ஒவ்வொன்றாய் அறிதற்குங் காரணமில்லை; எங்கும் பரவிய உயிர் ஒருடம்பில் அடங்கி நிற்றல் இயலாது.

**சுத்தமாம் ஆன்ம சித்தைத் துகளுடல் மறைத்த தென்னின்**
**வைதுறா துடற்கண் வாயில் கரணங்கள் வழியால் ஞானம்**
**ஒத்துறும் மலமற் றாலும் உறுமலம் வீடு மின்றாம்**
**பெத்தமும் அடையான் முத்த னாய்ப்பிர காச னாமே. 208**

உயிரின் குற்றமற்ற அறிவை மாயாகாரியங்கள் தடை செய்து நிற்றலின், உயிர் அவத்தைகளுறுவதாயிற்று என்னில், உடம்பின் கணுற்ற புறக்கருவிகளும் அகக்கருவிகளும் உயிரினறிவை விளக்குவனவேயன்றித் தடுப்பன வல்ல. உயிரின் தூய அறிவினை மாயை மறைக்குமென்னில், அம்மறைப்பு எக்காலத்தும் நிகழ்வதாகும். நிகழின், வீடு என்பது இல்லையாய் முடியும். வீட்டைந்தபின் மாயை மறையாதெனின், உடம்பொடுகூடாத கேவலநிலையிலும் மறைப்பு இல்லையாதல் வேண்டும். அங்ஙனமின்றிக்கேவல நிலையில் மறைப்பு இருத்தலின் அக்கொள்கை தவறான தென்றறிக.

**அசித்தரு வியாப கம்போல் வியாபகம் அருவ மின்றாய்**
**வசித்திட வரும்வி யாபி யெனும்வழக் குடைய னாகி**
**நசித்திடா ஞானச் செய்தி அனாதியே மறைத்து நிற்கும்**
**பசுத்துவ முடைய னாகிப் பசுவென நிற்கும் ஆன்மா. 209**

உயிரின் வியாபகம் சடப்பொருளினிறைவு

போல்வதன்று. அது முதல்வனது துடக்கற்ற நுட்ப வியாபகம் போல்வதுமன்று. சார்ந்தன் வண்ணமாய்ப் பற்றிய பொருள்களிற்றங்கும் வியாபக முடையதாய், ஆணவ மலத்தால் மறைக்கப்பட்டு அழியாத அறிவு, விழைவு, செயல்களுடையதாய் நிற்பது உயிரென அறிக.

**மாயையின்வயிற்றுள் மன்னிவருஞ்செயல்ஞானமிச்சை**
**ஏயுமக் கலாதி மூன்றால் ஏகதே சத்தி னேய்ந்திங்(கு)**
**ஆயுமுக் குணங்கள் அந்தக் கரணங் களாதி யெல்லாம்**
**காயபெத் தங்க ளாகிக் கலந்துடன் நிற்கும் ஆன்மா. 210**

**சூக்கும தேகி யாகித் தூலரு பத்தின் மன்னிச்**
**சாக்கிர முதலா யுள்ள அவத்தையுள் தங்கி எங்கும்**
**போக்கொடு வரவு மெல்லாம் புரிந்துபுண் ணியங்கள் பாவம்**
**ஆக்கியும்பலன்களெல்லாம் அருந்தியும் நிற்கும் ஆன்மா. 211**

**மருவானந்தம் விஞ்ஞான மனோபிராணன் அன்னமயம்**
**உருவாந்தன்மை யுண்டாய்முன் ஒன்றுக்கொன்று சூக்குமமாய்**
**வருமாம் அன்ன மயம்பற்றி மாயை முதற்கா ரணமாகும்**
**அருவாயான்மா ஐங்கோசத்தார்ப் புண்டவற்றின் அகம்**
**புறமாம். 212**

ஆணவமலத்தால் மட்டும் மறைப்புண்டுகிடக்கும் உயிரானது, தூய்தல் மாயையின் பகுதியைப் பொருந்தியவுடன் அறிவிச்சை செயல்கள் பொதுவாக விளங்கப்பெறும். பின் அது கலை, புலம், அவா என்பவைகளின் சார்புற்றுச் செயல், அறிவு, விருப்பம் வெவ்வேறு விளங்கப்பெறும். பின் அகக்கருவிகளை உள்ளடக்கிய முக்குணச் சார்புற்று நிற்கும். இவை முறையே மாயாவுடம்பு, கலையுடம்பு, குணவுடம்பு

என ஓதப்பெறும். பின், உயிர் நுண்ணுடம்பாய எண்ணுடல் (புரியட்டகம்) பெற்று, பருவுடம்பு பெற்று அதன் வண்ணமாய் நின்று நனவு முதலிய ஐவகை யுணர்ச்சி நிலைகளை உரிய காலங்களிலுறுவதாய்ப் போக்கு வரவு செய்து நல்வினை தீவினைப் பயன்களை நுகர்ந்து நிற்கும். இதுகாறுங் கூறிய ஐயுடம்பு முறையே இன்பப் போர்வை, புலப்போர்வை, அகப்போர்வை, உயிர்ப் போர்வை சோற்றுப்போர்வை யெனப்படும். இவ்வைந்தினும் அகமும் புறமும் போக்குவரவு செய்து, உயிர் அவ்வவ்வுடம்பின்றன்மையதாய் நிலவும்.

**தோற்பாவைக் கூத்தும் தொல்லை மரப்பாவை இயக்கமும் சீர்த்**
**தேர்ப்பாரிற் செலவும் வேறாய்ச் செலுத்துவோர் செய்தி தானும்**
**பார்ப்பாய வேடங் கட்டி ஆடுவோர் பரிசு போலும்**
**ஆர்ப்பாய காயந் தன்னை ஆன்மாநின் றாட்டு மாறே. 213**

இவற்றை உயிர் நடத்து முறைமை, தோற் பாவையுட் புகுந்து அதனை ஆட்டுதல்போலவும், மரப்பாவையை நாரினாலியக்குவது போலவும், தேரினைப் பாரின்மீது பாகன் செலுத்துவதுபோலவும், கூடுவிட்டுக் கூடு பாய்தல் போலவும், வேடம் பூண்டு நடிப்பது போலவுமாம்.

**என்னுடல் பொறிபி ராணன் கரணம்என் னுணர் வென் றக்கால்**
**தன்னின்வே றாகும் நீஎன் றன்மனை என்ற வெல்லாம்**
**நின்னின்வே றாகும் என்னின் நீங்கிடா இவையிங் கென்னின்**
**உன்னின வாகும் நீயாம் உகிர்மயிர் உகவுங் காண்டி 214**

**பொன்னணி ஆடைமாலை போதுமே லான போதிங்(கு)**
**என்னணி யானென் றுன்னி இருந்தனை பிரிந்தபோது**

நின்னணி நீயும் அல்ல வாயினை காயம் நின்னில்
அன்னிய மாகும் உன்னை அறிந்துநீ பிரிந்து பாரே. 215

உடலியா னல்லேன் இந்த உணர்வுயான் அல்ல வான
கடனியாதென்னின்வேறு கண்டுணர்வென்ன தென்கை
இடரிலா என்ற னான்மா என்றபோ தான்மா வேறோ
திடனதா உயிரை வேறு கண்டிடார் செப்பலேகாண். 216

புந்தியை மனம தென்றும் மனமது புந்தி யென்றும்
சிந்தையைச் சீவமெனன்றும் சீவனைச் சிந்தை யென்றும்
முந்தனை ஆன்மா வென்றும் ஆன்மாவை முந்த னென்றும்
வந்திடும்என்றன் ஆன்மாஎன்றது மற்றொன்றைக்காண். 217

அறிவுடல்சிந்தை ஆன்மா அணைதலால் ஆன்மாஎன்பர்
எறிசுடர் விளக்கிருக்கு மிடத்தையும் விளக்கென்றாற் போல்
பொறிபுலன் கரணமெல்லாம் புலப்படும் அபேதமாகிப்
பிறிதரா தறிவ தான்மா அறிபொருள் பின்ன மாமே. 218

*உடல், பொறி, உயிர்க்கால் அகக்கருவி என்பவற்றையும், அவற்றைக் கொண்டுணரும் திரிபுணர்சி யையும், தன்னோடு வேற்றுமையிலவாகக் கருதி, யான் என்றும், எனதென்றும் அவற்றைப் பாராட்டுமியல்பு உயிர்க்குண்டு. என்னூர், என் வீடு எனப்படும் புறப் பொருள்கள் உயிரின் வேறாதல் போலவும், உடம்பின் பகுதியாய நகம், உரோம முதலியன வேறாதல்போலவும், உடல், பொறி முதலியனவும் உயிரின் வேறாமென அறிக. பொன், அணி, ஆடை, மாலை முதலியன அணியப்பட்டபோது யான் எனது என்றற்குரியவாய். களையப்பட்டபோது அவை அணிந்தவனின் வேறாதல் போல, உடல் பொறி முதலியனவும் வேறாமாதலின் அவற்றை யான்*

அல்லேனெனப்பிரித்தறிக. உயிரையும் எனது என்றுரைக்கும் வழக்குக் கேது என்னை எனில், உயிரினத் தனியே கண்டு அறியாமையின் அவ்வாறு செப்புதல் வழக்காயிற்று. மேலும் எனது உயிர் என்ற போது, உயிர் என்ற சொல் உயிரைக் குறியாது அதனோடியை புடைய பிறிதொன்றைக் குறித்தலுண்டு. புத்தியை மனமென்றும், மனத்தைப் புத்தியென்றும், சித்தத்தை உயிரென்றும், உயிரைச் சித்தமென்றும், சிவனைச் சீவனென்றும், சீவனைச் சிவனென்றுங் கூறுமுபசார வழக்குண்மை யுணர்க. புத்தி, உடல், சித்தம் முதலியவற்றை உயிர் வேறறப் பொருந்திநின்று பொருள்களை அறிதல் பற்றி, அவற்றையுமான்மா என்று நூல்கள் கூறும். அது சுடரின் பெயராகிய விளக்கென்பது தகழிக்கும் ஆனாற் போல என்க.

**கண்டுணர் புருடன்வேறு கனவுகண்டொடுங்கிக்காயம்**
**உண்டியும் வினையு மின்றிக் கிடந்துயிர்த் திடவு ணர்ந்து**
**கண்டிடுங் கனவுஞ் சொல்லி ஒடுக்கமுங் கருதிவேறாய்**
**உண்டியும் வினையும்உற்றிங் குணர்த்திட உணராநிற்கும். 219**

**புருடனே அறிவ னாகில் பொறிபுல னாதி போதம்**
**தருவதென் அறிவு மாயா தனுகர ணாதி பற்றி**
**வருவதிங் கனாதி யாக மலத்தினின் மறைந்து நிற்பன்**
**அருவனாய் இவற்றோ டாளும் அமைச்சரும் அரசும்**
**போல்வன். 220**

உணர்வுத் தொழிலுமுடைய நனவு நிலைநின்று, கனவு நிலை வந்து நீங்கியபோது அதனைப் பிறர்க்கெடுத்துரைத்தும், சுழுத்தியாகிய துயில்பெற்று விழித்தபின் சுழுத்தி நிலையுணர்த்தும், புசிப்பும்

தொழிலும் அற்ற துரிய நிலையிலும் அதற்கு மேல் நிலையிலுஞ் சென்று மீண்டகாலை அவற்றின் எதிர்மறையாய நிலைகளின் வைத்து அவற்றை யுணர்ந்தும் நிலவுகின்ற உயிர் அந்நிலைகட்கேதுவாய மாயைக் கருவிகளின் வேறாமெனவுணர்க. அரசன் அமைச்சரோடு கலந்து ஆளுதல்போல, உயிர் மாயைக் கருவிகளைப் பற்றி நின்று பொருள்களையறிவதாய், ஆணவமலத்தில் மறைந்து அருவமாய் நிற்பதென அறிக.

## மூன்றாம் அதிகரணம்

**படைகொடு பவனி போதும் பார்மன்னன் புகும்போல தில்லில்**
**கடைதொறும் விட்டு விட்டுக் காவலு மிட்டுப் பின்னர்**
**அடைதருந் தனியே அந்தப் புரத்தினில் அதுபோல் ஆன்மா**
**உடலினின் அஞ்ச வத்தை உறுமுயிர் காவ லாக. 221**

அமைச்சர், படைத்தலைவர் முதலிய பரிசனங்களோடு உலாப்போந்த அரசன்மீண்டு மாளிகையிற் புகும்போது வாயில்கள் தோறும் அவரவர்கட்கு விடை கொடுத்துக் காவலும் வைத்துவிட்டு அந்தப்புரத் தினிற்றனியே செல்லுதல் போல, உயிரும் படிப் படியாகக் கருவிகளினீங்குதலும், உடலுக்குக் காவலாகப் பிராணனை நிறுத்துதலும் உரியதாய்த் தான் ஐவகை நிலைகளையடையும்.

**சாக்கிர முப்பத் தைந்து நுதலினிற் கனவு தன்னில்**
**ஆக்கிய இருபத் தைந்து களத்தினிற் சுழுனை மூன்று**
**நீக்கிய இதயந் தன்னில் துரியத்தில் இரண்டு நாபி**
**நோக்கிய துரியா தீதம் நுவலனிமூ லத்தி னொன்றே. 222**

புருவநடுவில் நனவுநிலை அடையுங்கால் முப்பத்தைந்து கருவிகளும், கழுத்திற் கனவு நிலையடையுங்கால் இருபத்தைந்து கருவிகளும், குருதியகமாய நெஞ்சத்தில் உறக்க நிலையடையுங்கால் மூன்று கருவிகளும், உந்தியிலே பேருறக்க நிலையடையுங்கால் இரண்டு கருவிகளும், மூலாதாரத்தில் உயிர்ப்படங்கு நிலையடையுங்கால் ஒரு கருவியும் தொழிற்படும்.

(நனவிலே அறிவுப் பொறியைந்தும் வினைப் பொறியைந்தும் காலினம் (வாயுக்கள்) பத்தும், ஐம்பொறிக்குப் புலனாகும் ஓசை முதலிய ஐந்தும், வினைப் பொறித் தொழிலாகிய உரை முதலிய ஐந்தும், அகக்கருவிகள் நான்கும் தோன்றல் முதலும் நிகழும். கனவில் பொறிகள் பத்தும் அடங்கியுள்ளன. சுழுத்தியில் நினைகருவி உயிர்க்கால் தோன்றல் முதல் என்பனவே யுள்ளன. பேருறக்கத்தில் உயிர்க்காலும் தோன்றல் முதலுமே தொழிற்படும். உயிர்ப்படங்கு நிலையில் உயிர்க்காலும் அடங்கும். எஞ்சிய ஒன்றேயுளது.)

**இருவகைச் சாக்கி ராதி அவத்தைகள் இயல்பு தானும்**
**ஒருவகை கீழே நூக்கி உற்பவங் காட்டும் ஒன்று**
**பெருகமேல் நோக்கித் தீய பிறப்பறுத் திடுமி யோகில்**
**தருவதோர்சமாதி தானும் தாழ்ந்துபின் சனனஞ்சாரும். 223**

**அறிதரு முதல வத்தை அடைதரு மிடத்தே ஐந்தும்**
**செறிதருங் கரணந்தன்னில் செயல்தொறுங் கண்டு கொள்நீ**
**பிறிவிலா ஞானத் தோரும் பிறப்பற அருளா லாங்கே**
**குறியொடும் அஞ்ச வத்தை கூடுவர் வீடு கூட. 224**

இவ்வவத்தைகள் மேல்நோக்கித் தோன்று முறையும் கீழ்நோக்கி யொடுங்குமுறையுமென இருவகை யுடையன. முன்னது பிறப்பறுத்திடுதற் கேதுவாகும். பின்னது பிறப்புண்டாதற்கேதுவாகும். யோக நிலையிலும் இதுபோல இருவகையுண்டு. நனவு நிகழும் புருவ நடுவின் கண் ஐந்தவத்தையும் உள்ளன. அது நனவில் நிகழுஞ் செயல்களை ஆய்ந்து பார்க்கின் நுட்பமாக விளங்கும். சுத்தநிலையிலுள்ள அறிஞர்க்கும் அவ்விடத்திலே வீடு பேற்றிற்கேதுவாக ஐந்தவத்தை நிகழும்.

**ஐந்துசாக் கிரத்தின் நான்கு கனவினில் சுழுனை மூன்று**
**வந்திடுந் துரியந் தன்னின் இரண்டொன்று துரியாதீதம்**
**தந்திடும் சாக்கி ராதி அவத்தைகள் தானந் தோறும்**
**உந்திடுங் கரணந் தன்னில் செயல்தொறு முணர்ந்து**
**கொள்ளே. 225**

சுத்த நிலையில் தூயமாயை முதல்களுள், நனவிலே ஐந்தும் கனவிலே தூய புல மொழிந்த நான்கும், சுழுத்தியில் சிவம், அருள், அருட்சிவமென்ற மூன்றும், பேருறக்கத்திலே சிவமும், அருளும், அதற்குமேல் நிலையில், சிவமுத லொன்றும் இயக்கு கருவிகளாய் நிற்கும்.

**கேவல சகல சுத்தம் என்றுமூன் றவத்தை ஆன்மா**
**மேவுவன் கேவ லந்தன் னுண்மைமெய் பொறிக ளெல்லாம்**
**காவலன்கொடுத்த போதுசகலனாம் மலங்களெல்லாம்**
**ஓவின போது சுத்த முடையன்உற் பவந்து டைத்தே. 226**

உயிரானது தனி நிலை, கலப்பு நிலை, தூய நிலை

என மூன்று பெருநிலையுறும். மாயைப்படைப்புக் களோடு கூடா நிலை, அவற்றோடு கூடிய நிலை, ஆணவ வலி அடங்கிய நிலை யென்பன அவை.

**அறிவிலன் அமூர்த்தன்நித்தன் அராகாதி குணங்களோடும்**
**செறிவிலன் கலாதி யோடும் சேர்விலன் செயல்களில்லான்**
**குறியிலன் கருத்தா வல்லன் போகத்திற கொள்கையில்லான்**
**பிறிவிலன் மலத்தினோடும் வியாபிகேவலத்தில் ஆன்மா. 227**

தனி நிலையில், உயிரானது ஆணவ மலத்தோடு மாத்திரங் கூடி நின்று தோற்றக் கேடுகளிலதாய், அறிவு இச்சை செயல்கள் விளங்கப் பெறாமையாற் போகத்தில் நோக்கிலதாய், சுட்டு நிலையடையாது பரப்புடைய தாயிருப்பது.

**உருவினைக் கொண்டு போக போக்கியத் துன்னல் செப்பல்**
**வருசெயல் மருவிச் சத்த மாதியாம் விடயம் தன்னில்**
**புரிவதுஞ் செய்திங் கெல்லா யோனியும் புக்கு ழன்று**
**திரிதரும் சகல மான அவத்தையிற் சீவன் சென்றே. 228**

கலப்புநிலையில் உயிர், அறிவு, இச்சை, செயல் விளங்கப்பெற்று. விருப்பு வெறுப்புடையதாய்ப் பிறப் பிறப்புடைத்தாய், வியாபகமின்றிக் கண்டிதப் பட்டுச் சார்ந்ததன் வண்ணமாயிருக்கும்.

**இருவினைச்செயல்களொப்பின் ஈசன்தன்சத்திதோயக்**
**குருவருள் பெற்று ஞான யோகத்தைக் குறுகிமுன்னைத்**
**திரிமல மறுத்துப் பண்டைச் சிற்றறிவொழிந்து ஞானம்**
**பெருகிநா யகன்தன் பாதம் பெறுவது சுத்த மாமே. 229**

இருவினையொப்பும், கட்டுமுதிர்வும், அருள் வீழ்ச்சியும் ஏற்பட்டுக் குருவருள் பெற்று ஞானநெறி

நின்று மும்மல நீக்கமெய்திச் சிற்றறி வொழித்து சிவஞானம் வளரப்பெற்று முதல்வன் திருவடி அடைதலே தூய நிலையாகும்.

## ஐந்தாஞ் சூத்திரம்

**பொறிபுலன் கரண மெல்லாம் புருடனால் அறிந்தான் மாவை**
**அறிதரா அவையே போல ஆன்மாக்க ளனைத்தும் எங்கும்**
**செறிதரும் சிவன்ற னாலே அறிந்திடும் சிவனைக் காணா**
**அறிதரும் சிவனே யெல்லாம் அறிந்தறி வித்து நிற்பன். 230**

ஐம்பொறி, அகக்கருவிகள் முதலியன தம்தம் புலன் (அறியவேண்டிய விடயங்) களை உயிர் தம்மோடு கலப்புற்று நிற்பதாலறிகின்றன. அவை தம்மையும் தம்மைச் சார்ந்து செலுத்தும் உயிரையும் அறியமாட்டா. அதுபோல எவ்விடத்தும் அறிவாய் நிறைந்த இறைவன் திருவருளால் உயிர்கள் வினைப்பயன்களையறிந்து நுகரும். எனினும், தம்மையும் தம்மைச் செலுத்தி நிற்குந்திருவருளை யுமறியமாட்டா. சிவனே எல்லாவற்றையும் அறிந்தும் அறிவித்தும் நிற்பன்.

## இரண்டாம் அதிகரணம்

**இறைவனே அறிவிப் பானேல் ஈண்டறி வெவர்க்கும் ஒக்கும்**
**குறைவதி கங்கள் தத்தம் கன்மமேற் கோமான் வேண்டா**
**முறைதரு செயற்குப் பாரும் முளரிகட் கிரவியும்போல்**
**அறைதரு தத்தங் கன்மத் தளவினுக் களிப்பன் ஆதி. 231**

**அறிந்திடும் ஆன்மா வொன்றை ஒன்றினால் அறிதலானும்**
**அறிந்தவை மறத்த லானும் அறிவிக்க அறித லானும்**
**அறிந்திடுந் தன்னை யுந்தான் அறியாமை யானுந் தானே**
**அறிந்திடும் அறிவன் அன்றாம் அறிவிக்க அறிவ னன்றே.**

இறைவனே உயிர்க்கு அறிவிப்பானெனில், எல்லார்க்கும் அறிவு ஓரளவிற்றாக இல்லாமல், ஏற்றத்தாழ்வு ஏற்படக்காரணமென்னை யெனில், அவரவர்வினை வேறுபாடே யென்றுணர்க. தாமரையின் அலர்ச்சிக்குக் காரணம் தாமரையேயாயினும் கதிரவ னெழுச்சியும் வேண்டும். பயிர்செய்யுந் தொழிலால் விளை பொருள்கள் விளைந்தாலும், அத்தொழிற்கு வேறாக நிலமும் இன்றியமையாததே. உயிர் ஒன்றையறிதற்கு முதல்வன் துணையும் வினையின் துணையும் வேண்டப்படும். வினையும் உயிரினறிவும் போதாவோ? முதல்வனது துணையும் வேண்டுமோ வென்னில், உயிரானது ஒவ்வொன்றை ஒவ்வொரு கருவியின் துணைகொண்டே யறிதலாலும். அறிந்தவற்றை மறத்தலாலும், ஒருவன் அறிவிக்க அறிதலாலும் பொருள்களை யறிகின்ற தன்னைத்தான் அறியாமையினாலும், முதல்வன்போலத் தானே யறியும் இயற்கை யறிவுடைய தன்று. அது அறிவிக்க அறியுந்தன்மைத்து.

**கருவியால் பொருளால் காட்டால் காலத்தால் கருமந்தன்னால்**
**உருவினால் அளவால் நூலால் ஒருவரா லுணர்த்த லானும்**
**அருவனாய் உண்மை தன்னில் அறியாது நிற்ற லானும்**
**ஒருவனே எல்லாத் தானும் உணர்த்துவன் அருளினாலே. 233**

**கருவியும் பொருளும் காட்டும் காலமும் கன்மந் தானும்**
**உருவமும் அளவும் நூலும் ஒருவரு முணர்த்த லின்றி**
**அருவனா யுலக மெல்லாம் அறிந்தவை யாக்கி வேறாய்**
**ஒருவனே உயிர்கட் கெல்லாம் உயிருமாய் உணர்த்தி நிற்பன்.**
**234**

**இறைவன்தன் சன்னிதிக்கண் உலகின்றன் சேட்டை யென்னும்**
**மறைகளும் மறந்தாய் மாயை மருவிடான் சிவன வன்கண்**
**உறைதரா தசேத னத்தால் உருவுடைஉயிர்கட் கெல்லாம்**
**நிறைபரன் சன்னி திக்கண் நீடுணர் வுதிக்கு மன்றே. 235**

அகக்கருவி, புறக்கருவி, புலன்கள் ஆகிய கீழ் முதல்களாலும், கலை முதலிய அறிமுதல்களாலும், காலத்தாலும், ஊழினாலும், தன் உடம்பாலும், காண்டல் கருதல் உரையென்னுமளவைகளாலும், அளவையுணர்ச்சிக் கேதுவாய தூய மாயையிலெழும் நால்வகைச் சொல்லாலும் உயிரின் அறிவு விளங்கப்பெறும். இவைகளினுதவி யில்லாவிடத்து உயிர் அருவமாய் ஒன்றையு முணரா நிலை யெய்தும், இவையனைத்தையும் வகுத்து உயிரோடியைந்து அறிவளிப்பவன் முதல்வனாதலால், உயிர்கள் முதல்வனை யின்றி யொன்றையு மறியாவென வுணர்க. இக்கருவிகள் யாதுமினறித் தானே யறியுமாற்றலுடைய முதல்வன் அருவனாய், உயிர்களெல்லாவற்றிற்கு முயிராய், தனிநிலையில் நுண்ணிய ஐந்தொழில் செய்தும், கூட்டு நிலையில் நனவிலே மிக நுண்ணிய ஐந்தொழிலியற்றியும், வெளிப்படையான ஐந்தொழில் நிகழ்த்தியும் இவற்றால் துடக்குறாது வேறாய் நிற்பன். மாயா காரியமெல்லா மறியும் இறைவனறிவு உயிர்களுக்கு உணர்ச்சி விளைக்கு முகத்தாற் பயன்படுவ தேயன்றி அவனுக்குப் பயன் படுவதில்லை. அவன் பாசத்தைத் துய்ப்பதில்லை; அறிவிலாப் பொருளை இறைவன் பொருந்தானாதலினென்க. இறைவன் உலகெலா மறிந்து நிற்றல் உயிர்கட்கு நுண்ணிய ஐந்தொழில் நிகழ்த்தற்கேதுவாகும். நனவிலே உயிரினை ஐந்து உணர்ச்சி நிலையுறு வித்தல் மிக நுண்ணிய ஐந்தொழிலாகும்.

**உலகமே உருவ மாக யோனிகள் உறுப்ப தாக**
**இலகுபே ரிச்சா ஞானக் கிரியையுட் கரண மாக**
**அலகிலா உயிர்ப்பு லன்கட் கறிவினை யாக்கி ஐந்து**
**நலமிகு தொழில்க ளோடும் நாடகம் நடிப்பன் நாதன். 236**

*இறைவன், உலகைத்தனது உருவத்திருமேனி யாகவும் பிறப்பு வகைகளெல்லாம் உறுப்புக்களாகவும், தனது அறிவு, விழைவு, செயல் உட்கருவிகளாகவுங் கொண்டு எண்ணிலா உயிர்களினறிவுக்கறிவாய் நின்றுணர்த்தி ஐந்தொழிலாகிய நாடகத்தை நடிப்பன்.*

**தெரிந்துகொண் டொரோவொன் றாகச்**
**சென்றைந்து புலனும் பற்றிப்**
**புரிந்திடும் உணர்வி னோடும்**
**போகமுங் கொடுத்(து) யோனி**
**திரிந்திடு மதுவுஞ் செய்து**
**செய்திகண் டுயிர்கட் கெல்லாம்**
**விரிந்திடும் அறிவுங் காட்டி**
**வீட்டையும் அளிப்பன் மேலோன். 237**

**அருளது சத்தி யாகும்**
**அரன்தனக் கருளை யின்றித்**
**தெருள்சிவ மில்லை அந்தச்**
**சிவமின்றிச் சத்தி யில்லை**
**மருளினை அருளால் வாட்டி**
**மன்னுயிரிக் களிப்பன கண்கட்(கு)**
**இருளினை ஒளியா லோட்டும்**
**இரவியைப் போல ஈசன். 238**

*இங்ஙனம். உயிர்கட்கு ஐம்பொறி வாயிலாக எய்துஞ் சுட்டறிவை நிகழ்வித்து உலகப்பொருள் நுகர்ச்சி நல்கிப் பிறவியிலுழல்வித்துப் பக்குவம் வரும்படி செய்து,*

பின்னர் விரிந்த அறிவையுங் கொடுத்து வீடளிப்பன் முதல்வனென அறிக. இவற்றைச் செய்தற்குக் காரணமாய இறைவனது திருவருளே அவனது சத்தி. சத்தியின்றிச் சிவமில்லை. சிவமின்றிச் சத்தியில்லை. கதிரவனும் கதிரும்போல் சிவமும் சத்தியும் ஒற்றுமையுடையன என அறிக.

## ஆறாஞ் சூத்திரம்

**அறிவுறும் பொருளோ ஈசன் அறிவுறாதவனோ என்னின்**
**அறிபொருள் அசித்தசத்தாம் அறியாததின்றாம் எங்கும்**
**செறிசிவம் இரண்டு மின்றிச் சித்தொடு சத்தாய்நிற்கும்**
**நெறிதருஞ்சத்தின் முன்னர் அசத்தெலாம்நின்றிடாவே. 239**

இறைவன் உயிர்களால் அறியப்படும் பொருளோ, ஒருவகையாலு மறியப்படாத பொருளோ என்றால், சுட்டியறியப்படும் பொருள் சடமாயழிந்து போம் பொருளாம்; ஒருவாற்றானும் அறியப்படாத பொருள் இல்பொருளாம். ஆதலால், இறைவன் சுட்டியறியப் படுபவனுமல்லன், அறியப் படாதவனுமல்லன்; அவன் அறிவுடைய நிலைப் பொருள். சிவஞானப் பயிற்சியால் அறியப்படுஞ் சிவம், நிலையிலாப் பொருள்களை அறியும் சுட்டுணர்வுகளால் அறியப்பட முடியாது.

## முதல் அதிகரணம்

**ஆவதாய் அழிவ தாகி வருதலால் அறிவு தானும்**
**தாவலால் உலகு போகம் தனுகர ணாதி யாகி**
**மேவலால் மலங்க ளாகி விரவலால் வேறு மாகி**
**ஓவலால் அசித்தாம் சுட்டி உணர்பொரு ளான வெல்லாம். 240**

**மண்தனில் வாழ்வும் வானத் தரசயன் மாலார் வாழ்வும்**
**எண்தரு பூத பேத யோனிகள் யாவு மெல்லாம்**
**கண்டஇந் திரமா சாலம் கனாக்கழு திரதங் காட்டி**
**உண்டுபோல் இன்றாம் பண்பின் உலகினை அசத்து மென்பர்.**
**241**

சுட்டறிவானது தோன்றியழிவது; ஒன்றைவிட் டொன்றைப் பற்றி நிற்பது; உலகம், நுகர்பொருள், உடம்பு முதலியவற்றோடு தொடர்புற்றது; அவற்றின் மயமாய் நின்று அவற்றை யுணர்வது; மும்மலக் கலப்புற்றது; பொருள்களை யறியாத விடத்து ஒடுங்கி யொழிவது. சுட்டி யறியப்பட்ட பொருளெல்லாம் நிலையில்லாதன. ஆதலால், சுட்டறிவினால் இறைவனை யுணரமுடியாது. மண்ணுலகில் வாழ்வும், இந்திரன், மால், அயன் முதலியோர் வாழ்வும், ஐம்பூதங்களாலாய பல்வேறு உருவெடுத்து வாழும் வாழ்வும் உள்ளது போலத் தோன்றி நிலையாமையால், இந்திர சாலமும், கனவும் பேய்த்தேரும் போல அவை அசத்தெனப்படும்.

## இரண்டாம் அதிகரணம்

**உணராத பொருள்சத் தென்னின் ஒருபய னில்லைத் தானும்**
**புணராது நாமும் சென்று பொருந்துவ தின்றாம் என்றும்**
**தணவாத கருமமொன்றும் தருவது மில்லை வானத்(து)**
**இணரார்பூந் தொடையு மியாமைக் கெழுமயிரிக்**
**கயிறும்போலும். 242**

உணரப்படாத பொருள், தோற்றக்கேடில்லாது சத்தென நிற்றலாற் போந்த பயன் யாதுமில்லை. அது நம்மையும் வந்து பொருந்தாது; நாம் அதனைப்

பொருந்தலும் இயலாது; அது நிலையான நன்மையுந்தாராது ஏனெனில், ஆகாயப் பூமாலையும், ஆமை மயிர்க்கம்பளமும் போல அது இல்பொருளுக்கு ஒப்பாவாதே.

## மூன்றாம் அதிகரணம்

**தத்துவம் சத்(து) அசத்துச் சதசத்து மன்றென் றாலென்**
**உய்த்துணர்ந் துண்டோஇன்றோ என்றவர்க் குண்டென்றோதில்**
**வைத்திடும் சத்தே யாகும் மனத்தொடு வாக்கி றந்த**
**சித்துரு அதுஅ சித்தாம் மனத்தினால் தேர்வ தெல்லாம் 243**

**அறிபொருள் அசித்தாய் வேறாம் அறிவுறாப் பொருள்சத்**
**தென்னின்**
**அறிபவன் அறியா னாகில் அதுஇன்று பயனு மில்லை**
**அறிபவன் அருளி னாலே அநன்னிய மாகக் காண்பன்**
**அறிபொரு ளறிவாய்வேறாய் அறிவரு ளுருவாய் நிற்கும். 244**

பிரமம் சத்துமன்று, அசத்துமன்று, சதசத்துமன்று என்றால், அது இன்னதென்று சொல்லொணாத பொருள் என்பது முடியும். அத்தகைய பொருள் உண்டோ, இல்லையோ என்று கேட்டார்க்கு, அது உண்டென்றால், அது சத்தென்பது முடியும். இல்பொருளாயின், அதனைப் பற்றிப் பேச்சில்லை; நாத்திக முடிவு ஏற்படும். அது உள்பொருளாயின், அறியப்படவேண்டுமே யென்னில், அது சுட்டியறிதற்கேதுவாய மன, மொழி, மெய்களைக் கடந்த மெய்ப்பொருளாதலின், அதனையறிய வல்லவன், அருளால் அப்பொருளோடு ஒற்றித்து நின்று அதனை யறிவன். அது அவ்வறிவேயாய் வேறுமாய் உடனுமாய் நிற்கும்.

**பாவிப்ப தென்னிற் பாவம் பாவகங் கடக்கிற் பாவம்**
**பாவிக்கும் அதுநா னென்னில் பாவகம் பாவங்கெட்டுப்**
**பாவிப்ப தென்னிற் பாவம் பாவனை இறந்து நின்று**
**பாவிக்கப் படுவ தாகும் பரம்பரன் அருளி னாலே. 245**

*அது பாவிக்கப்படுவதன்று. பாவனையென்பது கருவிகளோடு செய்யப்படுதலின், அது சுட்டறிவின் பாற்படும். கருவிகளின்றிப் பாவிப்பின், கேவலநிலை வந்தெய்தும். இரண்டு வழியுமின்றிப் பாவித்தல் இயலாது. எய்தாத பரம்பொருளைத் தன்னில் வைத்துப் பாவித்தல், அது பரம்பொருளைப் பாவிப்பதாகாது; பயனுமில்லை. பாவனையின்றி இறையோடு ஒற்றித்து நின்று அவனருளாற் காண்டலே பயன்படும் பாவனை யாகும். அது முதல்வனறிவால் உயிர் அவனைக் காண்பதாகும்.*

**அன்னிய மிலாமை யானும் அறிவினுள் நிற்ற லானும்**
**உன்னிய வெல்லாம் உள்நின் றுணர்த்துவன் ஆதலானும்**
**என்ன(து) யானென் றோதும் இருஞ்செருக் கறுத்த லானும்**
**தன்னறி வதனாற் காணும் தகைமையன் அல்லன் ஈசன். 246**

*முதல்வன் வேறாக முன்னிலைப்படுத்தி அறியப்படா வண்ணம் உயிர்க்குயிராய் நிற்றலாலும், உயிரினதறிவிற் பொருந்தி நிற்பது பற்றியும், அங்ஙனம் நின்று உயிர் கருதுவதை யெல்லாம் இறைவனே உணர்த்துதலானும், யான் எனதென்ற செருக்கறுக்கப் பெற்று, அறிவானும், அறிபொருளும், அறிவுமெனப் பகுத்தறிதல் கூடாமையானும், உயிரினறிவால் முதல்வன் அறியப்படாதவன்.*

**ஒன்றெனு மதனால் ஒன்றென் றுரைப்பதுண் டாகை யாலே**
**நின்றனன் வேறாய்த் தன்னின் நீங்கிடா நிலைமை யாலே**
**பின்றிய வுணர்வுக் கெட்டாப் பெருமையன் அறிவி னுள்ளே**
**என்றும்நின் றிடுத லாலே இவன் அவனென்னலாமே. 247**

*ஒன்று உண்டு என்றவிடத்து உளதென்றுரைப்பவன் ஒருவன் உண்மையால், அவனின் வேறாம் முதல்வன் உண்மை பெற்றாம். உயிரறிவு உண்டு, இறையறிவு உண்டு, பின்னது முன்னதைவிட்டு நீங்குவதில்லை. ஆதலால் உடனாதல் பெற்றாம்; நீரில் நிழல்போல இறையறிவும் உயிரினறிவும் கலந்து நிற்றலாலே, உயிரே சிவமாமென்னும் படி, முதல்வன் அதனோடொன் றாதலாய நிலை பெற்றாம்; வேறா யுடனா யொன்றாய் நிற்பதே அத்துவித நிலையென்பது, சைவசித்தாந்த முடிவு.*

--------

# சாதனவியல்

--------

## ஏழாஞ் சூத்திரம்

அனைத்துஞ்சத் தென்னின் ஒன்றை
அறிந்திடா தசத்தா லென்னின்
முனைத்திடா தசத்துச் சத்தின்
முன்னிருள் இரவி முன்போல்
நினைப்பதிங் கசத்தே யென்னில்
சத்தின் முன்நிலாமை யானும்
தனைக்கொடொன் றுணர்த லானும்
தானசத் துணரா தன்றே. 248

மெய்ப்பொருளாகிய சிவம் விரிந்த பேரறிவுடைய தாகலின் எல்லாவற்றையு மொருங்கேயறிந்து நிற்பதன்றி ஒன்றினைச் சுட்டியறியாது. அசத்தினைப் பொருந்தி அங்ஙனம் பகுத்தறியு மென்னில், சத்தின்முன் அசத்து முனைத்து நில்லாதாகலின், அசத்தைப் பொருந்தாது. சத்தின் முன் அசத்து அறியுமென்னில், பகலவன் முன் இருள்போலச் சத்தின்முன் அசத்துநில்லாமையோடு, தான் பிறிதொன்றை யுணர்த்து தற்குக் கருவியாகுமே யன்றி அசத்து தானாக ஒன்றை யுணருமாற்ற லில்லாதது.

## மூன்றாம் அதிகரணம்

சத்தசத் தறிவ தான்மாத்
தான்சத்தும் அசத்து மன்று
நித்தனாய்ச் சதசத் தாகி
நின்றிடும் இரண்டின் பாலும்

**ஒத்துட னுதித்து நில்லா**
**துதியாது நின்றி டாது**
**வைத்திடுந் தோற்றம் நாற்றம்**
**மலரினின் வருதல் போலும் 249**

*சத்து மெய், அசத்தது நிலையாமையாற் பொய் யெனப்படும். சத்தினையும் அசத்தினையும் பகுத்தறிவது உயிரே. பொருட்டன்மையால் உயிரானது மெய்ப் பொருளினும் பொய்ப் பொருளினும் வேறாய் அவ்விரண்டன் கண்ணும் அதுவதுவாய்ப் பூவிலே மணமடங்கித் தோன்றுமாறுபோல தனித்தறியப்படாது. அவ்விரண்டனையுமறியுங்காலறியப்படுவதாகிய சதசத்து ஆம் என அறிக.*

**சுத்தமெய்ஞ் ஞான மேனிச்**
**சோதிபால் அசத்தஞ் ஞானம்**
**ஒத்துறா குற்ற மெல்லாம்**
**உற்றிடு முயிரின் கண்ணே**
**சத்துள போதே வேறாம்**
**சதசத்தும் அசத்து மெல்லாம்**
**வைத்திடும் அனாதி யாக**
**வாரிநீர் லவணம் போலும். 250**

*உண்மையறிவினைத் திருமேனியாகவுடைய முதல்வன் பால் அசத்தாகிய பாசம் நில்லாது. ஆதலால் முதல்வன் பாலறியாமை இன்று; அதனாற் குற்றம் யாதுமில்லை. அசத்தாகிய பாசம் உயிரை அநாதியே பற்றி நின்று குற்றமுறுவிக்கும். சத்தாகிய சிவம் உள்ளபோதே, சதசத்தாகிய உயிருமுள்ளது; அசத்து முள்ளது. கடலிலே இடம், நீர், உப்பு என மூன்று உள்ளன; உப்பு, நீரையே சார்ந்திருத்தல் போல, அசத்து உயிரையே சார்ந்திருக்குமென அறிக.*

அறிவிக்க அறித லானும்
அழிவின்றி நிற்ற லானும்
குறிபெற்ற சித்தும் சத்தும்
கூறுவ துயிருக் கீசன்
நெறிநித்த முத்த சுத்த
சித்தென நிற்பன் அன்றே
யிறிவிப்பன் மலங்க ளெல்லாம்
பின்னுயிர்க் கருளி னாலே. 251

*உயிரானது இறைவன் அறிவிக்க அறிதலானும், அழிவில்லாத தாகலானும், சித்து என்றுஞ் சத்து என்றுஞ் சொல்லப்படுதற்குரியது. முதல்வன் இயற்கையாகத் தானே எல்லாம் அறிகின்ற, பாசம் நீங்கிய வாலறி வனாகிய மெய்ப்பொருளாதலின், உயிர்க்குள்ள பாசத்தை அருளினாலே நீக்குவன். நீக்கியபின்தானே உயிர்க்குத் துணையாக நிற்பன்.*

## எட்டாஞ் சூத்திரம்

மன்னவன்தன் மகன்வேட ரிடத்தே தங்கி
வளர்ந்(து) அவனை அறியாது மயங்கி நிற்பப்
பின்னவனும் என்மகன்நீ என்றவரிற் பிரித்துப்
பெருமையொடும் தானாக்கிப் பேணு மாபோல்
துன்னியஐம் புலவேடர் சுழலிற் பட்டுத்
துணைவனையும் அறியாது துயருறும்தொல்லுயிரை
மன்னும்அருட் குருவாகி வந்(து) அவரின் நீக்கி
மலம்அகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன். 252

*ஓர் அரசனுடைய புதல்வன், அறியாச் சிறுபருவத்தே வேடர்கள் வசப்பட்டு அவருடன் தங்கி வளர்ந்து அவ்வரசனையுந்தன்னையுமறியாது மயங்கி*

நிற்பின், அவ்வரசன் அவனைக்கண்டு நீ என்மகன் என்று கூறி அவரினின்றும் பிரித்துப் பெருந்தகைமையோடு தன்றன்மையனாகும் வண்ணஞ் செய்து போற்று மாறுபோல, நெருங்கிய ஐம்பொறிவேடர் சூழ்ச்சி யிலகப் பட்டுத் தன்னையும் தனக்கு மெய்த் துணையாய முதல்வனையு மறியாது துயருறுகின்ற உயிரை ஆட்கொள்ளும் பொருட்டு இறைவன் ஆசிரியனாக எழுந்தருளி வந்து அவ்வேடரினின்று அதனைப் பிரித்து அவரைச் சார்தற்குக் காரணமாயிருந்த மலத்தைக் கெடுத்துத் தன் வண்ணமாக்கித் தனது திருவடிக்கீழ் வைத்து வாழ்விப்பன்.

## முதல் அதிகரணம்

உரைதரும்இப் பசுவர்க்கம் உணரின் மூன்றாம்
உயரும்விஞ் ஞானகலர் பிரளயா கலர்சகலர்
நிரையின்மலம் மலங்கன்மம் மலங்கன்ம மாயை
நிற்குமுத லிருவர்க்கு நிராதார மாகிக்
கரையில்அருட பரன்துவிதா சத்திநிபா தத்தால்
கழிப்பன்மலம் சகலர்க்குக் கன்ம வொப்பில்
தரையில்ஆ சான்மூர்த்தி ஆதார மாகித்
தரித்தொழிப்பன்மலம்சதுர்த்தாசத்திநிபாதத்தால் 253

பலவிதம்ஆ சான்பாச மோசனந்தான் பண்ணும்
படிநயனத் தருள்பரிசம் வாசகம்மா னதமும்
அலகில்சாத் திரம்யோகம் அவுத்தி ராதி
அனேகமுள அவற்றினவுத் திரிஇரண்டு திறனாம்
இலகுஞா னங்கிரியை யெனஞான மனத்தால்
இயற்றுவது கிரியைஎழிற் குண்டமண்ட லாதி
நிலவுவித்துச் செய்தல்கிரி யாவதிதான் இன்னும்
நிர்ப்பீசம் சபீசமென இரண்டாகி நிகழும். 254

அறிவிக்க அறித லானும்
அழிவின்றி நிற்ற லானும்
குறிபெற்ற சித்தும் சத்தும்
கூறுவ துயிருக் கீசன்
நெறிநித்த முத்த சுத்த
சித்தென நிற்பன் அன்றே
யிறிவிப்பன் மலங்க ளெல்லாம்
பின்னுயிர்க் கருளி னாலே. 251

உயிரானது இறைவன் அறிவிக்க அறிதலானும், அழிவில்லாத தாகலானும், சித்து என்றுஞ் சத்து என்றுஞ் சொல்லப்படுதற்குரியது. முதல்வன் இயற்கையாகத் தானே எல்லாம் அறிகின்ற, பாசம் நீங்கிய வாலறிவனாகிய மெய்ப்பொருளாதலின், உயிர்க்குள்ள பாசத்தை அருளினாலே நீக்குவன். நீக்கியபின்தானே உயிர்க்குத் துணையாக நிற்பன்.

## எட்டாஞ் சூத்திரம்

மன்னவன்தன் மகன்வேட ரிடத்தே தங்கி
வளர்ந்(து) அவனை அறியாது மயங்கி நிற்பப்
பின்னவனும் என்மகன்நீ என்றவரிற் பிரித்துப்
பெருமையொடும் தானாக்கிப் பேணு மாபோல்
துன்னியஐம் புலவேடர் சுழலிற் பட்டுத்
துணைவனையும் அறியாது துயருறும்தொல்லுயிரை
மன்னும்அருட் குருவாகி வந்(து) அவரின் நீக்கி
மலம்அகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன். 252

ஓர் அரசனுடைய புதல்வன், அறியாச் சிறுபருவத்தே வேடர்கள் வசப்பட்டு அவருடன் தங்கி வளர்ந்து அவ்வரசனையுந்தன்னையுமறியாது மயங்கி

நிற்பின், அவ்வரசன் அவனைக்கண்டு நீ என்மகன் என்று கூறி அவரினின்றும் பிரித்துப் பெருந்தகைமையோடு தன்றன்மையனாகும் வண்ணஞ் செய்து போற்று மாறுபோல, நெருங்கிய ஐம்பொறிவேடர் சூழ்ச்சி யிலகப் பட்டுத் தன்னையும் தனக்கு மெய்த் துணையாய முதல்வனையு மறியாது துயருறுகின்ற உயிரை ஆட்கொள்ளும் பொருட்டு இறைவன் ஆசிரியனாக எழுந்தருளி வந்து அவ்வேடரினின்று அதனைப் பிரித்து அவரைச் சார்தற்குக் காரணமாயிருந்த மலத்தைக் கெடுத்துத் தன் வண்ணமாக்கித் தனது திருவடிக்கீழ் வைத்து வாழ்விப்பன்.

## முதல் அதிகரணம்

**உரைதரும்இப் பசுவர்க்கம் உணரின் மூன்றாம்**
**உயரும்விஞ் ஞானகலர் பிரளயா கலர்சகலர்**
**நிரையின்மலம் மலங்கன்மம் மலங்கன்ம மாயை**
**நிற்குமுத லிருவர்க்கு நிராதார மாகிக்**
**கரையில்அருட பரன்துவிதா சத்திநிபா தத்தால்**
**கழிப்பன்மலம் சகலர்க்குக் கன்ம வொப்பில்**
**தரையில்ஆ சான்மூர்த்தி ஆதார மாகித்**
**தரித்தொழிப்பன்மலம்சதுர்த்தாசத்திநிபாதத்தால் 253**

**பலவிதம்ஆ சான்பாச மோசனந்தான் பண்ணும்**
**படிநயனத் தருள்பரிசம் வாசகம்மா னதமும்**
**அலகில்சாத் திரம்யோகம் அவுத்தி ராதி**
**அனேகமுள அவற்றினவுத் திரிஇரண்டு திறனாம்**
**இலகுஞா னங்கிரியை யெனஞான மனத்தால்**
**இயற்றுவது கிரியைஎழிற் குண்டமண்ட லாதி**
**நிலவுவித்துச் செய்தல்கிரி யாவதிதான் இன்னும்**
**நிர்ப்பீசம் சபீசமென இரண்டாகி நிகழும். 254**

**பாலரொடு வாலீசர் விருத்தர் பணி மொழியார்**
**பலபோகத் தவர்வியாதிப் பட்டவர்க்குப்பண்ணும்**
**சீலமது நிர்ப்பீசம் சமயா சாரம்**
**திகழ்சுத்தி சமயிபுத் திரர்க்கு நித்தத்(து)**
**ஏலுமதி காரத்தை இயற்றித் தானும்**
**எழில்நிரதி காரையென நின்றிரண்டாய்விளங்கும்**
**சாலநிகழ் தேகபா தத்தி னோடு**
**சத்தியநிர் வாணமெனச் சாற்றுங் காலே. 255**

*எண்ணிலடங்காதனவாய உயிர்கள் மூவகைப் படும். ஆணவமலமாத்திர முடையவர்கள் விஞ்ஞான கலர், ஆணவ மலமுங் கன்மமலமு முடையவர்கள் பிரளயாகலர்; அவ்விரண்டனோடு மாயாமல முடைய வர்கள் சகலர். முதல் வகையாருட் பக்குவப் பட்ட உயிர்க்கு இறைவன் உண்ணின்று தன்னறிவு நல்குவன். இரண்டாவது வகையார்க்கு இறைவன் நேர்நின்று உண்மையுணர்த்தி மலம் நீக்குவன். இவ்விரு வகையாரும் விரைவு, மிக விரைவு என்னும் அருள் வீழ்ச்சியுடையர். மும்மலத்தார்க்கு இருவினையொப்பு வந்து மிகமென்மை, மென்மை, விரைவு, மிக விரைவு என்னும் நாற்றிற அருள் வீழ்ச்சியுள் ஒன்று ஏற்பட்ட காலை இறைவன் மானுட ஆசிரியனே நிலைக்களமாகக் கொண்டு, மலம் நீக்கித் தன்னறிவளிப்பன். உயிர்கட்குக் கட்டு முதிர்வாகிய மலபரிபாகம் பலவகைப்படுதலின், ஆசிரியன் மல நீக்கத்தின் பொருட்டுச் செய்யுந் தீக்கையும் பல வகைப்படும். நோக்காலும், தொடுதலாலும், சொல்லாலும், பாவனையாலும், ஞானநூற் போதனையாலும், யோக முறையாலும், ஓமச் சடங்குகளாலும், சாம்பவி முதலிய முத்திரைகளாலும் தீக்கை செய்யப்படும். ஓமத்தாற் செய்யப்படுவது*

ஔத்திரியெனப்படும். அது அறிவார்பு (ஞானவதி) செயற்சார்பு (கிரியாவதி) என இருவகைப்படும். புறத்தே அழலோம்புதற்குரியன வகுத்துச் செய்வது பின்னையது; அகத்தே அவற்றைப் பாவித்துச் செய்வது முன்னையது. இன்னும் இத்தீக்கை, வித்திலி (நிர்ப்பீசம்) வித்துளி (சபீசம்) யென இருவகைப்படும். தீக்கைக்குப் பின் வழுவின்றிச் சமய முறைகளைத் தழுவி நடத்தற்கு ஆற்றலும் பொழுதும் வாயாத, பாலர், இளைஞர், முதியர், பெண்டிர், பலதுய்ப்புடையார் நோயினர் முதலியோர்க்குச் சமய முறைகளை யொழித்துச் செய்யப்படும் வித்திலி தீக்கை ஆட்சியுரிமையிலாதது எனப்படும். மூவகைத் தீக்கைகளுள், சமயம் புகுதலுஞ் சிறப்புமாகிய முதலிரண்டும் இவ்வாறே செய்யப்படும். இவை செய்யப் பெற்றோர் நாட்கடன் மாத்திரமே இயன்றவாறு செய்தற் குரியர்; இவற்றைச் சார்ந்த தீக்கைமுறை (நிருவாணதீக்கை) உடனே வீடுபயப்பதும் உடல் முடிவில் வீடுபயப்பதுமென இருவகைப்படும். அவற்றை வடநூலார் சத்தியோ நிருவாணமென்றும், அசத்தியோ நிருவாணமென்றுங் கூறுவர்.

**ஓதியுணர்ந் தொழுக்கநெறி இழுக்கா நல்ல**
**உத்தமர்க்குச் செய்வதுயர் பீசமிவர் தம்மை**
**நீதியினால் நித்தியநை மித்திககா மியத்தின்**
**நிறுத்திநிரம் பதிகாரம் நிகழ்துவதும் செய்து**
**சாதகரா சாரியரும் ஆக்கி வீடு**
**தருவிக்கும்உலோகிவ தருமிணியென்றிரண்டாம்**
**ஆதலினான் அதிகாரை யாம்சமயம் விசேடம்**
**நிருவாணம் அபிடேகம் இவற்றடங்கு மன்றே. 256**

வித்துளி தீக்கையென்பது ஓதியுணர்ந்து ஒழுக்க நெறி தவறாக உத்தமர்கட்கு நாட்கடன், சிறப்புவிழா,

*விருப்பு விழா முதலிய இயற்றும் உரிமையையளித்துச் செய்யப்படுவது; இத்தீக்கை பெற்றோர் துணையாசிரியராகவும் முதலாசிரிய ராகவும் சடங்கு நிகழ்த்தற்பாலர். இத்தீக்கை துறவத்தார்க்குக் குடுமி களைந்து செய்யப்படின், சிவ தருமிணி (சிவநலன்) எனப்படும். இல்லறத்தார்க்குக் குடுமி களையாது செய்யப்படின் உலக தருமிணி (உலக நலன்) எனப்படும். இத்தீக்கையுடன் திருநீராட்டுப் பெற்றோர், ஆசிரிய ராவார். இவை முறையே, பூதச்சார்பு துறவுச் சார்பு (பௌதிக தீக்கை, நைட்டிக தீக்கை) யெனப்படும்.*

**அழிவிலாக் கிரியையினான் ஆதல்சத்தி மத்தான்**
**ஆதல்அத்து வாசுத்தி பண்ணிமலம் அகற்றி**
**ஒழிவிலாச் சிவம் பிரகா சித்தற்கு ஞானம்**
**உதிப்பித்துற் பவந்துடைப்பன் அரன்ஒருமூ வர்க்கும்**
**வழுவிலா வழிஆறாம் மந்திரங்கள் பதங்கள்**
**வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள்**
**கழிவிலா துரைத்தமுறை யொன்றினொன்று வியாத்தி**
**கருதுகலை சத்தியின்கண் சத்திசிவன் கண்ணாம். 257**

**மந்திரங்கள் முதல்ஐந்தும் கலைஐந்தின் வியாத்தி**
**மருவும் திரமிரண்டு பதங்கள் நாலேழ்**
**அந்தநிலை எழுத்தொன்று புவனம் நூற்றெட்(டு)**
**அவனிதத் துவமொன்று நிவிர்த்தி அயன்தெய்வம்**
**வந்திடுமந் திரம்இரண்டு பதங்கள் மூவேழ்**
**வன்னங்கள் நாலாறு புரம்ஐம்பத் தாறு**
**தந்திடும்தத் துவங்கள்இரு பத்து மூன்று**
**தரும்பிரதிட் டாகலைமால் அதிதெய்வம் தானாம்.258**

வித்தையின்மந் திரமிரண்டு பதநா லைந்து
விரவும்எழுத் தேழுபுரம் இருபத் தேழு
தத்துவமு மோரேழு தங்குமதி தெய்வம்
தாவில்உருத் திரனாகும் சாந்தி தன்னில்

வைத்தனமந் திரமிரண்டு பதங்கள்பதி னொன்று
வன்னமொரு மூன்றுபுரம் பதினெட் டாகும்
உத்தமமாம் தத்துவமும் ஒருமூன் றாகும்
உணரில்அதி தேவதையும் உயரீசனாமே. 259

சாந்தியா தீதகலை தன்னின்மந் திரங்கள்
தாம்மூன்று பதமொன்(று) அக் கரங்கள்பதி னாறு
வாய்ந்தபுரம் மூவைந்து தத்துவங்க ளிரண்டு
மருவும்அதி தேவதையும் மன்னுசதா சிவராம்
ஏய்ந்தமுறை மந்திரங்கள் பதினொன்று பதங்கள்
எண்பத்தொன் றக்கரங்கள் ஐம்பத்தொன் றாகும்
ஆய்ந்தபுரம் இருநூற்றோ டிருப்பத்து நாலாம்
அறிதருதத் துவம்முப்பத் தாறுகலை ஐந்து. 260

மூன்றுதிறத் தணுக்கள்செயும் கன்மங் கட்கு
முன்னிலையாம் மூவிரண்டாம் அத்து வாவின்
ஆன்றமுறை அவைஅருத்தி அறுத்துமல முதிர்வித்(து)
அரும்பருவம் அடைதலுமே ஆசா னாகித்
தோன்றிநுக ராதவகை முற்செய் கன்மத்
துகளறுத்தங் கத்துவாத் தொடக்கறவே சோதித்(து)
ஏன்றஉடற் கன்மம்அனு பவத்தினால் அறுத்திங்(கு)
இனிச்செய்கன் மம்மூல மலம்ஞானத் தால் இடிப்பன். 261

*அறிவுச் சார்பு, செயற் சார்பு என்னும் இருவகைத் தீக்கையுள் ஒரு வகையால், இறைவன் பக்குவப்பட்ட*

வுயிர்க்கு அறுவழித் தொடர்பொழித்துக் கட்டறுத்துச் சிவம் விளங்குவதற்கேதுவாய மெய்யறிவு உதிப்பித்துப் பிறவியை அறுப்பன், ஆறுவழியாவன மறைமொழி, சொற் பகுதி, எழுத்தொலி, உலகம், முதல்கள், கலைகள் என்பன. இவற்றுள் மறைமொழி சொற்பகுதியினும், சொற்பகுதி எழுத்தினும் அடங்கும். உலகம் முதலில் அடங்கும். எழுத்தும் முதலும் கலையிலடங்கும். கலை, சிவசத்தியிலொடுங்கும். சத்தி சிவத்தொடுங்கும். ஆறு வழிகளுள் முதல் ஐந்தும் கலையிலடங்கு முறைமை யாவது :- மந்திரங்கள் இரண்டும் பதம் இருபத் தெட்டும், இறுதி யெழுத்தொன்றும், நூற்றெட்டுப் புவனமும், முதற்றத்துவமும் நீத்தற்கலை யிலடங்கும். அங்குத் தலைவர் அயனார். வேறு மந்திரம் இரண்டும், பதம் இருபத்தொன்றும், எழுத்து இருபத்து நான்கும், புவனம் ஐம்பத்தாறும், தத்துவங்கள் இருபத்து மூன்றும் பதிவுக் கலையுளடங்கும். அதற்குத் திருமால் தலைவர். அடுத்த இருமந்திரமும், பதம் இருபதும், எழுத்து ஏழும், புவனம் இருபத்தேழும், வித்தியா தத்துவ மேழும் புலக்கலையுளடங்கும். அதற்குத் தலைவர் அரனார். மேலுள்ள மந்திரம் இரண்டும், பதங்கள் பதினொன்றும், எழுத்து மூன்றும் புவனம் பதினெட்டும், தத்துவ மூன்றும் அமைதிக்கலையுளடங்கும். இதற்குத் தலைவர் பெருமுதல்வர், எஞ்சிய மந்திர மூன்றும், பதம் ஒன்றும், எழுத்துப் பதினாலும், புவனம் பதினைந்தும், தத்துவ மிரண்டும் அமைதி மேற்கலையுளடங்கும். அதற்குத் தலைவர் அருட்சிவனார். மந்திரம் ஐம்முக ஆறுறுப்பு, பதம் எண்பத்தொன்று, எழுத்து ஐம்பத் தொன்று, புவனம் இருநூற்றிரு பத்து நாலு, முதல்கள் முப்பத்தாறு, கலை ஐந்து எனத் தொகை கண்டுகொள்க. அத்துவ

சுத்தியின் இன்றியமையாமை யாதெனின், அத்துவாக்கள் வினைகட்கு ஆதாரமாயுள்ளன; அவற்றைச் சுத்தி செய்தலாற் பிறவியறுமென்க. மனமொழி மெய்களால் உயிர்கள் இயற்றி ஈட்டும் வினைகட்குப் பற்றுக் கோடாயுள்ள ஆறுவழிகளிலே, அவ்வினைகள் நுகர்தற்குரிய தகுதி வந்தபோது நுகர்வித்தொழித்து இருண்மலத்தை முதிர் வித்துச் சிவஞானம் பெறுதற்குரிய அரிய நிலை அடைந்த போது, இறைவன், ஆசிரியனாய்த் தோன்றித் தனது செயலாற்றலால் மாயைப் படைப்பாய ஆறுவழிக் கட்டுக்களிலுள்ள எஞ்சிய வினைகளைத் தீர்த்துக் கட்டுக்களைத் தொலைத்து, ஊழினை எடுத்த வுடம்பால் நுகர வைத்து, ஞானத்தால் அறியாமைக் கட்டையும் அதன்சார்பாய் நிகழும் ஆகாமிய மலத்தையுமொழிப்பன்.

## இரண்டாம் அதிகரணம்

**புறச்சமய நெறிநின்றும் அகச்சமயம் புக்கும்**
**புகல்மிருதி வழிஉழன்றும் புகலும்ஆச் சிரம**
**அறத்துறைகள் அவையடைந்தும் அருந்தவங்கள் புரிந்தும்**
**அருங்கலைகள்பலதெரிந்தும் ஆரணங்கள் படித்தும்**
**சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும் வேத**
**சிரப்பொருளை மிகத்தெளிந்தும் சென்றால் சைவத்**
**திறத்தடைவர் இதிற்சரியை கிரியா யோகம்**
**செலுத்தியபின் ஞானத்தால் சிவனடியைச் சேர்வர். 262**

புறச்சமய நெறிகளில் ஒழுகியபின் அகச்சமயம் புகுந்து ஒழுக்க நூல் கூறுகின்ற வழியில் நின்று, கல்வி நிலை, இல்லற முதலிய அறத்துறைகளிற் பயின்று, செய்றகரிய பல தவங்களியற்றிக் கலைகள் பல கற்று,

அறிவு நூல்களையோதி, இறைவனருள் பெற்ற அன்பர் வரலாறுகளையுணர்ந்து, ஞான நூன் முடிவுகளை யாய்ந்து தெரிந்து மேற்சென்றாற் சைவசித்தாந்த நெறியினை மக்கள் தலைப்படுவர். அதனையடைந்து சார்பு, செயல், ஒருமை, என்னுஞ் செந்நெறிகளில் ஒழுகிப் பின் இறைவன் நல்குகின்ற பேரறிவால் அவனது திருவடியைச் சேர்வார்கள்.

**இம்மையே ஈரெட்டாண் டெய்திஎழி லாரும்**
**ஏந்திழையார்முத்தியென்றும் இருஞ்சுவர்க்க முத்தி**
**அம்மையே யென்றும்முத்தி ஐந்தும் கந்தம்**
**அறக்கெடுகை என்றும்அட்டகுணமுத்தியென்றும்**
**மெய்ம்மையே பாடாணம் போல்கைமுத்தி யென்றும்**
**விவேகமுத்தி யென்றும்தன் மெய்வடிவாம் சிவத்தைச்**
**செம்மையே பெறுகைமுத்தி யென்றும் செப்புவர்கள்**
**சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங் கியாமே. 263**

உலகத்தில் பலசமயத்தாரும் பலவகை வீட்டின்ப மெடுத்துப் பேசுவர். இம்மைக்கண் பதினாறெய்திய அழகுமிக்க மகளிரை மணத்தலே முத்தியென்றும், விண்ணுலகபோகமே முத்தியென்றும், ஐவகைக் கந்தங்கள் கெடுதலே முத்தியென்றும், எண்குண மடைதலே முத்தியென்றும் உயிரின் வேறாக உலகத்தைப் பிரித்தறிதலே முத்தியென்றும், தன்னை யறிவதே முத்தியென்றும், சிவவடிவம் பெறுதலே முத்தியென்றுங்கூறுப. சித்தாந்த சைவத்திற்கூறும் வீடாவது, எல்லாப் பதங்களையுங் கடந்த சிவ பெருமானது திருவடியை அடைவதாகிய பேரின்பமே என்றறிக.

ஓதுசம யங்கள் பொருளுணரு நூல்கள்
ஒன்றோடொன்றொவ்வாமல்உளபலவும்இவற்றுள்
யாதுசம யம்பொருள்நூல் யாதிங் கென்னில்
இதுவாகும் அதுவல்ல ஓரிடத்தே காண
நீதியினால் இவையெல்லாம் ஓரிடத்தே காண
நின்றதுயா தொருசமயம் பொருள்நூல்
ஆதலினால் இவையெல்லாம் அருமறைஆ கமத்தே
அடங்கியிடும் அவையிரண்டும் அரனடிக்கீழ்
அடங்கும். 264

உலகத்திலே பேசப்படுஞ் சமயங்களும் அவற்றின் கொள்கைகளை புணர்த்தும் நூல்களும் ஒன்றோ டொன்று மாறுபட்டனவாயுள்ளன. இவற்றுட் சிறந்த சமயம்யாது? சிறந்த நூல் யாது? எனவினவின், இது ஆகும், அது ஆகாது என்னும் பிணக்கில்லாமல், எல்லாக் கொள்கையும் தத்தமக்குரிய இடத்தில் முறையாகத் தன்னகத்தே நிற்கப்பெற்றிலங்குவது எச்சமயம், அச்சமயமேய சமயம். அச்சமயக்கொள்கைகளைக் கூறும் நூலே மெய்ந்நூல். இச் சமயக் கொள்கைகள் யாவும், மறை, அறிவனூல் என்ற பொதுச் சிறப்பாய நூல்களு ளடங்கி நிற்பன. அந்நூலிருவகையும் இறைவனது அறிவு. சொல் என்னுமாற்றல்களாகிய இரண்டு திருவடிக் கீழடங்கும்.

அருமறையா கமமுதனூல் அனைத்தும் உரைக்கையினான்
அளப்பரிதாம் அப்பொருளை அரனருளால் அணுக்கள்
தருவர்கள்பின் தனித்தனியே தாமறிந்தஅளவில்
தர்க்கமொடுத் தரங்களினாற் சமயம்சா தித்து
மிருதிபுரா ணம்கலைகள் மற்று மெல்லாம்

**மெய்ந்நூலின் வழிபுடையாம் அங்கம்வே தாங்கம்**
**சுருதிசிவா கமம்ஒழியச் சொல்லுவதொன் றில்லை**
**சொல்லுவார்த மக்கறையோ சொல்லொ ணாதே. 265**

அம்முதல் நூல்கள் எல்லாவற்றையும் கூறுதலி னாலே அவற்றின் பொருளையளந்தறிதல் அரிது. பக்குவம் எய்திய உயிர்கள் அவற்றின் பொருளைத் திருவருளால் தாமறிந்த அளவு தத்தங் கொள்கைகட் கேற்ற வினாவிடையோடு பிறர்க் குரைப்பர்.

ஒழுக்கநூல், அன்பர் சரிதையாய புராணம், சாத்திரங்கள், உபாகமங்கள் முதலியன அவற்றின் வழிநூல்கள். ஆறங்கமுதலியன சார்பு நூல்கள். இவையெல்லாம் முதனூற் கருத்திற்கு வேறாகப் புதிதாகப் பகரக்கிடப்பது யாதுமில்லை. இதனை ஆய்ந்துணராதார்க்கு உண்மை தெரிவிக்கும் வகையிலது.

**வேதநூல் சைவநூலென் றிரண்டே நூல்கள்**
**வேறுரைக்கும் நூலிவற்றின் விரிந்த நூல்கள்**
**ஆதிநூல் அனாதிஅம லன்தருநூ லிரண்டும்**
**ஆரணநூல் பொதுவைசம் அருஞ்சிறப்பு நூலாம்**
**நீதியினால் உலகர்க்கும் சத்திநிபா தர்க்கும்**
**நிகழ்த்தியது நீள்மறையி னொழிபொருள்வே தாந்தத்**
**தீதில்பொருள் கொண்டுரைக்கும் நூல்சைவம்பிறநூல்**
**திகழ்பூர்வம் சிவாகமங்கள் சித்தாந்த மாகும். 266**

முதனூல்கள் மறைகளெனவும், சிவநூலெனவு மிரு வகைப்படும். பிறநூல்களெல்லாம் இவற்றின் பொருளை விரித்துணர்த்தும் நூல்களாம். இவைகளே ஆதிநூல்கள். இவை அநாதியாகிய முதல்வனால் அடியார்கட்கு

அருளப்பெற்ற நூல்கள். மறை பொது நூலாகும். சிவநூல் அருமை மிகுந்த சிறப்பு நூலாகும். பொது நூலானது உலகர்பொருட்டு உரைக்கப்பட்டது. சிவநூல் திருவருள் வீழ்ச்சியுடையார் பொருட்டியற்றப்பெற்றது. மறை நூலுள் நுட்பமாய்க கிடக்கும் பொருளையும் அதன் முடிவிலுள்ள குற்றமற்ற கருத்துக்களையும் விளக்குநூல் சிவநூல். பிற நூல்கள் சிவநூலுக்கு எதிரான பூர்வ பக்க நூல்களாகும். சிவநூல்களே சித்தாந்த நூல்களாகும்.

**சித்தாந்தத் தேசிவன்தன் திருக்கடைக்கண் சேர்த்திச்**
**செனனமொன்றி லேசீவன் முத்த ராக**
**வைத்தாண்டு மலங்கழுவி ஞான வாரி**
**மடுத்தானந் தம்பொழிந்து வரும்பிறப்பை அறுத்து**
**முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்பன் என்று**
**மொழிந்திடவும் உலகரெலாம் மூர்க்க ராகிப்**
**பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்**
**பெருங்குழியில் வீழ்ந்திடுவர் இதுவென்ன பிராந்தி. 267**

சிவபெருமான் ஆசிரியனாய் எழுந்தருளித் திருவருட் பார்வை நல்கிப் பிறப்பு ஒன்றிலேயே உயிர்களின் மும்மல அழுக்கைநீக்கி ஞானக் கடலில் மூழ்குவித்துப் பேரின்பம் பொழிந்து மேல்வரும் பிறப்பை யறுத்து ஈண்டே வீட்டின்ப நுகர்ச்சியராக்கி முடிந்த நிலையாய திருவருட் பேற்றினைத் தந்தருளுவனென, சித்தாந்த நூலிலே பெரியோர் உறுதி கூறியிருப்பவும், அதனை உற்றுநோக்கி உறுபயன் கொள்ளாது. உலகரெல்லாம் மூர்க்கத்தன்மையராய்ப் பித்து மிஞ்சிப் பேசும் பிதற்றுரைகளைக் கூறிப் பாவமாகிய பெருங்குழியில் வீழ்ந்திடுவர்; இது என்ன மயக்கம்!

**இறைவனா வான்ஞான மெல்லா மெல்லா**
**முதன்மைஅனுக் கிரகமெல்லா மியல்புடையான் இயம்பு**
**மறைகளா கமங்களினான் அறிவெல்லாந் தோற்றும்**
**மரபின்வழி வருவோர்க்கும் வாரா தோர்க்கும்**
**முறைமையினால் இன்பத்துன் பங்கொடுத்த லாலே**
**முதன்மையெலாம் அறிந்துமுயங் கிரண்டு போகத்**
**திறமதனால் வினைஅறுக்குஞ் செய்தி யாலே**
**சேரும்அனுக் கிரகமெலாம் காணுதும்நாம் சிவற்கே. 268**

*எல்லா அறிவும் எல்லா முதன்மையும் எல்லா அருட்செயலும் இயல்பாகவுடையவனே இறைவனாவான். மறைகளாலும் சிவநூல்களாலும் சிவபெருமானது முற்றறிவு விளங்கும். நூல்வழி நிற்போர்க்கும் நில்லாதோர்க்கும் அவரவர் வினைக்குத் தக்கவாறு இன்ப துன்பமாகிய பயன்களைக் கொடுத்தலால் அவனது முதன்மை விளங்கும். இருவினைப் பயன்களை நுகர்வித்துப் பாசமறுத்து வீடு நல்கும் பேரருட்செயலினாலே அவனது பேரருளுடைமை விளங்கும். ஆதலால் சிவபெருமானே நம் தலைவன்.*

**சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்ர மார்க்கம்**
**தாதமார்க் கம்மென்றுஞ் சங்கரனை யடையும்**
**நன்மார்க்கம் நாலவைதாம் ஞான யோகம்**
**நற்கிரியா சரியையென நவிற்றுவதும் செய்வர்**
**சன்மார்க்க முத்திகள்சா லோக்கியாசா மீப்ய**
**சாரூப்பிய சாயுச்சிய மென்றுசதுர் விதமாம்**
**முன்மார்க்க ஞானத்தால் எய்து முத்தி**
**முடிவென்பர் மூன்றினுக்கும் முத்திபத மென்பர். 269**

சிவ பெருமானை யடையும் வழிகள் நால் வகைப்படும். பணிநெறி (தாதமார்க்கம்), புதல்வநெறி (புத்திரமார்க்கம்), நட்புநெறி (சகமார்க்கம்), நன்னெறி (சன்மார்க்கம்) என்பன அவை. அவற்றிற்குப் பயன் இறைவனுலகிலிருத்தல், அவனுடனிருத்தல், அவன் வடிவம் பெறல் அவனோடு இரண்டறக்கலத்தல். அவற்றுள் முதல் மூன்றும் பதமுத்தி நாலாவது பரமுத்தி.

**தாதமார்க் கம்சாற்றிற் சங்கரன்தன் கோயில்**
**தலம்அலகிட் டிலகுதிரு மெழுக்கும் சாத்திப்**
**போதுகளுங் கொய்துபூந் தார்மாலை கண்ணி**
**புனிதற்குப் பல சமைத்துப் புகழ்ந்து பாடித்**
**தீதில்திரு விளக்கிட்டுத் திருநந்த வனமும்**
**செய்துதிருவேடங் கண்டால் அடியேன்செய்வ(து)**
**யாதுபணி யீரென்று பணிந்தவர்தம் பணியும்**
**இயற்றுவதிச்சரியைசெய்வோர் ஈசனுல கிருப்பர்.** 270

சிவபெருமான் திருக்கோயிலில் திருமெழுக்குச் செய்து, திருவலகிட்டு, மலர்கொய்து, மாலை, கண்ணி முதலியன தொடுத்துச் சாத்தி இறைவனைப் புகழ்ந்துபாடித் திருவிளக்கிட்டுப் பூங்காக்கள் வைத்துப் பேணித் திருவேடத்தாரைக் கண்டால் அவர்கள் விரும்பும் பணியை யியற்றி முதல்வனையும் அடியாரையும் வழிபடுதல் சரியைத்தொண்டாகும். இவ்வாறு முதல்வன் திருவுள்ளத்திற்கு உவப்பாய பணிகள் இயற்றலே பணிநெறியாகும். இந் நெறிநிற்பார் சிவனுலகத்தே வீற்றிருக்கப்பெறுவர்.

**புத்திரமார்க் கம்புகலில் புதியவிரைப் போது**
**புகையொளிமஞ்சனம் அமுது முதல் கொண்டைந்து**

**சுத்திசெய்தா சனம்மூர்த்தி மூர்த்தி மானாம்**
**சோதியையும் பாவித்தா வாகித்துச் சுத்த**
**பத்தியினால் அருச்சித்துப் பரவிப் போற்றிப்**
**பரிவினொடும் எரியில்வரு காரியமும் பண்ணல்**
**நித்தலும்இக் கிரியையினை இயற்று வோர்கள்**
**நின்மலன்தன் அருகிருப்பர் நினையுங் காலே. 271**

*நாண்மலர், நறும்புகை, நல்விளக்கு, திருமஞ்சன முதலிய பூசனைப்பொருளைத்தேடி, யமைத்துக் கொண்டு, ஐவகைச் சுத்திசெய்து, இறைவனுக்கு இடம், வடிவு, வடிவு முதல் என்பன நினைந்து ஏற்படுத்தி, அன்பினால் மலர் தூவிப் போற்றி அழலோம்பி, நாடோறு முதல்வனை வழிபடுவது புதல்வநெறியாகும். இந்நெறி நிற்போர், இறைவனருகிருக்கும் பதவி பெறுவர்.*

**சகமார்க்கம் புலனொடுக்கித் தடுத்துவளி இரண்டும்**
**சலிப்பற்று முச்சதுர முதலாதா ரங்கள்**
**அகமார்க்க மறிந்தவற்றின் அரும்பொருள்கள் உணர்ந்தங்**
**கணைந்துபோய் மேலேறி அலர்மதிமண் டலத்தின்**
**முகமார்க்க அமுதுடலம் முட்டத் தேக்கி**
**முழுச்சோதி நினைந்திருத்தல் முதலாக வினைகள்**
**உகமார்க்க அட்டாங்க யோக முற்றும்**
**உழத்தல் உழந்த வர்சிவன்தன் உருவத்தைப் பெறுவர்.**
**272**

*ஐம்பொறிகளைப் புலன்வழிச் செல்லாது தடுத்து இருவகை மூச்சையுமடக்கி, முக்கோணம், நாற்கோண*

முதலிய வடிவங்களை யுடைய மூலாதார முதலிய ஆறு ஆதாரங்களின் முறைமையை யறிந்து அவற்றிற்குத் தலைவராகிய கடவுளரை முறையாக நினைந்து பிரமரந்திர மென்னும் தலை நடுமுடிவை யெய்தி, அதன்கணுள்ள தாமரை மொட்டை அலர்வித்து அங்கு விளங்கு மதிமண்டலத்தினை இளகப்பண்ணி அதன்கண்உள்ள அமுதத்தை உடல் முழுவதும் நிரப்பி முழுச்சோதியாகிய இறைவன் வடிவை இடைவிடாது நினைந்திருப்பதே யோகவழியாய நட்பு நெறியாகும். அட்டாங்க யோக மியற்றி இறைவனை இவ்வாறு வழிபடுபவர் அவனது திருவுருவத்தை அடைவர்.

**சன்மார்க்கம் சகலகலை புராண வேத**
**சாத்திரங்கள் சமயங்கள் தாம்பலவும் உணர்ந்து**
**பன்மார்க்கப் பொருள்பலவும் கீழாக மேலாம்**
**பதிபசுபா சம்தெரித்துப் பரசிவனைக் காட்டும்**
**நன்மார்க்க ஞானத்தை நாடி ஞான**
**ஞேயமொடு ஞாதிருவும் நாடா வண்ணம்**
**பின்மார்க்கச் சிவனுடனாம் பெற்றி ஞானப்**
**பெருமையுடை யோர்சிவனைப் பெறுவர் காணே.**

பல்வகைக் கலைகள், புராணங்கள், மறைகள், நூல்கள், சமய முறைகள், கொள்கைகள் எல்லா வற்றையும் ஆராய்ந்து கழித்து, முப்பொருளின் உண்மை இலக்கணத்தைக் காட்டவல்ல சிவஞானத்தை நாடி அதனைப் பெற்று அறிவு, அறிவோன், அறியும் பொருளென வேறுபடுத்துணராது சிவனோடிரண்டறக் கலந்து மெய்யன்பினால் அவனை வழிபடுவது நன்னெறியாகும். அந்நெறியின் பயன் பரமுத்தியாகும்.

## ஞானபூசையின் உயர்வு

ஞானநூல் தனையோதல் ஓது வித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல் தான்கேட்டல் நன்றா
ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும்
இறைவனடி அடைவிக்கும் எழில்ஞான பூசை
ஊனமிலாக் கன்மங்கள் தபம்செபங்கள் தியானம்
ஒன்றுக்கொன் றுயருமிவை ஊட்டுவது போகம்
ஆனமையான் மேலான ஞானத்தால் அரனை
அருச்சிப்பர் வீடெய்த அறிந்தோ ரெல்லாம். 274

கேட்டலுடன் சிந்தித்தல் தெளிதல் நிட்டை
கிளத்தலென ஈரிரண்டாம் கிளக்கின் ஞானம்
வீட்டையடைந் திடுவர்நிட்டை மேவி னோர்கன்
மேவாது தப்பினவர் மேலாய பதங்கட்(கு)
ஈட்டியபுண் ணியநாத ராகி இன்பம்
இனிதுநுகர்ந் தரனருளால் இந்தப் பார்மேல்
நாட்டியநற் குலத்தினில்வந் தவதரித்துக் குருவால்
ஞானநிட்டை அடைந்தடைவர் நாதன் தாளே. 275

தானம்யா கம்தீர்த்தம் ஆச்சிரமம் தவங்கள்
சாந்திவிர தம்கன்ம யோகங்கள் சரித்தோர்
ஈனமிலாச் சுவர்க்கம்பெற் றிமைப்பளவின் மீள்வர்
ஈசனியோ கக்கிரியா சரியையினில் நின்றோர்
ஊனமிலா முத்திபதம் பெற்றுலக மெல்லாம்
ஒடுங்கும்போ தரன்முன்நிலா தொழியின் உற்ப
ஞானநெறி அடைந்தடைவர் சிவனை அங்கு
நாதனே முன்னிற்கின் நணுகுவர்நற் றாளே. 276

சிவஞான நூலினை ஓதுதல், அதனைப் பிறர்க்கு ஓதுவித்தல், கேட்டல், கேட்பித்தல், கேட்டபொருளை நினைதல் ஆகிய ஐந்தும் இறைவனது திருடியை அடைவிக்கும் உயர்ந்த ஞான பூசையாகும். இதுவே ஞான வேள்வியெனப்படும். குற்றமில்லா எரியோம்புதல் முதலியன நல்வினையாகும். அது கன்ம வேள்வி யெனப்படும். பொறியடக்கம் தவவேள்வியாகும், உருவெண்ணுதல் செபவேள்வி. திருவடியை நினைத்தல் தியான வேள்வி. இவை ஒன்றுக்கொன்று உயர்வானவை. ஞான வேள்வியே பிறயாவற்றினுஞ் சிறந்தது. வீடெய்த விரும்புவோர் ஞானத்தாலிறைவனை வழுத்துவர், நூலின் சார்பாகக் கேட்டல் சிந்தித்தல் என்பன நிகழும். அவற்றிற்குமேல் தெளிதலும் நிட்டை கூடுதலும் ஆம். இவை நான்கும் நால்வகை ஞான நெறியாகும். நிட்டை கைவந்தோர் பிறவாது வீடெய்துவர். இந்நிலையில் நிற்கும் ஏனையோர் மேலான பதமுத்தியைப் பெறுவர். அவர் மீண்டும் உலகில் நற்சார்பில் வந்துதித்து அறிவனால் மெய்யுணர்வு பெற்று நிட்டை கூடி வீடெய்துவர். கொடை, வேள்வி, புனிதநீர்முழுக்கு, நால்வகை ஒழுக்கறிலை, தவம்,புண்ணியச் சடங்குகள் நோன்புகள், நல்வினைகள், யோக முறைகள் இவற்றைப் பயின்றோர். விண்ணுலகெலாம் பெற்றுப்பயன் நுகர்ந்தபின், மீண்டுமிவ்வுலகிற் பிறப்பர். இறைவனது சார்பு செயல் ஒருமை நெறிகளில் நின்றோர்பத முத்திகளைப்பெற்று, உலகமொடுங்கும் போது இறைவன் முன்னின்று ஞானத்தை நல்கானாயின் மீட்டும் பிறந்து ஞான நெறியடைந்தே வீடெய்துவர். இறைவன் ஆண்டே முன்னிற்பின், பிறவாதே ஞானம் பெற்று வீட்டைவர்.

சிவஞானச் செயலுடையோர் கையில் தானம்
திலமளவே செய்திடினும் நிலமலைபோல் திகழ்ந்து
பவமாய்க் கடலின்அழுந் தாதவகை எடுத்துப்
பரபோகந் துய்ப்பித்துப் பாசத்தை அறுக்கத்
தவமாரும் பிறப்பொன்றிற் சாரப் பண்ணிச்
சரியைகிரி யாயோகந் தன்னினும்சா ராமே
நவமாகும் தத்துவஞா னத்தை நல்கி
நாதன்அடிக் கமலங்கள் நணுகுவிக்கும் தானே. 277

*சிவஞான நெறி நிற்பார் கையிற் கொடுக்குங் கொடையானது எள்ளளவேயானாலும், நிலமும் மலையும்போல அது விளங்குவதோடு, பிறவிக் கடலில் அழுந்தாவண்ணம் உய்வித்து மேலான இன்பங்களை நுகர்வித்துக் கட்டறுப்பதற்குரிய நற்றவப் பிறப்பிற் சாரும்படி செய்து, சார்பு, செயல், ஒருமையின் மேற்பட்ட புதுமை மாறாத மெய்யுணர்வினைக் கொடுத்து, இறைவன் திருவடித்தாமரைகளை நணுகுவிக்கும்.*

ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராணம்
நல்லஆ கமஞ்சொல்ல அல்லவா மென்னும்
ஊனத்தார் என்கடவர் அஞ்ஞான னத்தால்
உறுவதுதான் பந்தமுயா மெய்ஞ்ஞா னந்தான்
ஆனத்தா லதுபோவ தலகதிர்முன் இருள்போல்
அஞ்ஞானம் விடபந்தம் அறும்முத்தி யாகும்
ஈனத்தார் ஞானங்கள் அல்லா ஞானம்
இறைவனடி ஞானமே ஞான மென்மர். 278

*மறைகள், புராணங்கள், சிவநூல்களெல்லாம், ஞானம் பெறாது வீடடைதல் இல்லையென அறுதியிட்டு*

உரைப்பதால், அக்கருத்திற்கு மாறாக யாதுங் கூறுபவர் பயனல்லனவற்றைக் கூறுபவராவர். அறியாமையால் நேரிடுவதுகட்டு, அக்கட்டை நீக்குவது மெய்யுணர்வே. பகலவன்முன் இருள்போல, அறியாமை நீங்கவேகட்டு அற்றொழியும். பிறநெறியினர் கூறும் ஞானவகைகள் பாச பசுஞானங்களாதலின், வீடெய்துவிக்க மாட்டா. முதல்வன் திருவடி ஞானமொன்றே கட்டு நீங்குவதற் கேதுவாய ஞானமென்றறிக.

**சூரியகாந் தக்கல்லி னிடத்தே செய்ய**
**சுடர்தோன்றி யிடச்சோதி தோன்று மாபோல்**
**ஆரியனாம் ஆசான்வந் தருளால் தோன்ற**
**அடிஞானம் ஆன்மாவில் தோன்றும் தோன்றத்**
**தூரியனாம் சிவன்தோன்றும் தானுந் தோன்றும்**
**தொல்லுலக மெல்லாம்தன் னுள்ளே தோன்றும்**
**நேரியனாய்ப் பரியனுமாய் உயிர்க்குயிராய் எங்கும்**
**நின்றநிலை யெல்லாம்முன் நிகழ்ந்து தோன்றும். 279**

சூரியகாந்தக் கல்லிடத்தே கதிரவனது செவ்வொளி பொருந்தியவுடன் நெருப்பு எழுவதுபோல, உயர்ந்த அறிவனாகிய ஆசான் மெய்யுணர்வு அளித்தற் பொருட்டு, உயிர்க்குத்தோன்றிய காலத்தே, அவ்வுயிர்க்கு அவன் அறிவுரை கேட்குமறிவு விளங்கித் தோன்றும். தேன்றவே, சிவபெருமானது மெய்ந்நிலை பொதுவாகத் தோன்றும். அவன் உயிர்க்குயிராய் நிற்றலின், உயிராகிய தனது மெய்ந்நிலையுந் தோன்றும். அவன் அண்டத்திற் கண்டமாய் அணுவுக்கு அணுவாய் எங்கும் நிறைந்தவனாதலின் அவன் கலந்து நிற்கு முலகமும் தோன்றும். இப்பொதுத் தோற்றம், கேட்டல் ஞானத்தின் அனுபவ மென்ப.

**மிக்கதொரு பக்குவத்தின் மிகுசத்தி நிபாதம்**
**மேவுதலும்ஞானம்விளைந்தோர்குருவின்அருளால்**
**புக்கனுட்டித் தேநிட்டை புரிந்து ளோர்கள்**
**பூதலத்திற் புகழ்சீவன் முத்த ராகித்**
**தக்கபிரி யாப்பிரிய மின்றி ஓட்டில்**
**தமனியத்தில் சமபுத்தி பண்ணிச்சங் கரனோ(டு)**
**ஒக்கவுறைந் திவர் அவனை அவன் இவரை விடாதே**
**உடந்தையாய்ச் சிவன்தோற்ற மொன்றுமே காண்பர்.**

*உயர்ந்த தகுதியெய்தி நாலாவதாய அருட்பதிவுடையார் கேட்டலறிவுபெற்று அது முதிரிந் தவுடன், குருவின் அருளால் அறிந்ததை நினைவில் வைத்து நிட்டைகூட விழைந்து உலகத்திலே யாவரும் புகழ்கின்ற உடல் முத்தியுறுவர். மேலும் அவர் விருப்பு வெறுப் பின்றி ஓடும்செம்பொன்னு மொக்கவே நோக்குபவராய் முதல்வனோடொன்றியிருப்பர். அவர்கள் அவனைச் சுட்டற்ற நிலையிலே பற்றியும் அவன்இவரோடு அத்துவிதமாய்க்கலந்தும் நிற்றலால், அவர்கள் தன்னுணர்ச்சிகெட்டுச் சிவத்தோற்றமே நுகர்வர். இது சிந்தித்தலின் பயன்.*

**அறியாமை அறிவகற்றி அறிவின் உள்ளே**
**அறிவுதனை அருளினான் அறியாதே அறிந்து**
**குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடும்**
**கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயில்**
**பிறியாத சிவன்தானே பிரிந்து தோன்றிப்**
**பிரபஞ்ச பேதமெலாந் தானாய்த் தோன்றி**
**நெறியாலே இவையெல்லாம் அல்ல வாகி**
**நின்றென்றுந் தோன்றிடுவன் நிராதார னாயே. 281**

திருவருளினாலே அறியாமை, சுட்டறிவு என்னுங் கட்டுக்களின் நீங்கி, அறிவின் கண்ணே யாவற்றையுமறிவித்து நிற்கு முதல்வனைச் சுட்டிறந்த முறையிலறிந்து, அவ்வறிவின் கண்ணே அழுத்தமுற்று, அகக்கருவிகளோடு கூடாமல், உறுதியாக அன்பு செய்திருப்பின், அப்படிச் செய்வார்க்குத்தம்மோடும் உலகோடும் பிரியாது நின்ற பெருமான், அவற்றோடு ஒன்றியும்ஒன்றாதும் நிற்கும் தனது தனி நிலையினியல்பு விளங்கும்படி தோன்றுவனென அறிக. இது தெளிதலின் அனுபவப் பயன்.

**புண்ணியமேல் நோக்குவிக்கும் பாவங்கீழ் நூக்கும்**
**புண்ணியனைப் பூசித்த புண்ணியத்தி னாலே**
**நண்ணியஞா னத்தினால் இரண்டினையும் அறுத்து**
**ஞாலமொடு கீழ்மேலும் நண்ணா னாகி**
**எண்ணுமிக லோகத்தே முத்திபெறும் இவன்றான்**
**எங்கெழிலென்ஞாயிறெமக்கென்றுகுறைவின்றிக்**
**கண்ணுதல்தன் நிறைவதனிற் கலந்து காயம்**
**கழிந்தக்கால் எங்குமாய்க் கருத்தரன்போல் நிற்பன். 282**

புண்ணியமானது மேல்நிலைக்குச் சென்று இன்பம் பெறுதற்கேதுவாகும். பாவமானது கீழ்நிலை நின்று துன்ப முறுதற்கேதுவாகும். புண்ணிய முதல்வனாகிய கடவுளை ஞானநெறியிற் பூசித்த நற்றவத்தின் பயனாகப் பெற்ற ஞானத்தெளிவுணரச்சியினால் இருவினையின் நீங்கி மூவுலகின் தொடர்பு அற்று இவ்வுலகத்தின் கண்ணேயே வீட்டின்பம் பெறுகின்ற ஞானி, கதிரவன் எத்திசையிலுதித்தாலுங் கவலையில்லை யென்ற நிலை யுடையனாய், இறைவனது குறைவற்ற நிறைவிற் கலந்து,

உடம்பு நீங்கியபோது எங்கணும் நிறைந்த அறிவொடு இறைவன்போல் நிற்பன் என அறிக.

**ஞாலமதின் ஞானநிட்டை யுடையோ ருக்கு**
**நன்மையொடு தீமையிலை நாடுவதென் றில்லை**
**சீலமிலை தவமில்லை விரகமொடச் சிரம**
**செயலில்லை தியானமிலை சித்தமல மில்லை**
**கோலமிலை புலனில்லை கரண மில்லை**
**குணமில்லை குறியில்லை குலமு மில்லை**
**பாலருடன் உன்மத்தர் பிசாசர்குண மருவிப்**
**பாடலினொ டாடலிவை பயின்றிடினும் பயில்வர். 283**

இவ்வுலகத்திலே ஞானநிட்டை பெற்றவர்க்கு நன்மை, தீமை, உலக நாட்டம், சமயநியமம், தவம், நோன்பு, ஒழுக்க நிலை நினைவு மறப்பு மனமயக்கம், வேடம், புலன்களின் தொடர்பு, அகக்கருவித் தொடர்பு, குணம், குறி, குலம் என்னுமிவையாவு மில்லனவாயொழியும் அவர் பிள்ளைகள், பேயர், பித்தர் பேன்ற இயல்புடையராய், ஆடல் பாடல் முதலியன இயற்றினும் இயற்றுவர்.

**தேசமிடம் காலம்திக் காசனங்க ளின்றிச்**
**செய்வதொன்று போற்செய்யாச் செயலதனைச் செய்தங்(கு)**
**ஊசல்பறி மனமின்றி உலாவல் நிற்றல்**
**உறக்கமுணர் வுண்டிபட் டினியிருத்தல் கிடத்தன்**
**மாசதனில் தூய்மையினின் வறுமை வாழ்வின்**
**வருத்தத்தில் திருத்தத்தின்மைதுனத்தின்சினத்தின்**
**ஆசையினின் வெறுப்பின்இவை யல்லாது மெல்லாம்**
**அடைந்தாலும் ஞானிகள் தாம் அரனடியை அகலார்.**

**இந்நிலைதான் இல்லையேல் எல்லா மீசன்**
**இடத்தினிலும் ஈசனெல்லா விடத்தினிலும் நின்ற**
**அந்நிலையை அறிந்தந்தக் கரணங்கள் அடக்கி**
**அறிவதொரு குறிகுருவின் அருளினால் அறிந்து**
**மன்னுசிவன் தனையடைந்து நின்றவன்ற னாலே**
**மருவுபசு கரணங்கள் சிவகரண மாகத்**
**துன்னியசாக் கிரமதனில் துரியா தீதம்**
**தோன்றமுயல் சிவானுபவம் சுவானுபூ திகமாம். 285**

*அவர், நாடு, ஊர், காலம், திசை, இருக்கை முதலியவற்றைக் கருதாது செயற்கரிய செயலை எளிதாகச் செய்து மனக்கலக்க மிலராவர். உலாவுதல் நிற்றல், உறக்கம், விழிப்பு, உணவுகோடல் உண்ணாமை இருத்தல் கிடத்தல், அழுக்குடைமை தூய்மையுடைமை, வறுமைசெல்வம் துன்பம், இன்பம், புணர்ப்பு வெகுளி இவைகளை யெல்லாம், அடைந்தாலும் இவற்றால் யாதொரு திரிபுமுறாது இறைவனது திருவடியை விட்டகலமாட்டார். இறைவனது நிறைவில் அடங்கி நிற்றலாகிய நிட்டைநிலை அரிதாய், உலகம் தோன்றுவதற் கேதுவாய சுட்டுணர்வு தோன்றின. இறைவன் எல்லா இடத்திலும். எப்பொருளும் இறைவனிடத்திலும் பொருந்தி நின்ற நிலையை யறிந்து அந்தக் கரணங்களை அடக்கிக் குருவினருளால் உள்ளத்தின்கண் ஓரிடத்தை நினைந்து அதன்கண் இறைவனோடு கலப்புற்று. அக்கலப் பினாலே உயிரின் கருவிகள் சிவமயமாயிருக்கப் பெற்று, நனவிலேயே உயர்ந்த மேனிலையை (சாக்கிராதீதத்தை) க்கூட முயலுக. அப்பொழுது சிவநுகர்ச்சித்திக்கும்*

**சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்தவர்கள் உலகிற்**
**சருவசங்கநிவிர்த்திவந்ததபோதனர்கள் இவர்கள்**
**பாக்கியத்தைப் பகர்வதுவென் இம்மையிலே உயிரின்**
**பற்றறுத்துப் பரத்தையடை பராவுசிவ ரன்றோ**
**ஆக்குமுடி கவித்தரசாண் டவர்கள்அரி வையரோ(டு)**
**அனுபவித்தங் கிருந்திடினும் அகப்பற்றற்றிருப்பர்**
**நோக்கியிது புரியாதோர் புறப்பற்றற் றாலும்**
**நுழைவர்பிறப் பினின்வினைகள் நுங்கி டாவே. 286**

*நனவிலேயே அத்தகைய மேனிலை நிற்போர் எல்லாத் தொடர்பும் விட்ட பெருந்தவத்தினராவர். இவர்களது அரும்பெறல் நிலையை என்னென்று சொல்வது; இம்மையிலேயே பற்றற்றுச் சிவத்தோடு கலந்து நிற்பவராதலின், அவர் பிறர் வணங்குதற் குரிய சிவமேயாவர். அவர் அரசாட்சி செய்யினும் மகளிரோடு இன்புற்றுவதியினும், அகப்பற்று நீங்கினவரேயாவர். இவ்வதீத நிலையில் நில்லாதவர் புறப்பற் றொழித் தாலும், அகப்பற் றொழித்தவராக மாட்டார். ஆகா மையின் அவர்கள் வினையுடையவராம் பிறப்பிற் புகுதல் கூடும்.*

## மூன்றாம் அதிகரணம்

**கருவிகழிந் தாற்காணா ரொன்றுமெனிற் காணார்**
**காணாதார் கன்னிகைதான் காமரசங் காணாள்**
**மருவிஇரு வரும்புணர வந்த இன்பம்**
**வாயினாற் பேசரிது மணந்தவர்தாம் உணர்வர்**
**உருவினுயிர் வடிவதுவும் உணரந்திலர்காண் சிவனை**
**உணராதார் உணர்வினால்உணர்வது கற்பனைகாண்**
**அருள்பெறின்அவ் விருவரையும் அறிவிறந்தங் கறிவர்**
**அறியாரேற் பிறப்பும்விடா தாணவமும் அறாதே. 287**

கருவிகள் நீங்கப்பெற்றோர் அகக்கருவி புறக்கருவிகளின் துணையொழிதலின் ஒன்றையும் அறியமுடியாதெனில், இறைவனைக் காணாதார் அவைகள் நீங்கிய அளவில் ஒன்றையுங்காணார். ஆனால் இறைவனைக் கண்டவர்கள், இறை ஞானத்தின் உதவிகொண்டு எல்லாவற்றையு மறிவார்கள் இறை ஞானம் எத்தகையதெனில் அது அநுபவமுடையோர்க்கே விளங்கும். அதனைப் பிறர் அறியாமை, கன்னி காமவின்ப மறியாமைபோலும். மணந்தவர் இருவர் புணர்ந் தெய்திய இன்பம் வாயினாற் சொல்ல முடியாது. நுகர்ந்தவரேயறிவர். உடம்பு முதலிய கருவிகள் கொண்டு பொருள்களை உணர்பவர். அக்கருவிகளால் உயிரின்மெய்த்தன்மையறிய வல்லவரல்லர். அவர்கள் உயிருக்குயிராயசிவனை எவ்வாறுணர்வர். அவர் உணர்ந்திலாதாரே. அவர் உணர்ந்ததாகக் கூறுவது கற்பனையே. உயிரையும் முதல்வனையும் திருவருள் பெற்றவரே சுட்டிறந்தறிதல் கூடும். அங்ஙனமறியாரேல், பிறப்பு நீங்காது, ஆணவமும் அறாது.

## நான்காம் அதிகரணம்

**பன்னிறங்கள் அவைகாட்டும் படிகம்போல் உள்ளம்**
**பலபுலன்கள் நிறங்காட்டும் பரிசுபார்த் திட்(டு)**
**இந்நிறங்கள் என்னிறம்அன் றென்று தன்றன்**
**எழில்நிறங்கண் டருளினால்இந்நிறத்தின்வேறாய்ப்**
**பொய்ந்நிறஐம் புலன்நிறங்கள் பொய்யெனமெய் கண்டான்**
**பொருந்திடுவன் சிவத்தினொடும்போதான்பின்னை**
**முன்னிறைநீர் சிறைமுறிய முடுகி யோடி**
**முந்நீர்சேர்ந் தந்நீராய்ப் பின்நீங்கா முறைபோல். 288**

தன்னை யடுத்த பல நிறங்களையும் காட்டும் பளிங்கு போல, உயிரானது, தான்சார்ந்த பல புலன்களின் தன்மையைக் காட்டுமியல்பினை ஆய்ந்தறிந்து. இத்தன்மைகள் தனது உண்மையான இயல்பு அல்லவென்றறிந்து அவற்றைக் கழித்து, தனது சிறப்புத்தன்மையை இறைவன் திருவருளாலறிந்து, பொய்யு மெய்யு முணரந்தகாலை, அவ்வுயிர் தன் கண்ணேயுள்ள சிவத்தினோடும் பொருந்தி நிற்கும், மீட்டும் ஐம்புலன்களின்பால் அது செல்லாது. அது முன்னே ஓரளவில்செல்லும் ஆற்றுநீரானது, அளவுகடந்த கடலோடு கலந்து அதன் தன்மை யெய்தியபின், மீள ஆற்று நீராகாமை போலாம் என்க.

**எங்குந்தான் என்னில்நாம் எய்த வேண்டா**
**எங்குமிலன் என்னின்வே றிறையு மல்லன்**
**அங்கஞ்சேர் உயிர்போல்வன் என்னின் அங்கத்(து)**
**அவயவங்கள் கண்போலக் காணா ஆன்மா**
**இங்குநாம் இயம்புந்தத் துவங்களின்வைத்தறிவ(து)**
**இறைஞானந் தந்துதா ளீதல்சுட ரிழந்த**
**துங்கவிழிச் சோதியும்உட் சோதியும்பெற் றாற்போல்**
**சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன்காணே. 289**

உயிர், உடம்பு, கரணம் முதலிய எல்லாவற்றிலும் சிவமே தெளிவாகக்கலந்து விளங்குமென்னில், நாம் அவனைத்தேடி அடையவேண்டிதில்லை. எல்லா வற்றிலுங் கலவாது வேறாய் நிற்பன் என்னில், எல்லா வற்றையுஞ் செலுத்துவதாகிய இறைமை அவனுக்கு இல்லையென்பது முடியும். உடம்பிலுயிர்போல இறைவன் உயிர்க்குயிராய் நிற்பன். உடம்பிலே,

கண்பொருள்களைக் காண்பது போலப் பிற உறுப்புக்கள் பொருளைக் காணமாட்டா. உயிரானது இந்நூலுட் கூறிய தத்துவங்களின் வைத்தறிவது; தத்துவங்கள் ஒன்றையுந் தாமாக அறியா. கருவிவாயிலாகப் பொருள்களையறியும் வரை உயிர் இறைவனையும் தன்னையுங் காணாமையாற் குருடு போல்வது. உயிர் இறைஞானம் பெற்றபோது அது ஒளிபெற்ற கண் போல்வது. படலம் நீங்கப்பெற்று ஒளியெய்திய கண்ணானது தன்னொளியையும் தன்னோடு கலந்துள்ள உயிரறிவையும் பெற்றாற் போல், உயிர் தன்னையும் தன் அறிவினூடே அகண்டமாய் விளங்கும் முதல்வனையும் பெறும்.

**பாசிபடு குட்டத்திற் கல்லினைவிட் டெறியப்**
**படும்பொழுதுநீங்கி அதுவிடும்பொழுதிற்பரக்கும்**
**மாசுபடு மலமாயை அருங்கன்மம் அனைத்தும்**
**அரனடியை உணரும்போ தகலும்பின் அணுகும்**
**நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கும்**
**நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவே யாகி**
**ஆசையொடும் அங்குமிங்கு மாகிஅல மருவோர்**
**அரும்பாசமறுக்கும்வகை அருளின் வழியுரைப்பாம் 290**

பாசி நிறைந்த பொய்கையிற் கல்லினை விட்டெறிந்தால், அதுபட்டபோது நீங்கி, விட்ட பொழுது பரந்து நீரை மூடிக்கொள்ளும். குற்றமுள்ள ஆணவம், கன்மம், மாயை என்பனயாவும், இறைவனது திருவடியை உணரும் போது நீங்கும்; உணராதபோது அணுகும். அன்போடு முதல்வன் திருவடியினைப்

பிரியாது, அதீதநிலையில் நிற்க முயல்வோர் அந்நிலையிற் பொருந்திக் கலங்காது நின்றிடுவர். உலகப் பற்றுக் காரணமாகக் கருவிகளினும் சிவத்தினுமாக அங்கு மிங்கும் அலைகின்றவர்கள் பாசத்தை அறவே அறுக்கு முறையை மேற்கூறுதும்.

## ஒன்பதாஞ் சூத்திரம்

**பாசஞான னத்தாலும் பசுஞானத் தாலும்**
**பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத் தாலே**
**நேசமொடும் உள்ளத்தே நாடிப் பாத**
**நீழற்கீழ் நில்லாதே நீங்கிப் போதின்**
**ஆசைதரும்உலகமெலாம் அலகைத்தே ராமென்(று)**
**அறிந்தகல அந்நிலையே யாகும் பின்னும்**
**ஓசைதரும் அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க**
**உள்ளத்தே புகுந்தளிப்பன் ஊனமெலா மோட. 291**

உலகறிவாலும் உயிரறிவாலும் அறியக்கூடாத கடவுளை அவன் அருளுஞ் சிவஞானத்தாலே அறிவின்கண் வைத்தாராய்ந்து, அவன் திருவடி நிழலை நீங்காது மாற்றம் இன்றி நிற்கப்பெறாதபொழுது, ஆசைதரும் உலகம் தோன்றும். அதுகானற்றேர்போல நிலையா இயல்பிற்றெனக்கண்டு கழிக்கவேண்டும். அப்போது தான்பற்றிய உயர்நிலையை மீளவும் எய்தலாம். உலக நிலையாமை உணர்வதுடன். மெய்யுணர்வு நல்குந் திருவைந்தெழுத்தை முறையாக நினைந்தெண்ணுக. அப்போது இறைவன் உள்ளத்தே புகுந்து வாசனாமலம் நீங்கும்படி அருள் செய்வன்.

## முதலதிகரணம்

வேதசாத் திரமிருதி புராணகலை ஞானம்
விரும்பசபை வைகரியா தித்திறங்கள் மேலாம்
நாதமுடி வானவெல்லாம் பாச ஞானம்
நணுகிஆன் மாஇவைகீழ் நாடலாலே
காதலினால் நான்பிரம மென்னு ஞானம்
கருதுபசு ஞானம்இவ னுடலிற் கட்டுண்(டு)
ஓதியுணர்ந் தொன்றொன்றா உணர்ந்திடலாற் பசுவாம்
ஒன்றாகச்சிவன் இயல்பின் உணர்ந்திடுவன்காணே 292

உலகறிவென்பது, நால்வகைச் சொற்களும் அவற்றினடியாய்ப் பிறந்த அறிவு நூல், ஒழுக்க நூல் வரலாற்று நூல், கலை ஞானங்கள் முதலியனவும் பற்றிய அறிவும், மூச்சு மந்திரமாகிய அசபையைப் பற்றிய அறிவும், நாத முதல் நிலமீறாகவுள்ள தத்துவக் கூட்டத்தைப் பற்றிய அறிவுமாம். இவைகளெல்லாம் உயிர்க்குக் கீழ்ப்பட்டன வென்றறிந்து உயிரின் பெருமையுணர்தல், பசு ஞானமாய உயிரறிவு எனப்படும். இவ்வுணர்ச்சியை மாத்திரம் கருதி நான் பிரமமென்றெழுவது தவறு; ஏனெனில் உயிர் பிரமமல்ல; உயிர் உடலிற் கட்டுண்டு அறிவிக்க அறிந்து ஐம்பொறிகள் வாயிலாகப் பொருள்களை ஒவ்வொன்றாயுணரும். பிரமமாகிய சிவம்தானே யாவற்றையு மொருங்கேவுணரும் முற்றறிவுடையது என அறிக.

கரணங்கள் கெடவிருக்கை முத்தியா மென்னில்
கதியாகும் சினைமுட்டை கருமரத்தின் உயிர்கள்

**மரணங்கொண் டிடஉறங்க மயங்கிமூர்ச் சிக்க**
**வாயுத்தம் பனைபண்ண வல்விடத்தை அடையச்**
**சரணங்கள் புகுநிழல்போல் தனைஅடையுஞ் சமாதி**
**தவிராது மலமிதுவும் பசுஞான மாகும்**
**அரணங்க ளெரித்தவன்தன் அடியைஅறி விறந்தங்(கு)**
**அறிந்திடீர் செறிந்ததுகள் அகற்றி டீரே. 293**

கரணங்கள் கெட்டொழிவதே முத்தியென்றால் அவை கிளைத்துத் தோன்றாக் காலத்து உயிர் முத்தியடைந்ததாக வேண்டும். முட்டை யினும், கருப்பையினும், மரத்தினும், வியர்வை தோன்றும் நமது உறுப்பினும் உயிர் பொருந்தியிருக்குங்காலை, உயிர்கள் முத்தியுற்றனவாதல் வேண்டும். உச்சிப்போதில் ஒருவனது நிழலானது அவனதடியின் கீழடங்கி நிற்றல் போலப் பொருள்களிற் பற்றுவிட்டுத் தன்கண், ஒன்றி நிற்கும் சமாதியே முத்தி யென்னில், மரணம், உறக்கம், மயக்கம், உயிர்ப்படக்கம், காற்று நிறுத்தம் (வாயுத்தம்பனை) நஞ்சுணவு கோடல் முதலியன நேர்ந்த விடத்தும் முத்தியறுதல் வேண்டும், அவை முத்தி நிலையாகாமையின், கரணக்கேடு தற்சமாதியென் பனவீடாகா. அவையாவும் பசுஞானப் பயனேயாம். மலத்தோடு கூடிய நிலைகளே அவைகள். முப்புரமெரித்த முதல்வன் திருவடியைச் சுட்டிறந்த அறிவாற்பற்றி, உயிரைப்பற்றிய மிகுந்த இருண்மல அழுக்கைத் தொலைப்பாயாக.

**சிவனைஅவன் திருவடிஞா னத்தாற் சேரச்**
**செப்புவது செயல்வாக்குச் சிந்தை யெல்லாம்**
**அவனையணு காவென்றும் ஆத லானும்**
**அவனடிஅவ் வொளிஞான மாத லானும்**

**இவனும்யான் துவக்குதிரம் இறைச்சி மேதை**
**என்புமச்சை சுக்கிலமோ இந்திரியக் கொத்தோ**
**அவமகல எனையறியேன் எனும்ஐய மகல**
**அடிகாட்டி ஆன்மாவைக் காட்ட லானும். 294**

அங்ஙனம் முதல்வனைப்பற்றி நில்லாவிடத்து மலம் நீங்காது. தனது மெய்யியல்பை உயிர் அறிவது திருவடி ஞானத்தாலாதலின், அது கலவாத சமாதியாற் பயனில்லை, உயிரின் நினைவும் சொல்லும் உடல் முயற்சியும் என்றும் எட்டாத நிலையினன் இறைவன் ஆதலானும், திருவடி என்பது மாசற்ற முற்றறிவாதலானும், தோல், உதிரம், தசை, மேதை எலும்பு, மச்சை, வெண்ணீர் என்பவற்றுள் யான் யாதோ, அல்லது ஐம்பொறிக் கூட்டமோ யான்? என்ற ஐயப்பாட்டையொழித்து உயிர்க்கு அதனியல்பையும் தன்னையுங் காட்டுவது திருவடி ஞானமாதலானும் அத்தகைய அறிவாற் சிவனை அடைக எனப் பேரறிஞர் கூறுவாராயினர்.

**கண்டிடுங்கண் தனைக்காணா கரணங் காணா**
**கரணங்கள் தமைக்காணா உயிருங் காணா**
**உண்டியமர் உயிர்தானுந் தன்னைக் காணா(து)**
**உயிர்க்குயிராம் ஒருவனையுங் காணா தாகும்**
**கண்டசிவன் தனைக்காட்டி உயிருங் காட்டிக்**
**கண்ணாகிக் கரணங்கள் காணாமல் நிற்பன்**
**கொண்டரனை உளத்திற்கண் டடிகூடிற் பாசம்**
**கூடாது கூடிடினும் குறித்தடியின் நிறுத்தே. 295**

பொருள்களைக் கண்டிடுங் கண்ணானது தன்னியல்பை யறியாது; தனக்கு முதலாயுள்ள

அகக்கருவிகளையு மறியாது, அக்கருவிகளும் தம்மையறியமாட்டா. தம்மைச் செலுத்து முயிரையு மறிய மாட்டா. உயிர்தானும் தன்னையுமறியாது, தன் உயிராயுள்ள கடவுளையும் அறியாது. சிவ பெருமான் இயற்கையிலே எல்லாவற்றையு மறிந்து உயிரறிவின் கண்ணே நின்று தன்னைக் காட்டி, தன்னுளடங்கி நிற்கும் உயிரையுங்காட்டிக் கரணங்களின் உதவி வேண்டாது நிற்பன் ஆதலின், அவனை உயிரின்கண்ணே கண்டு அவனது பேரறிவைத் தலைப்படின் பாசம் நீங்கும். வாசனையாற் பாசம் பற்றுமாயின், அவனது திருவடியில் இடைவிடாது அறிவை நிறுத்து.

## இரண்டாம் அதிகரணம்

**குறித்தடியின் நின்(று) அட்டகுணமெட்டுச் சித்தி**
**கோகனதன் முதல்வாழ்வு குலவுபத மெல்லாம்**
**வெறுத்துநெறி அறுவகையும் மேலொடுகீ ழடங்க**
**வெறும்பொயென நினைந்திருக்க மேலொடுகீ ழில்லான்**
**நிறுத்துவதோர் குணமில்லான் தன்னையொரு வர்க்கு**
**நினைப்பரியான் ஒன்றுமிலான் நேர்படவந் துள்ளே**
**பொறுப்பரிய பேரன்பை அருளியதன் வழியே**
**புகுந்திடுவன் எங்குமிலாப் போகத்தைப் புரிந்தே. 296**

இறைவன் திருவடியிற் குடிகொண்டு உறுதியாய் நின்று சமணர் முதலியோார் கூறும் எண்குணம். எண் பெருஞ்சித்தி, அயன் முதலிய விண்பதவிகளை யெல்லாம், அறுவகை வழிகளோடு தொடர்புற்ற - மேலாகவும் கீழாகவுமுள்ள - நெறிகளெல்லாம் நிலையாதனவென ஒதுக்கி, இறைவனையே நினைந்திருந்தால், மேல் கீழ் என்று வரையறுக்கப்படாத்

தன்மையனாய், யாதொரு பற்றுமிலனாய், தான் அறிவித்தாலன்றிப் பிறர் தன்னையறியாப் பெற்றியனாயுள்ள பெருமான், நேராக அறிவின் கண்ணே தோன்றி அளவற்ற பேரன்பு மீதுரும்படி செய்து, அதன் வழியாக உட்புகுந்து எங்கும் நிறைந்த பேரின்பத்தை நல்குவன்.

## மூன்றாம் அதிகரணம்

**கண்டஇவை யல்லேன்நான் என்றகன்று காணாக்**
**கழிபரமும் நானல்லேன் எனக்கருதிக் கசிந்த**
**தொண்டினொடும் உளத்தவன்றான் நின்றகலைப் பாலே**
**சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன்வே றின்றி**
**விண்டகலும் மலங்களெலாம் கருட தியா னத்தால்**
**விடமொழியும் அதுபோல விமலதையும் அடையும்**
**பண்டைமறை களும்அதுநா னானேன் என்று**
**பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே. 297**

காணப்பட்ட பொருள்களனைத்தும் நான் அல்லேன் என்று உலகப் பொருள்களின் விலகி, காணப்படாத பரம் பொருளும், நான் அல்லேனென உணர்ந்து அப் பரம்பொருள் தன்னிற் கலந்திருப்பதை உருகிப் பணிந்த உளத்தொடு கண்டு, அக்கலப்புக் காரணமாகத் தன்னை அவனாகப் பாவித்த இடத்தே, அவன் தன்னின் வேறாகாது தோன்றுவன். கருட பாவனையால் விடம் நீங்குவதுபோல, இப்பாவனையால் மலம் அகலும்; புனிதமுண்டாம். ஆதலின், பாவிக்கும்படி பண்டை மறைகள் விதித்ததும் இப்பாவகத்தைத்தான் எனவுணர்க.

அஞ்செழுத்தால் ஆன்மாவை அரனுடைய பரிசும்
அரனுருவும் அஞ்செழுத்தால் அமைந்தமையும் அறிந்திட்(டு)
அஞ்செழுத்தால் அங்ககர நியாசம் பண்ணி
ஆன்மாவின் அஞ்செழுத்தால் இதயத் தர்ச்சித்(து)
அஞ்செழுத்தாற் குண்டலியின் அனலை யோம்பி
அணைவரிய கோதண்டம் அணைந்தருளின் வழி நின்(று)
அஞ்செழுத்தை விதிப்படிஉச் சரிக்கமதி யருக்கன்
அணையரவம் போற்றோன்றும் ஆன்மாவில் அரனே.

நாட்டுமித யந்தானும் நாபியினில் அடியாய்
ஞாலமுதல் தத்துவத்தால் எண்விரல்நா ளத்தாய்
மூட்டுமோ கினிசுத்த வித்தைமல ரெட்டாய்
முழுவிதழ்எட் டக்கரங்கள் முறைமையினின் உடைத்தாய்க்
காட்டுகம லாசனமேல் ஈசர்சதா சிவமும்
கலாமூர்த்த மாம்இவற்றின் கண்ணாகுஞ் சத்தி
வீட்டைஅருள் சிவன்மூர்த்தி மானாகிச் சத்தி
மேலாகி நிற்பன்இந்த விளைவறிந்து போற்றே. 299

திருவைந்தெழுத் தாராய்ச்சியால் சிவன் ஆண்டவனாகவும், உயிர் அவனது உடைமையாகவும் நிற்கு நிலையையும், அஞ்செழுத்து அவன் திருவடிவமா யமைந்திருப்பதையுமறிந்து, அஞ்செழுத்தால் உடல் தொடுதல், கைதொடுதல் என்னுமுறைகளைச் செய்து, அஞ்செழுத்தால் அகமலரின் கண்ணே இறைவனை வழிபட்டு, குண்டலியிருக்கும் உந்தியில் அஞ்செழுத்தால் வேள்வி இயற்றி, யோகத்தாலன்றி யணைதற்கறிய புருவநடுவில் சிவனை நினைந்து, அஞ்செழுத்தை வீட்டைவார் எண்ணவேண்டிய முறைப்படி எண்ணுக. அப்போது ஞாயிறு திங்களைக் கவர்ந்த பாம்புகளைப்

போல உயிரின்கண் முதல்வன் தோன்றுவன். உட்பூசை முறையாவது, இதயத்தாமரை, உந்தியில் நின்று மேலெழுந்த எண் விரலளவு நீளமுள்ள தண்டினை யுடையதாகவும், அத்தண்டின் அடி நிலமுதலாகவும் எஞ்சிய பகுதி இருப்பத்து மூன்றுமுதலாகவும், தூய்தன் மாயை முதலாகக் கீழ்ப்பட்ட முதல்கள் ஏழும், தூய புலமான சுத்ததத்துவமும் தாமரையின் எட்டிதழ் களாகவும்; அவ்விதழ்களில் பிரணவம், வித்தெழுத்து, அஞ்செழுத்து உட்பட உள்ள (ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம) என்னும் எட்டு எழுத்துக்கள் உள்ளன வாகவும், அரசு முதலும் அருட்சிவ முதலும் தாமரைப் பூந்தாதுக்களாகவும், இவற்றிற்குள்ளாய பொகுட்டும் விதைகளும் விந்து நாத தத்துவங்களாகவும் அமைந்த தாமரை இருக்கை மீது சிவசத்தியை வடிவாகவும் சிவத்தை வடிவத் தலைவனாகவும் கருதி வழி படுதல் என்க.

**அந்தரியா கந்தன்னை முத்திசா தனமா**
**அறைந்திடுவர் அதுதானும் ஆன்மசுத்தி யாகும்**
**கந்தமலர் புகையொளிமஞ் சனம்அமுது முதலாக்**
**கண்டனஎ லாம்மனத்தாற் கருதிக் கொண்டு**
**சிந்தையினிற் பூசித்துச் சிவனைஞா னத்தால்**
**சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க**
**வந்திடும்அவ் வொளிபோல மருவிஅர னுளத்தே**
**வரவரவந் திடுவன்பின் மலமான தறுமே. 300**

இந்த உட்பூசையை வீட்டிற்குத் துணை செய்வதாகப் பெரியோர் பேசுவர். அது உயிர்ப் புனிதமாகிய ஆன்ம சுத்தியாதலின் சந்தனம், மலர், நறும்புகை, விளக்கு, திருமஞ்சனம். திருவமுது முதலிய

எல்லாம் மனத்தாற் பாவித்து அகத்தே சிவனை வழிபட்டு நினைக்க நினைக்க, கண்ணாடியை மாசுபோக விளக்கியவிடத்து ஒளி மிகுதல் போல, உயிரின்கண்ணே சிவம் மேலிட்டு விளங்கும். மலம் அற்றொழியும்.

**புறம்பேயும் அரன்கழல்கள் பூசிக்க வேண்டில்**
**பூமரத்தின் கீழுதிர்ந்த போதுகளுங் கொண்டு**
**சிறந்தாருஞ் சீர்ச்சிவனை ஞானத்தா லங்குச்**
**சிந்திக்கும் படிஇங்குச் சிந்தித்துப் போற்றி**
**அறம்பாவங் கட்குநாம் என்கடவேம் என்றும்**
**ஆண்டவனைக் கண்டக்கால் அகம்புறமென் னாதே**
**திறம்பாதே பணிசெய்து நிற்கை யன்றோ**
**சீரடியார் தம்முடைய செய்தி தானே. 301**

உட்பூசை செய்வதுடன், அறிவு புறத்தே செல்லுதல் பற்றி புறப்பூசை செய்யவிரும்பின், மலர் மரங் களினின்றுதிர்ந்த பூக்களனாலே ஞானத்தினால் உள்ளத்தே இறைவனைப் பூசித்த முறையே புறத்தேயும் ஒரு குறியின்கண் அவனை நினைந்து வழிபட்டு, அகம் புறம் என்ற வேறுபாடின்றி இறைபணி செய்து, இருவினைப் பயன்கள் தம்மை வாதித்தற்கிட மில்லையெனத் தேர்ந்து நிற்றலே மெய்யடியாரது செயலாகும்.

**இந்தனத்தின் எரிபாலின் நெய்பழத்தின் இரதம்**
**எள்ளின்கண் எண்ணெயும் போல் எங்குமுளன் இறைவன்**
**வந்தனைசெய் தெவ்விடத்தும் வழிபடவே அருளும்**
**மலமறுப்போர் ஆன்மாவின் மலரடிஞா னத்தாற்**

**சிந்தனைசெய் தார்ச்சிக்கச் சிவன்உளத்தே தோன்றித்**
**தீஇரும்பைச் செய்வதுபோற் சீவன் தன்னைப்**
**பந்தனையை அறுத்துத்தா னாக்கித்தன் னுருவப்**
**பரப்பெல்லாங் கொடுபோந்து பதிப்பனிவன் பாலே.**
**302**

இறைவன் எங்கும் நிறைந்திருக்கின்றான் ஆதலால் அகத்தேயோ புறத்தேயோ வழிபடினும், விறகில் தீப்போலவும், பாலில் நெய்போலவும், பழத்திற் சுவைபோலவும். எள்ளிலெண்ணெய் போலவும், முறையே சரியையாளர், கிரியையாளர், யோகிகள், ஞானிகளுக்கு, அவன அருள் புரிகின்றான். எனினும், அறிவின் கண்ணே திருவடி ஞானத்தால் அவனை வழிபடுவார்க்கு, இறைவன் நன்கு விளங்கித் தீயானது இரும்பைத் தன்வண்ணமாக்குதல் போல, அவர்களைத் தன்வண்ணமாக்கித் தன் விரிந்த பேரானந்த வடிவு முழுவதையும் அவர்கள் மாட்டுப் பதியவைப்பன்.

--------

# பயனியல்

---------

## பத்தாஞ் சூத்திரம்

**இவனுலகில் இதமகிதம் செய்த வெல்லாம்**
**இதமாகிதம் இவனுக்குச் செய்தார்பல் இயையும்**
**அவனிவனாப் நின்ற முறை ஏக னாகி**
**அரன்பணியின் நின்றிடம் அகலுங் குற்றம்**
**சிவனும் இவண் செய்தியெல்லாம் என்செய்தியென்றும்**
**செய்ததெனக் கிவனுக்குச் செய்த யென்றும்**
**பவமகல உடனாகி நின்றுகொள்வன் பரிவாற்**
**பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே. 303**

*இறைவன் உயிரோடு கலந்துநின்ற முறைமை போல, உயிரானது இறைவனோடு கலந்துநின்று ஒற்றுமைப்படலே யானெனதென்னாஞ் செருக்கற்றும், அதனால், உயிரின் செய்தியைச் சிவன் தனது செய்தியாகவும்; அவ்வுயிர்க்குச் செய்வதையெல்லாம், தனக்குச் செய்வதாகவும் ஏற்று, உயிர் பிறப்பறும் படிநிற்பன். அதனால் அவ்வுயிர் பிறர்க்குச் செய்யும் நன்மை தீமைகள், பிறர் அதற்குச்செய்த வினைப் பயன் நுகர்ச்சிக்குத் துணைக்காரணமாவதல்லது, அவ்வுயிரை வாதியா, இறைவன் பாலுள்ள அன்புமேலீட்டினால் அவ்வுயிர் செய்யுஞ் செய்தி பிறர்க்குத் தீங்காதத் தோன்றினும், அதனை இறைவன் தனது பணியாய புண்ணியமாக்கி விடுவேன். ஆதலால் பிறவிவருவதற் கேதுவாய வினைக் குற்றமும் ஆணவக்குற்றமுமகலும்.*

## முதலதிகரணம்

யான் செய்தேன் பிறர்செய்தார் என்னதுயான் என்னும்
இக்கோணை ஞானஎரி யால்வெதுப்பி நிமிர்த்துத்
தான்செவ்வே நின்றிடஅத் தத்துவன்தான் நேரே
தனையளித்து முன்நிற்கும் வினையொளித்திட்டோடும்
நான் செய்தேன் எனுமவர்க்குத் தானங் கின்றி
நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்குங் கன்மம்
ஊன் செய்யா ஞானந்தால உதிப்பினல்லால்
ஒருவருக்கும் யானெனதிங் கொழியா தன்றே. 304

யான் செய்தேன் பிறர் செய்தார், யான் உனது என்னுஞ் செருக்கு விளைதற்கேதுவாகிய பாசக் கோணலை அறிவுத் தீயால் வெதுப்பி நேராக்கி முதல்வன் திருவருள் வழியிற் செவ்விதாக உயிர் நிற்குமிடத்தே, முதல்வன் நேராக வெளிப்பட்டு அவ்வுயிர்க்குத் தன்னிலை விளக்கி முன்நிற்பன். அப்போது வினையானது ஒளித்தோடும். நான் செய்தேன் என்னும் உணர்ச்சியுடையோர்க்கு இறைவன் வினைநுகர்ச்சியைக் கொடுப்பான், அதனால் ஆகாமியம் ஏறும் கருவிகரணச் சார்பில்லாத சிவஞானம் உதித்தாலன்றி யான் எனதென்னுஞ் செருக்கொழியாது.

## இரண்டாம் அதிகரணம்

இந்திரியம் எனைப்பற்றி நின்றேஎன் வசத்தின்
இசையாதே தன்வசத்தே எனையீர்ப்பதிவற்றைத்
தந்தவன்ற றாணைவழி நின்றிடலால் என்றும்
தானறிந்திட் டிவற்றினொடுந் தனையுடையான் தாள்கள்
வந்தனைசெய் திவற்றின்வலி அருளினால் வாட்டி

வாட்டமின்றி இருந்திடவும் வருஞ்செயல்க ளுண்டேல்
முந்தனுடைச் செயலேன்று முடித்தொழுக வினைகள்
மூளாஅங் காளாகி மீளா னன்றே. 305

சலமிலனாய் ஞானத்தால் தனையடைந்தார் தம்மைத்
தானாக்கித் தலைவன்அவர்தாஞ்செயல்வினை தன்னால்
நலமுடன் பிறர்செய்வினை யூட்டியொழிப் பானாய்
நணுகாமல் வினையவரை நாடிக் காப்பன்
உலகினில்என் செயலெல்லாம் உன்விதியே நீயே
உள்நின்றுஞ் செயல்வித்துஞ் செயலேயென்றும்
நிலவுவதோர் செயலேனக்கின்றுன் செயலேயேன்றும்
நினைவார்க்கு வினைகளெல்லாம் நீக்குந் தானே. 306

ஐம்பொறிகள் உயிரினைப் பற்றி நின்று உயிரின் வசமாக நில்லாமல், தம்முடைய வசமாக உயிரினை இழுப்பதற்குக் காரணம் அவற்றை இயக்குமுதல்வனது ஆணைவழி அவை நிற்றலே, யாம் என்பதையுணர்ந்து, அவைகட்கும் தனக்கும் முதல்வனாயபெருமானது தாள்களைத் தொழுது, அவனது திருவளாலே பொறிகளின் வலியைத் தொலைத்துத் துன்பமின்றி யிருத்தல் கூடும், அங்ஙனஞ் செய்தபோதும் வழக்கத்தினால் பொறிகளின் செயல்கள் ஒரோவழி நிகழுமாயின், அவற்றை இறைவன் செயலாகக் கருதி அவனது பணியில் வழுவாது ஒழுகின், வினைகள் மேற்பட்டெழா அதலின், பொறிகளுக்கு ஆளாகிப் பாசத்தால் மீளாமை நேரும். சிவஞானத்திலே, தன்னை அடைந்தவர்களை இறைவன் தன்றன்மையவராக்கி, அவர்கள் செய்யும் வினை காரணமாகப் பிறர் அவர்கட்குச் செய்யும் வினையின் பயன்களை நன்மையாக அவர்கள் நுகருமாறு செய் தொழித்து வினைப் பயன்கள் அவர்களே அணுகாதவாறு அருள்

கூர்ந்து காத்திடுவன், உலகில் தமது செயலெல்லாம் இறைவன் கட்டளையே யென்றும் இறைவனே உள்நின்று செய்தும் செய்வித்தும் ஆட்கொள்வதால் தமக்கெனச் செயலில்லை; எல்லாம் இறைவன் செயலே என்றும் நினைவார்கட்கு வினைகளெல்லாம் நீங்கி யொழியும்.

நாடுகளிற் புக்குழன்றும் காடுகளிற் சரித்தும்
நாகமுழை புக்கிருந்தும் தாகமுதல் தவிர்த்தும்
நீடுபல காலங்கள் நித்தரா யிருந்தும்
நின்மலஞானத்தையிலார் நிகழ்ந்திடுவார்பிறப்பின்
ஏடுதரு மலர்க்குழவார் முலைத்தலைக்கே இடைக்கே
எறிவிழியின் படுகடைக்கே கிடந்தும் இறைஞானங்
கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக்
குஞ்சித்த சேவடியும் கும்பிட்டே இருப்பார். 307

அங்கித்தம் பனைவல்லார்க் கனல்சுடா தாகும்
ஔடதமந் திரமுடையார்க் கருவிடங்கள் ஏறா
எங்கித்தைக் கன்மெலாஞ் செய்தாலும் ஞானிக்(கு)
இருவினைகள் சென்றணையா முற்செய்வினை இங்குத்
தங்கிப்போம் பாத்திரமும் குலாலன்வினை தவிர்ந்த
சக்கரமும் கந்தித்துச் சுழலு மா போல்
மங்கிப்போய் வாதனையால் உழல்விக்கும் எல்லா
மலங்களும்பின் காயமொடு மாயு மன்றே. 308

தவஞ்செய்வான், தொடங்கி புண்ணியப் பகுதி களுள்ள நாடுகளிற் புகுந்தும், திரிந்தும், காடு களிலலைந்து காய், கனி, சருகுகளைத்தின்றும், மலைக்குகை களிற்புகுந்துயோகத் தமர்ந்தும் பசி, நீர்வேட்கை முதலியன இல்லாதும், நெடுங்காலம் உயிர் வாழப்பெற்றாலும், இறைவனது திருவடி ஞானம்

பெறாதவர்கள், பிறப்பிற்கு மீள்வர் இறைவனோடு ஏகனாகி நிற்கும் ஞானம் பெற்றவர்கள், மங்கைய ரின்பத்தில் ஈடுபட்டு நிற்பினும், பிறர் எய்துதற் கரிய வீட்டினைத் தலைப்பட்டுக் கூத்தப்பெருமானது திருவடியின் கீழ்வணங்கி வாழ்வர். அனலைக்கட்ட வல்லாரை நெருப்புச் சுடாது; மருந்தாலும் மந்திரத் தாலும் உடம்பினை வலிதாக்கிக் கொண்டவர்கள் மேனிமீது நஞ்சு ஏறாது அவற்றைப் போலப் பொறிகள் தம் வசமாகப் பெற்ற சிவ ஞானிகள் எவ்வினை செய்தாலும் வினைப்பயன்கள் மேலைக்கு வித்தாக ஏறமாட்டா. முற் செய் வினைப் பயனானது, காயம்வைத்தெடுத்த கலன் வாசனை உடையதாகவும் வனை தற்றொழில் முடிந்த குயவன் சக்கரம் வறிதே சுழல்வ தாயுமிருப்பதுபோல, எடுத்த உடம்பினை வாசனையளவாகத் தாக்கிச் சக்தி கெட்டொழியும் எல்லா வகைப் பாசமும் எடுத்த உடம்போடு மாய்ந் தொழியும்.

## பதினொன்றாஞ் சூத்திரம்

காயமொழிந் தாற்சுத்த னாகி ஆன்மாக்
காட்டக்கண் டிந்தன்மை யுடைய கண்ணுக்(கு)
ஏயும்உயிர் காட்டிக்கண் டிடுமோ போல
ஈசனுயிர்க் குக்காட்டிக் கண்டிடுவன் இத்தை
ஆயுமறி வுடையனாய் அன்பு செய்ய
அந்நிலைமை இந்நிலையின் அடைந்தமுறை யாலே
மாயமெல்லாம் நீங்கிஅரன் மலரடிக்கீ ழிருப்பின்
மாறாத சிவானுபவம் மருவிக் கொண்டே. 309

பரஞானத் தாற்பரத்தைத் தரிசித்தோர் பரமே
பார்த்திருப்பார் பதார்த்தங்கள் பாரார் பார்க்க

**வருஞானம் பலஞானம் அஞ்ஞான விகற்பம்**
**வாச்சியவா சகஞானம் வைந்தவத்தின் கலக்கம்**
**தருஞானம் போகஞா திருஞானம் ஞேயம்**
**தங்கியஞா னஞ்சங்கற் பனைஞான மாகும்**
**திருஞானம் இவையெலாங் கடந்சிவ ஞானம்**
**ஆதலால் சீவன்முத்தர் சிவமேகண் டிருப்பார்.** 310

காட்டினாற் காணுந் தன்மையுடைய கண்ணுக்கு உயிர் பொருள்களைக் காட்டித்தானும் காணுமாறு போல, இறைவன் பொருள்களை உயிர்க்குக் காட்டித் தானும் அவற்றைக்காண்பது, இங்ஙனம் காட்டி காணும் பேருதியை யாய்ந்தறிந்து இறைவனிடத்து மறவா அன்பு செய்தால் அப்படிச் செய்பவர்கள், உடம்பு நீங்கியபின் பெறுதற்குரிய வீட்டினை அது நீங்குமுன்னேயெய்தி, இம்மையே யெல்லாப் பாசங்களுமொழியப் பெற்று மாறாசிவ நுகர்ச்சியுடை யோராய்ச் சிவன் மலரடிக் கீழிருத்தல் கூடும். எல்லாவற்றினு மேலாகிய திருவடி. ஞானத்தாலே சிவத்தைக்கண்டு அன்பு செய்யப் பெற்றோர் அச்சிவபரம் பொருளையே உணர்ந்து நிற்பர். வினையின் வாசனை தாக்குதற்குரிய பிற பொருள்களை அவர்கள் நோக்கார் பிறப் பொருள் களைப்ஒ பார்த்தற்கேதுவாகிய ஞானம், பலவகைப் பட்ட அளவை ஞானமாய்ச் சுட்டறிவின்பாற் படுமாதலின், அது அஞ்ஞான வகையாகவே கருதப்படும், பேச்சையும் பேசப்படும் பொருளையும் பற்றிய அறிவு, நால்வகை சொற்களினடியாய்ப் பிறந்த ஐய அறிவாகும் ஐயம் நீங்குதற்பொருட்டு அறிவிது, அறிவோரின் அறியப்படும் பொருள் இதுவெனப் பகுத்தறிவும் ஞானம் நினைவின்பாற்படும் பாவனை ஞானமேயன்றி அனுபூதி ஞானம். அன்று. திருஞானம்

என்பது இவற்றையெல்லாம் கடந்த சிவஞானம், உடம்பு உள்ள போதே வீடணையும் பெரியோர், இறைவனையே நோக்கியிருப்பார்.

அனாதிஉடல் ஒன்றினைவிட் டொன்றுபற்றி கன்மால்
அயழிந்து வருதலால் அந்த மில்லை
வினாதியருள் பெற்றவர்கள் நித்தவுரு வத்தைப்
பெற்றிருக்கை முத்தியெனிற் பெறும்பதமே இதுவும்
இனாதுநிலை இதுதானுங் காய முண்டேல்
இருங்கன்மம் மாயைமல மெல்லா முண்டாம்
மனாதிதரு முடலாதி காரியத்தால் அனாதி
மலம்அறுக்கும் மறுந்தற்றால் உடன்மாயுங் காணே 311

உயிரானது, வினைக்கேற்ப தொன்று தொட்டு அளவற்ற காலம், உடம்பெடுத்தும், விட்டும் திரிந்து வருதலால் அருள்பெறுமுன், உடல் நிலைபேறுடைய தன்று; முதல்வனது அருளைப் பெற்றபின் அழியாத உடல்பெற்று உயிர் நிலவுமென்னில், அங்ஙனம் உடலோடு கூடிநிற்கும் நிலை பதமுத்தியேயாம்; பரமுத்தி அன்று. உடலோடு கூடிய நிலை துன்பத்தொடு மிடைந்த நிலையேயாம்; உடம்புண்டானால் வினையுண்டு; வினையூண்டானால் ஆவணமல வாசனையுண்டு. மேலும் உடம்பானது மூலமலத்தை ஒழித்தற்குரிய மருந்து; மூலமலமொழியவே மருந்தாய உடலும் ஒழியும்; ஆதலால் உருவத்தோடிருத்தல் முத்தியன்று.

தெரிவரிய மெய்ஞானம் சேர்ந்த வாறே
சிவம்பிரகா சிக்குமிங்கே சீவன்முத்த னாகும்
உரியமல மௌடதத்தால் தடுப்புண்ட விடமும்
ஒள்ளெரியின் ஒளிமுன்னர் இருளுந் தேற்றின்

**வருபரல்சேர் நீர்மருவு கலங்கலும்போ லாகி**
**மாயாதே தன்சக்தி மாய்ந்து காயம்**
**திரியுமள வும்உளதாய்ப் பின்பு காயஞ்**
**சோராத வகைதானுந் தேயு மன்றே 312**

அறிதற்கிய சிவனடிப் பேரறிவை பெற்றபோதே சிவம் விளங்கும்; உயிர்க்கு வீட்டின்பம் உளதாம்; எனினும் மூலமலமானது மருந்தினாற்றடைப்பட்ட விடம் போலவும், ஒளிமுன் இருள்போலவும் தேற்றாம் வித்தாற் றெளிக்கப்பட்ட நீருள் அடங்கிக் கிடக்கும் மாசுபோலவும், சக்திகெட்டு உடம்பு உள்ளவரையுள தாம்; உடம்பு ஒழியவே, தானும் கழிந்தொழியும்.

**ஆணவந்தான் அனாதி அந்த மடையா தாகும்**
**அடையின் அந்த ஆன்மாவும் அழியுமெனிற் செம்பிற்**
**காணுனுறுங் களிம்பிரத குளிகைபரி சிக்கக்**
**கழியுஞ்செம் புருநிற்கக் கண்டோ மன்றே**
**தாணுவின்தன் கழலணையத் தவிரும்மலந் தவிர்ந்தால்**
**தான்சுத்த னாயிருக்கை முத்திஅரன் தாளைப்**
**பூணவேண் டுவதொன்று மில்லையெனின் அருக்கன்**
**புகுதஅருள் போம் அடியிற் பொருந்தமலம் போமே.313**

ஆணவமலமானது தொடக்கம் இல்லாதது, அது அழியுமாயின் உயிருமழியுமென்னில், செம்பிலேயுள்ள களிம்பு இரதகுளிகையால் நீங்கியபின் செம்பு பொன்னாய் விளங்குவதேயன்றிக் களிம்போடு கழிந்தொழிவதில்லை. ஆதலால் அக்கொள்ளை பொருந்துமாறில்லை. இனி, திருவடி ஞானம்பெற்று மலம் நீங்கித் தூயனாயிருத்தலே முத்தி திருவடியை பூணவேண்டியதில்லையெனில், கதிரவனொளி யைக் கண்பொருந்தினாலன்றி அதற்கு இருள் நீங்காதவாறு

போல இறைவனடியில் உயிர்பொருந்தினாலன்றி மலம் நீங்காது என அறிக (இறையடியிற்பொருந்தலாவது சுட்டிறந்த அறிவால் இறைவன்பால் அயரா அன்பு செய்தலாகும்.

**நெல்லினுக்குத் தவிடுமிகள் அனாதி யாயே**
**நெல்லைவிட்டு நீங்கும்வகை நின்றநிலை நிகழ்த்தீர்**
**சொல்லியிடில் துகளற்ற அரிசியின்பா லில்லை**
**தொக்கிருந்து மற்றொருநெல் தோன்றி டாவாம்**
**மெல்லஇவை விடுமறவே இவைபோல அணுவை**
**மேவுமல முடல்கன்மம் அனாதிவிட்டே நீங்கும்**
**நல்லசிவ முத்தியின்கட் பெத்தான் மாவை**
**நணுகிநிற்கு மாதலினால் நாசமுமின் றாமே. 314**

நெல்லினுக்குத் தவிடு, உமி, முளைகள்கூடவே தோன்றினாலும், அவைநீங்கியபின் அரிசி நிலைபெறுதல் போல, மும்மலமும் நீங்கபெற்றபின் உயிர் நிலைபெறு மென்றறிக தவிடு, உமி முதலியனவைகள் அரிசியின் அடங்கி நிற்பதாக கருதுதல் தவறு அவ்வரிசியில் நின்று நெல்தோன்றுதற் கிடமில்லை. தவிடுமிகள் மெல்ல மெல்ல முற்றிலும் அரிசியினின்றும் நீங்கி யொழிதல் போல, உயிரினின்றும் மும்மலங்களும் நீங்கியொழியும், ஆனால் முத்தியடையாத உயிர்கள் அவைகலந்து நிற்றலால், அவை நித்தப்பொருள் என்பதற்கு இழுக்கில்லை.

## முதல் அதிகரணம்

**எவ்விடத்தும் இறையடியை இன்றியமைத் தொன்றை**
**அறிந்தியற்றி யிடா உயிர்கள் ஈசன் தானும்**

**செவ்விதினின் உளம்புகுந்து செய்தியெலாம் உணர்ந்து**
**சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்பன்**
**இவ்வுயிர்கள் தோற்றும்போ தவணையின்றித் தோற்றா**
**இவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லாமாய்**
**அவ்வுயிர்போல் நின்றிடுவன் ஆத லால்நாம் நிற்கும்**
**அரனடியை அகன்றுநிற்ப தெங்கே யாமே. 315**

கட்டு நிலையினும் வீட்டு நிலையிறும் இறைவனது திருவடியின் சார்பில்லாது உயிர்கள் அறிவுஞ் செயலும் உடையன அல்ல. எழுத்துக்களிலெல்லாம் அகரங் கலந்திருத்தல்போல, உயிர்கட்கு அறிவு செயல்கள் விளங்குதற் பொருட்டு முதல்வன் கலந்து நிற்பன். அவனாலன்றி உயிர்கள் படைப்பினைப்பெறமாட்டா. இறைவன் உயிர்களை நிலைக்களமாகக்கொண்டு அவைசெல்லுமாறெல்லாமறிந்து செலுத்தி, உயிர்கள் அறியும்பொருள்கள் எல்லாவற்றினும் நிறைந்து நிற்பனாதலால், அவனின் நீங்கீத் தனித்து நிலவுதல் எவ்விடத்தினும் உயிர்கட்கில்லையேன அறிக.

## இரண்டாம் அதிகரணம்

**எங்குந்தான் நிறைந்துசிவன் நின்றானுகில்**
**எல்லாருங் காணவே வேண்டுந்தா னென்னில்**
**இங்குந்தான் அந்தகருக் கிரவிஇரு ளாகும்**
**ஈசனருட் கண்ணில்லார்க் கொளியா யேயிருளாம்**
**பங்கந்தா னெழும்பதுமம் பக்குவத்தை யடையப்**
**பரிதி அலர்த் திடுவது போல்பருவஞ்சேருயிர்க்குத்**
**துங்கஅரன் ஞானக்கண் கொடுத்தருளி னாலே**
**சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன்காணே. 316**

இறைவன் எங்கும் நிறைந்து நிறைானுகில் எல்லோரும் அவனைக்காண வேண்டுமேயெனில்,

கதிரவன் ஒளி உலகெங்கும் பரவியிருந்தாலும், குருடர் அவ்வொளியைக் காணார். திருவருட்கண்ணில்லார்க்கு முதல்வன் ஒளியாய்த் திகழ்ந்தும் இருளாய்த் தோன்றுவன் சேற்றிலெழுந்த தாமரையை விரியும் பருவத்தே கதிரவன் மலர்வித்தாற் போல, நல்லுயிர் கட்கு அவன் ஞானக்கண்ணைக்கொடுத்து உயிரின் அறிவுக்கறிவாய்த் தோன்றி விளங்குவன்.

**சென்றணையும் நிழல்போலச் சிவன்நிற்ப னென்னில்**
**சென்றணையும் அவன் முதலிசிவத்தைஅணைந் தொன்றாய்**
**நின்றதுயிர் கெட்டென்னில் கெட்டதனை யின்றம்**
**நின்றதேற் கேடில்லை அணைந்துக்கெட்ட தென்னில்**
**பொன்றினதேன் முத்தியினைப் பெற்றவரார் புகல்நீ**
**பொன்றுகையே முத்தியெனில் புருடன் நித்தனன்**
**ஒன்றியிடுநீரொடுநீர் சேர்ந்தாற்போல் என்னின் றாம்**
**ஒருபொருளாம் அதிபதியோ டுயிர் பொருளொன்றன்றே**

**செம்பிரதகுளிகையினாற் களிம்பற்றுப் பொன்னாய்ச்**
**செம்பொனுடன் சேரும்மலஞ் சிதைந்தாற் சீவன்**
**நம்பனுடன் கூடுமெனிற் பொன்போ லல்லன்**
**நற்குளிகை போலஅரன் நணுகுமலம் போக்கி**
**அம்பொனடிக் கீழ்வைப்பான் அருங்களங்க மறுக்கும்**
**அக்குளிகை தானும்பொன் னாகா தாகும்**
**உம்பர்பிரான் உற்பத்தி யாதிகளுக்கு குரியன்**
**உயிர் தானுஞ் சிவானுபவமொன்றினுக்குமுரிந்தே 318**

வெயியில் வருந்துவோர் சென்றணையும் மர நிழல் போல இறைவன் நிற்பன், பக்குவப்பட்ட உயிர்கள் ஞானத்தால் அவனை அடையும் என்னில், உயிர்கட்குத் தாமாக இறைவனுக்குக் கருதலுக்குரிய முதன்மையும்

இறைவனுக்குத் தன்வயமின்மையும் கூறியதாக முடியும். ஆதலின் அங்ஙனங் கருதுதல் தவறு, உயிர்க்கெட்டுச் சிவத்தோடு சிவமாய் அடைதலே முத்தியென்னில் உயிர்கெட்டபின் அது சிவத்தை அடைதல் எப்படி? இறைவனை அணைந்த பின்னர் உயிர்கெட்டதென்னில் முத்தியினைப் பெற்றதுயார்? அணைந்து கெடுவதே முத்தியெனில் நித்தப்பொருளாய் உயிர் கெடுவது எப்படி நீரோடு நீர் சேர்ந்தார்ப் போல உயிர் முதல்வனோடு கலக்கும்என்னில், முதல்வனும் உயிர் கெடுவதெப்படி? நீரோடு நீர் சோர்ந்தாற்போல, உயிர் முதல்வனோடு கலக்கும் என்னில், முதல்வனும் உயிர்ரும் ஒருதன்மை யரல்லாதலின், அவ்வுவமை பொருந்தாது. செம்பு, இரகு குளிகையினாற் பொன்னாய்ப் பொன்னோடு சேர்தல்போல முத்தியிற் சிவத்தோடு உயிர் கலக்கு மேன்னில் இறைவன் குளிகை போல்வானேயன்றிப் பொன்வானவல்லன். குளிகையுடன் பொன் சேர்வதில்லை யாதலின் அவ்வுவமை பொருந்துவ தெப்படி?, இறைவன் படைப்பு முதலிய எத்தொழிலும் இயற்றவல்ல அதிகார முடையன்; உயர் சிவனடிப் பேரின்பம் ஒன்றே பெறுதற்குரியது.

**சீவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்றா மென்னில்**
**சிவருட்சித்திவன் அருளைச் சேருஞ்சித்தவன்றான்**
**பவங்கேடு புத்திமுத்தி பண்ணுஞ்சித் தவற்றிற்**
**படியுஞ்சித் தறிவிக்கப் படுஞ்சித்து மிவன்றான்**
**அவன்றானே அறியுஞ்சித் தாதலினா லிரண்டும்**
**அணைந்தாலு மொன்றாகா நன்னியமா யிருக்கும்**
**இவன்றானும் புத்தியுஞ்சி திவனாமோ புத்தி**
**அது அசித்தொன் றிடில் அவனுக்கிவனும் அசித் தாமே**

சிவன், சீவன் என்ற இரண்டும் அறிவுடைப் பொருளேயென்னில், சிவன் அருளை உடைய சித்து. சீவன் அருளைச் சேருஞ்சித்து, சிவன் படைப்பு ஒடுக்க முதலியன இயற்றும் சித்து; சீவன் அவற்றிற் படியுஞ்சித்து. சிவன் தானே அறியுஞ்சித்து சீவன் சிவனறிவிக்க அறியுஞ்சித்து; ஆதலினால் இரண்டும் அணைந்தாலும் ஒன்றாகாமல் வேறறக் கலந்து நிற்கும் உயிர் புத்திதத்துவத்தைச் சேர்ந்து பொருள்களை யறியுமிடத்து, புத்தியாகிய, சடமும்சித்தெனப் பேசப்படும். இறைவனை நோக்க உயிர் அசித்துப் போல்வ தொன்றே.

**இரும்பைக்காந் தம்வலித்தாற் போல் இயைந்தங்குயிரை**
**எரியிரும்பைச் செய்வதுபோல் இவனைத்தானாக்கி**
**அரும்பித்திந் தனத்தைஅன லழிப்பதுபோல் மலத்தை**
**அறுத்தமலன் அப்பணைந்த உப்பேபோ லணைந்து**
**விரும்பிப்பொன் னினைக்குளிகை ஒளிப்பதுபோல் அடக்கி**
**மேளித்துத் தானெல்லாம் வேதிப்பா னாகிக்**
**கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்**
**கட்டியைஒத் திருப்பான் அந்தமுத்தியனிற்கலந்தே 320**

காந்தமானது இரும்பினைத் தன்பால் இழுத்துக் கொள்ளுதல்போல இறைவன். உயிரைத் தன் வசப்படுத்திக் கொள்வான் தீயானது இரும்பை செந்நிற மாக்குதல் போலச் சீவனைச் சிவன் தன்வண்ண மாக்குவன். அனல் இரும்பின்கட் கலந்துள்ள கறையை எரித்தொழித்தாற் போல இறைவன் உயிரின் பாசத்தை யொழிப்பன், உப்பானது நீரிற் கலந்தபோது நீர்க்குந்தன் சுவை கொடுத்தாற்போல, இறைவன் மலம் நீங்கிய உயிரின் கண் தனது எண் குணத்தையும் பதிப்பித் தருளுவன், குளிகையானது பொன்னாக்குந் தன்மையைத் தன்னகத்தே அடக்கி நிற்பதுபோல,

*இறைவன் உயிரைத் தன்னடிக் கீழடக்கி மேற்பட்ட நிறைவை யிடையவன், அவன் ஐந்தொழிலும் தானே இயற்றுவானாய், மலம் நீங்கிய உயிர்க்குக் கரும்பு தேன், பால் கனியமுது, கற்கண்டு, சர்க்கரை யெல்லாங் கலந்த கலவைபோல இன்பம் ஈந்தருளுவன் என அறிக.*

## பன்னிரண்டாஞ் சூத்திரம்

**செங்கமலத் தாளிணைகள் சேர லொட்டாத்**
**திரிமலங்கள் அறுத்தீசன் நேசரோடுஞ் செறிந்**
**அங்கவர்தந் திருவேடம் ஆலயங்க ளெல்லாம் திட்டு**
**அரனெனவே தொழுதிறைஞ்சி ஆடிப் பாடி**
**எங்குமியாம் ஒருவர்க்கும் எளியோ மல்லோம்**
**யாவர்க்கும் மேலானோம் என்றிறுமாப் பெய்தித்**
**திங்கள் முடியார் அடியார் அடியோ மென்று**
**திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடை யோரே. 321**

## இரண்டாம் அதிகரணம்

**ஈசனுக்கன் பில்லார் அடியவர்க்கன் பில்லார்**
**எவ்வுயிர்க்கும் அன்பில்லார்தமக்கும் அன்பில்லார்**
**பேசுவதென் அறிவில்லாப் பிணங்களை நாம் இணங்கிற்**
**பிறப்பினிலும் இறப்பினிலும் பிணங்கிடுவர்விடுநீ**
**ஆசையோடும் அரனடியார் அடியாரை அடைந்திட்(டு)**
**அவர்கருமம் உன்கரும மாகச் செய்து**
**கூசிமொழிந் தருள்ஞானக் குறியில் நின்று**
**கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே. 322**

*சிவஞான நெறிநிற்கும் அன்பர் இறைவனது திருவடிக் கமலங்களைச் சேரவொட்டாமல் மறதி விளக்கும் மும்மலங்களையும் பற்றறக் களைந்து கடவுளன பரோடு நெருங்கியப் பயின்று அவர்களது*

திருவேடங்களையும் திருக்கோயில் களையுஞ் சிவனேனவே கைதொழுது போற்றிச் சிவானந்தத் தாலாடிப் பாடி உலகத்தில் யாவருக்கும் எளியோமல் லேம் மேலாய பதவியை யடைந்தோமென்ற மகிழ்ச்சியிடன் கடவுளின் அடியார்க்கடியாராய்த் திரிந்திடுர். அடியார்க் கன்பில்லாதவர் ஈசனுக்கு அன்பில்லாதவ ராவர். அவர் எவ்வுயுயிருக்கும் அன்பில்லாதவரும் ஆவர் ஆகவே தமக்கும் அன்பில்லாதவரே. அறிவிலாப்பிணங்களை யொத்த அவர்களைப் பற்றிப் பேசுவதால் யாது பயன்? அவர்களோடு நாம் இணங்கினால், அவர்கள் பிறப்பு இறப்புக்குக் காரணமாய் நம்மை அவற்றிலீடுபடச் செய்வர். ஆதலால் அவரது நட்பைக் கைவிட்டுக் கடவுளடியாரை யடைந்து அவர் பணியை நம் பணியாகச் செய்து அவரது உயர்வினையுணர்த்தும் நயமொழிகளைப் பேசி, இறைவனது திருவரு ளுணர்த்தம் வழியில் நின்று அவனை வழிபடுதலாற் பெறும் பேரின்பத்தாற் கைகொட்டிக் கூத்தாடித் திரிதலே நன்று.

## மூன்றாம் அதிகரணம்

அறிவாரியான் தனையறிய ஆக்கை யாக்கி
அங்கங்கே உயிர்க்குயிராய் அறிவுகொடுத்தருளால்
செறிதலினால் திருவேடம் சிவனுருவே யாகும்
சிவோகம்பா விக்கும் அத்தாற் சிவனு மாவர்
குறியதனால் இதயத்தே அரனைக் கூடும்
கொள்கையினால் அரனாவர் குறியொடுதாம் அழியும்
நெறியதனால் சிவமேயாய் நின்றடு ரென்றால்
நேசத்தால் தொழுதிடுநீ பாசத்தார் விடவே. 323

உயிர்களால் அறியப்படாத முதல்வன் அவைகள்

தன்னை யறியும்பொருட்டு அன்பர்க்குத் தன் வேடத்தைக் கொடுத்து அவர்களுடைய உயிர்க்குயிராய் நின்று அவர்களுக்குமெய்யறிவு நல்கி அவர்களுடன் கலந்திருத்தலாலே அவர்களுடைய திருவேடம் சிவபெருமானது திருவடிவமேயாம். அவர்கள் சிவோகம்பாவினை செய்தலால், அவர்கள் சிவனு மாவர். இருதயத்திலே அவர்கள் சிவனை பூசித்தலினாலும் அவர்கள் சிவ நிலையினராவர். தன்னுணர்ச்சி கெட்டு முதல்வன் றன்மைபெற்று நிற்றலாற் சிவமேயாவர்.பாசப்பற் றுடையாரது தொடர்பு நீங்குதற் பொருட்டு, அவ்வன்பரையே தொழுதல் வேண்டும்.

**திருக்கோயி லுள்ளிருக்கும் திருமேனி தன்னைச்**
**சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவன் அங்கே**
**உருக்கோலி மந்திரத்தா வேநினையும் அவர்க்கும்**
**உளனேங்கும் இலன்இங்கும் உளனென்பார்க்கும்**
**இருப்பாய வடிவாகி இந்தனத்தின் எரிபோல்**
**மந்திரத்தின் வந்துதிப்பன் இருஞ்சுரபிக்கெங்கும்**
**உருக்காண வொண்ணுத பால்முலைப்பால் விம்மி**
**ஒழுகுவது போல்வெளிப்பட்ட ருளுவன்அன் பர்க்கே .**

திருக்கோயிலி னுள்ளிருக்கும் திருவடிவங்களைச் சிவனெனவே எண்ணி வழிபடுஞ்சார்பு நெறியினர்க்குச் சிவன் அங்கே வெளிப்படாது வீற்றிருந்து, அருள் செய்வன் மந்திரத்தினாலே இறைவன் திருவுருக் கொண்டான் என்று எண்ணி வழிபடும் பூசனை யாளர்க்கும், அகத்துறையும் முதல்வன் புறத்தே திரு வடிவத்திலும் வீற்றிருந்து பூசை கொள்கின்றானெனக் கருதும் ஒருமையாளர்க்கும் விறகினைக்கடைந்த காலத்தோன்றும் தீயைப்போல அவ்வப்போது தோன்றி யருள்புரிவன். ஓரிடத்தைக் குறியாது எங்கும் நிறைந்த

இறைவனை அன்பால் வழிபடும் ஞானிகட்கு (அறிவர்க்கு) இளங்கன்றிற்கு ஆவின் மடியிற் சுரக்கும் பால்போல இறைவன் வெளிபட்டு அருள் செய்வன்.

**ஞானயோ கக்கிரியா சரியை நான்கும்**
**நாதன்தன் பணிஞானி நாலினுக்கும் உரியன்**
**ஊனமிலா யோகமுதல் மூன்றினுக்கும் உரியன்**
**யோககிரி யாவான் தன் ஒண்கிரியை யாதி**
**ஆனஇரண் டினுக்குரியன் சரியையினில் நின்றோன்**
**அச்சரியைக் கேஉரியன் ஆதலினால் யார்க்கும்**
**ஈனமிலா ஞானகுரு வேகுருவும் இவனே**
**ஈசனின் தான்என்றும் இறைஞ்சி ஏத்தே. 325**

சார்பு, செயல்,ஒருமை,அறிவு என்னும் நான்கும் இறைவன் பணியாகும் ஞானி நான்கிற்குமுரியன். யோகி மூன்றினுக்கும், கிரியையாளன் இரண்டினுக்கும், சரியையாளன் சார்பு ஒன்றிற்கும் உரியர். யாவர்க்கும் அறிவனாய ஆசிரியனே தலைவனாவான். அவனையே இறைவனாக வழிபடுக.

**மந்திரத்தால் மருந்துகளால் வாய்த்தவியோ கத்தால்**
**மணிஇரத குளிகையினால் மற்றும் மற்றும்**
**தந்திரத்தே சொன்னமுறை செய்ய வேத**
**சகலகலை ஞானங்கள் திரிகால ஞானம்**
**அந்தமிலா அணிமாதி ஞானங்க ளெல்லாம்**
**அடைந்திடும்ஆ சான் அருளால் அடிசேர் ஞானம்**
**வந்திடுமற் றொன்றாலும் வாராத தாகும்**
**மற்றவையும் அவனருளால் மருவு மன்றே. 326**

மந்திரங்களாலும், மருந்தாலும், கைவந்தயோகத்தினாலும், இரதகுளிகைகளாலும், இன்னும் அறிவு

நூல்களிலே சொன்ன முறைகளாலும், அருள்நூல், கலைநூல் முதலிய நூல் ஞானமும், முக்கால் அறிவும், எண்பெருஞ் சித்தித்தேர்வும், எய்துதல்கூடும். இவை ஆசிரியனுதவி யின்றியுங் கைவரும். இறைவனது திருவடி சேர்தற்குரிய உயர் ஞானமானது அறிவாசியனுதவியின்றி எய்த முடியாது. மற்றொன்றாலும் அது வாராது. திருவடி ஞானம் பெற்றார்க்கு இறையருளாற் பிறஞானங்களும் எளிதாகக் கைகூடும்.

**பரம்பிரமம் இவனென்றும் பரசிவன்தா னென்றும்**
**பரஞானம் இவனென்றும் பராபரன்தா னென்றும்**
**அரன்தருஞ்சீர் நிலையெல்லாம் இவனே யென்றும்**
**அருட்குருவை வழிபடவே அவனிவன் தா னாயே**
**இரங்கியவா ரணம்ஆமை மீன் அண்டம் சினையை**
**இயல்பினொடும் பாசித்தும் நினைத்தும் பார்த்தும்**
**பரிந்திவைதா மாக்குமாபோல் சிவமே யாக்கும்**
**பரிசித்தும் சிந்தித்தும் பார்த்தும் தானே. 327**

அருட்குருவே எப்பொருளுங் கடந்துநிற்கும் மேலான சிவத்தின் வடிவம், ஐந்தொழிலியற்றும் முதல்வனின் வடிவம், உயர் ஞான வடிவம் முதலிய இறைவனது திருமேனிகளும் ஆவனென்று கருதி வழிபடின், இறைவன் அவனிடமாக நின்று, கோழி, ஆமை, மீன் என்பன முறையே தம் முட்டையைத் தொட்டும் நினைந்தும், பார்த்தும் தம்தன்மையாகச் செய்யுமாறுபோல, உயிர்கட்கு ஏற்றவாறு தொட்டும், நினைந்தும் பார்த்தும் அவைகளைச் சிவமாம்தன்மைப் பெருவாழ்வுடையவனாகச் செய்வனென அறிக.

அருணந்திதேவ நாயனார் அருளிய

சிவஞான சித்தியார் சுபக்கம் முற்றிற்று.

--------

உ

சிவமயம்

# அருணந்தி சிவாசாரியார் தோத்திரம்

---------

முப்பொருளின் ஈரியல்பும் ஓரியல்பா நுவலாது
முறைவெவ் வேறாய்ச்
செப்புசிவா கமங்களின்றன பொருளொருமை பெறவுணர்த்து
திறமுன் னூலை
ஒப்பவிரி யாப்பதனாற் சித்தியெனும் வழிநூலாய்
ஒளிர்பிற் காலத்(து)
இப்புவியோர் தெளிந்துய்ய மொழிந்த அரு ணந்திசிவன்
இணைத்தாள் போற்றி.

